


# பேராசிரியரும் தமிழும்

## ஒரு திறனாய்வு

முதுகலை மாணாக்கர்கள் (2018-2020)

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

EBOOK

மின்நூல்

ந சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்
ந சுப்புரெட்டியாரின் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி
தாயுமானவர் குறித்து ந சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்
ந சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்
ந சுப்புரெட்டியாரின் *'பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு'* குறித்த பார்வை




**ந சுப்பு ரெட்டியார்100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-945046-4-1

ஆய்வேட்டின் நூல்வடிவு

# பேராசிரியரும் தமிழும்

## ஒரு திறனாய்வு

முதுகலை மாணாக்கர்கள் (2018-2020)
**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூல்களை ஆதாரமாகக் கொண்டு படைக்கப்பெற்ற ஆய்வேடுகள்:

ந சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்
ந சுப்புரெட்டியாரின் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி
தாயுமானவர் குறித்து ந சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்
ந சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்
ந சுப்புரெட்டியாரின் ‘*பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு*’ குறித்த பார்வை

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-945046-4-1

*eBOOK ~ மின் நூல்*



# பேராசிரியரும் தமிழும்

## ஒரு திறனாய்வு

காவேரி மகளிர் கல்லூரியின்
முதுகலை மாணாக்கர்களின் (2018–2020)
ஆய்வேட்டின் தொகுப்பு

<u>தொகுப்பு:</u>
**நூற்றாண்டுக் குழு**




**ந சுப்பு ரெட்டியார்100**

*Centenary Committee Publications*

# அன்புப்படையல்




**17 Apl 1917 :: 25 Apl 1989**

**[பேராசிரியரின் கெழுதகை நண்பர்]**

# அணிந்துரை

தமிழ் ஆய்வுலகில் பேராசிரியர் முனைவர் ந சுப்புரெட்டியார் அவர்கள் மிகவும் மதிக்கத்தக்க ஆளுமையாக விளங்குகிறார். எழுத்தாளர், பேராசிரியர், திறனாய்வாளர் என பன்முக ஆளுமை கொண்ட இவரால் எழுதப்பட்ட 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கி சிறப்பித்துள்ளது. நூற்றாண்டு விழா கண்ட பேராசிரியரின் படைப்புகளை திருச்சி, காவேரி மகளிர் கல்லூரி முதுகலைத் தமிழ் பயிலும் மாணவியர் ஆய்வு செய்திட வாய்ப்பு கிடைத்திருப்பது பெறும்பேறு.

**'ந சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை — காமாட்சி அம்மாள் உதவித் தொகை**யினை 5 மாணவியர்க்கு ஆய்வு செய்யும் பொருட்டு வழங்கி உதவியமை ஆய்வு சிறப்புற அமைய பேருதவியாக அமைந்தது. அவ்வாறு ஆய்வு செய்த மாணவியரின் ஆய்வேடுகள் நூலாக்கம் பெற்றிருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

***'ந சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்'*** என்ற தலைப்பில் முனைவர் ச இராமலட்சுமி அவர்களின் வழிகாட்டலில் செல்வி பெ சுஸ்மிதா ஆய்வு மேற்கொண்டுள்ளார். சங்க இலக்கியப் புலவர்கள், ஆழ்வார்கள், சான்றோர்கள் ஆகியோர் வேங்கடத்தை எவ்வாறு அணுகியுள்ளனர் என்பதை ந சுப்புரெட்டியார் பார்வையில் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளார்.

***'ந சுப்புரெட்டியார் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி'*** என்ற தலைப்பில் முனைவர் தி மணிமொழி அவர்களின் வழிகாட்டலில் செல்வி சி ஸ்ரீவித்யா ஆய்வு மேற்கொண்டுள்ளார். கவிமணியின் தமிழ்ப்பணி, அவர் குறிப்பட்ட பண்பாட்டுக்கூறுகள், அவர் வெளிப்படுத்தியுள்ள படிமங்கள் ஆகியவற்றை சிறந்த முறையில் தொகுத்துத் தந்துள்ளார்,

***'தாயுமானவர் குறித்து சுப்புரெட்டியார் சிந்தனைகள்'*** என்ற தலைப்பில் முனைவர் அ இரா கோமதி அவர்களின் வழிகாட்டலில் செல்வி செ சுவாதி ஆய்வு மேற்கொண்டுள்ளார், தாயுமானவரின் வாழ்க்கை வரலாற்றை விவரித்து, அவரது ஆன்மீகப் பார்வை மற்றும் தத்துவ நோக்கு குறித்த ந சுப்புரெட்டியாரின் சிந்தனைகளைத் தொகுத்து இவர் மேற்கொண்டிருக்கும் ஆய்வு சிறப்புக்குரியதாக உள்ளது.

***'ந சுப்புரெட்டியார் காட்டும் விட்டுசித்தன் விரித்த தமிழ்'*** என்ற தலைப்பில் முனைவர் ந சுபா அவர்களின் வழிகாட்டுதலில் செல்வி உ பிரியங்கா ஆய்வு மேற்கொண்டுள்ளார். ந சுப்புரெட்டியார் பெரியாழ்வாரையம், கண்ணனையும் எவ்வாறு சித்தரித்துள்ளார் என சிறப்பாகக் கூறியுள்ளார். மேலும் ந சுப்புரெட்டியாரின் ஆய்வுப்போக்கு எவ்வாறு அமைந்துள்ளது எனக் குறிப்பிட்டிருப்பது பாராட்டும்படியாக உள்ளது.

***'ந சுப்புரெட்டியாரின் பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு குறித்த பார்வை'*** என்னும் ஆய்வினை முனைவர் மு ஜெயலட்சுமி அவர்களின் வழிகாட்டலில் செல்வி கி தாரணி ஆய்வு மேற்கொண்டுள்ளார். கதை மற்றும் கருத்து குறித்து தெளிவுபட விளக்கியுள்ளார். மேலும், ந சுப்புரெட்டியார் கையாண்ட நூல்கள் குறித்தும், பெண்ணுரிமை குறித்தும் விவரித்திருப்பது சிறப்பானது.

மாணவியரின் ஆய்வு வளம்பெற வேண்டும் என்ற நோக்கில் உதவித்தொகை வழங்கிய அறக்கட்டளையினருக்கு காவேரி மகளிர் கல்லூரி தமிழாய்வுத்துறை என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டள்ளது. அறக்கட்டளையின் நோக்கம் முழுமையாக நிறைவுபெறும் வகையில் ஆய்வுக் கட்டுரைகள் சிறப்பாக அமைந்திருப்பது மிகவும் மன மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது.

**பேராசிரியர் முனைவர் ச இராமலட்சுமி**
தலைவர் -- தமிழாய்வுத்துறை
காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி — 620 018



# பதிப்புரை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று, ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர். பல பல்கலைக்கழகங்களில் சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி, நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர். பல ஆய்வாளர்களை உருவாக்கியவர். வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர். **136 [135 +1]** நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015 – 2016) 108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூற்றாண்டில் (2015 – 2016) நூற்றாண்டுக்குழு தமிழகமெங்கும் நடத்திய 108 நிகழ்வுகள் அகில இந்திய சாதனையாக அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. நூற்றாண்டில் பேராசிரியரின் தமிழ்த்திறத்தையும், அறிவுநுட்பத்தையும் வெளிக்கொணரும் பொருட்டு பன்னிரெண்டு நூட்கள் வெளியிட்டப்பெற்றன. அவரது 120 நூல்கள், இந்திய அரசு நல்கிய **ISBN** எண்களுடன், மின் நூல்களாக மாற்றுப்பெற்று https://archive.org/details/@centenary1916nsr2016 என்ற இணைதளத்தில் அனைவரும் பதிவிறக்கம் செய்யும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன.

பேராசிரியரின் படைப்பான "***கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் – ஒரு மதிப்பீடு***" எனும் நூலை பேராசிரியரின் நூற்றாண்டிற்குப் பின்பும் (102வது), இராமாநுஜரின் ஆயிரமாண்டிற்குப் பின்பும் (1002வது) நூற்றாண்டுக்குழு 2018ல் வெளியிட்டது.

பேராசிரியரின் நூட்களை அடித்தளமாக்கொண்டு சுமார் 25 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் (சென்னைப் பல்கலைக்கழகம், மதுரை காமராஜ்

பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், அழகப்பா பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகம்) ஆய்வு மேற்கொண்டு வருகின்றனர்.

மூன்று முனைவர் பட்ட ஆய்வாளர்கள் ஆய்வு மேற்கொண்டு, சென்னை பல்கலைக் கழகம், மதுரை காமராஜ் பல்கலைக் கழகம் மற்றும் பாரதியார் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் ஆய்வேடு சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். ஐந்து முதுகலை பட்ட மாணாக்கர்கள் (திராவிடப் பல்கலைக் கழகம் : 2017 – 2019) ஆய்வேடு சமர்ப்பித்துள்ளனர். ஐந்து ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் (தமிழ்ப் பல்கலைக் கழகம் : 2018 – 2019) ஆய்வேடு சமர்ப்பித்து ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

தமிழ்த்துறை, காவேரி மகளிர் கல்லூரி (பாரதிதாசன் பல்கலைக் கழகம்) பரிந்துரைத்த ஐந்து முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு **ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை NSR100 Kamatchi Ammal Fellowship** வழங்கியது. அதன்கீழ், பேராசிரியரின் ஏதேனும் ஒரு நூலை ஆய்வுக்குரிய மையக்கருத்தாக தேர்ந்தெடுத்து திறனாய்வு செய்யும் முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப் பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

திறனாய்வு செய்த மாணாக்கர்கள்:

பெ சுஸ்மிதா (P 18100423)
சி ஸ்ரீவித்யா (P 18100422)
செ சுவாதி (P 18100424)
உ பிரியங்கா (P 18100420)
கி தாரணி (P 18100416)

ஆய்வேட்டின் தலைப்புகள்:

**ந சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்**
**ந சுப்புரெட்டியாரின் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி**
**தாயுமானவர் குறித்து ந சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்**
**ந சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்**
**ந சுப்புரெட்டியாரின் ‘*பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு*’ குறித்த பார்வை**

தெரிவு செய்யப்பெற்ற பேராசிரியரின் நூல்கள்:

***வடவேங்கடமும் திருவேங்கடமும்***
https://archive.org/details/vadavenkatamumthiruvenkatamum
***கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு***
https://archive.org/details/kavimaniyinthamizhpaniorumathipeedu
***தாயுமானவர்***
https://archive.org/details/Thayumanavar
***விட்டுச்சித்தன் விரித்த தமிழ்***
https://archive.org/details/vittusithanvirithatamizh
***பாண்டியன் பரிசு - ஒரு மதிப்பீடு***
https://archive.org/details/paandiyanparisuorumathipeedu

இவ்வாறு சமர்ப்பிக்கப்பெற்ற ஆய்வேடுகள் தொகுக்கப்பெற்று

**பேராசிரியரும் தமிழும்**
ஒரு திறனாய்வு

**முதுகலைப்பட்ட மாணாக்கர்கள் (2018 – 2020)**
**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

எனும் நூலாக வெளியிடப் பெறுகின்றது. நூலின் ஒரு படி ஒவ்வொரு மாணாக்கர்கட்கும், 5 படிகள் கல்லூரிக்கும் வழங்கப்பெறுகின்றன.

**நூற்றாண்டுக்குழு**

# பொருளடக்கம்

## காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

(பாரதிதாசன் பல்கலைக் கழகம்)

முதுகலை பட்ட மாணாக்கர்களின் (2018-2020) ஆய்வேடு

Compilation of Dissertations submitted by the Recipients of **'NSR100 Kamatchi Ammal Fellowship'** provided by **Na Subbu Reddiar 100 Educational Trust** in the Cauvery College for Women (Autonomous), Tiruchirappalli, Tamil Nadu


| வ.எண் | மாணாக்கர், ஆய்வேடு, பேராசிரியரின் நூல் |
| --- | --- |
| 01 | பெ சுஸ்மிதா (P 18100423)<br>**ந சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்**<br>*வடவேங்கடமும் திருவேங்கடமும்* |
| 02 | சி ஸ்ரீவித்யா (P 18100422)<br>**ந சுப்புரெட்டியாரின் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி**<br>*கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு* |
| 03 | செ சுவாதி (P 18100424)<br>**தாயுமானவர் குறித்து ந சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்**<br>*தாயுமானவர்* |
| 04 | உ பிரியங்கா (P 18100420)<br>**ந சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்**<br>*விட்டுச்சித்தன் விரித்த தமிழ்* |
| 05 | கி தாரணி (P 18100416)<br>**ந சுப்புரெட்டியாரின் '*பாண்டின் பரிசு ஒரு மதிப்பீடு*' குறித்த பார்வை**<br>*பாண்டியன் பரிசு – ஒரு மதிப்பீடு* |



# வடவேங்கடமும் திருவேங்கடமும்

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**





1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

# ந.சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முதுகலைத் தமிழ்
இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

**பெ.சுஸ்மிதா**

**பதிவு எண் : P18100423**

**நெறியாளர்**

**பேரா.முனைவர் ச.இராமலட்சுமி, எம்.எ., எம்.பில்., டி.ஜி.டி., பி.எச்.டி.,**

**துறைத்தலைவர்**

**தமிழாய்வுத்துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**






**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் (மூன்றாம் சுற்று)**

**A தகுதி (CGPA 3.41/4) பெற்றது**

**திருச்சிராப்பள்ளி – 620 018**


**மார்ச் - 2020**

# நன்றியுரை

‘ந.சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்’ என்ற தலைப்பில் இத்திட்டக்கட்டுரை எழுதவாய்ப்பளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழ் இலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி ரெட்டி கல்வி அறக்கட்டளையினருக்கும், எம்மை வழிநடத்தும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ.சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வுக் கட்டுரை சிறப்பாக அமையும் நோக்கில் ஆய்வு தொடர்பான கருத்துக்களை வழங்கி என்னை வழிநடத்தி கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர், துணைமுதல்வர், தமிழாய்வுத்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் ச.இராமலட்சுமி அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்து, காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கு எம் நெஞ்சார்ந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வுக்கு உதவி ஊக்கம் அளித்த தமிழாய்வுத்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றி.

என் பாட்டி இரா. சின்னப்பொண்ணு, தாத்தா கி.இராமசாமி, பெற்றோர் ம.பெரியசாமி, பெ.செல்வராணி, உடன்பிறப்புகள் பெ.நவீன்குமார், பெ.சர்மிதா ஆகியோருக்கு நன்றி.

ஆய்வுக்கு தேவையான நூல்களை தந்து உதவிய கல்லூரி நூலகத்திற்கும், எம் துறை நூலகத்திற்கும், துணை நின்ற தோழியருக்கும் நன்றி.

**ஆய்வாளர் கையொப்பம்**

# பொருளடக்கம்


| இயல் எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| | முன்னுரை | |
| 1 | நூல் அமைப்பு | |
| 2 | சங்க இலக்கியம் காட்டும் வேங்கடம் | |
| 3 | ஆழ்வார்கள் பார்வையில் வேங்கடம் | |
| 4 | சான்றோர்கள் நோக்கில் வேங்கடம் | |
| | முடிவுரை | |
| | துணைநூற்பட்டியல் | |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| கு.எண் | - | குறள் எண் |
| ப. எ | - | பக்க எண் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. எண் | - | பாடல் எண் |
| பா. அடி | - | பாடல் அடி |
| நூற். எண் | - | நூற்பா எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

மாலவன் குன்றம் என்று கூறப்படும் வேங்கடமாமலை தமிழகத்தின் வடஎல்லையாகக் கூறப்படுகிறது. இதில் பலகருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. அவற்றை விளக்கி எது திருவேங்கடம் என்பதனை ஆராய்ந்து சான்றுடன் உரைப்பதோடு திருவேங்கடம் குறித்த ஆழ்வார்களது அருளிச்செயல்கள், வைணவச் சான்றோர்கள் திருவேங்கடம் பற்றிப் பாடிய பாடல்கள் ஆகியவற்றைத் தொகுத்து ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதியுள்ள ‘வடவேங்கடமும் திருவேங்கடமும்’ என்ற நூலை ஆய்வுசெய்து சுப்புரெட்டியார் பார்வையில் திருவேங்கடம் எங்ஙனம் வெளிப்படுகிறது என்பதை எடுத்துரைக்க விழைவதே இவ் ஆய்வு.

**ஆய்வுத் தலைப்பு**

‘ந.சுப்புரெட்டியார் பார்வையில் வேங்கடம்’ என்பது இவ்வாய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வுநோக்கம்**

ந.சுப்புரெட்டியாரது வடவேங்கடமும் திருவேங்கடமும் என்னும் நூல் வாயிலாக திருவேங்கடத்தைப் பற்றிய சுப்புரெட்டியாரின் கருத்துக்களை ஆய்வதே இவ்ஆய்வின் நோக்கம்.

**ஆய்வுகருதுகோள்**

திருவேங்கடமும் வடவேங்கடமும் வேறுபட்டவை என்பதைச் சான்றாதாரங்களோடு ந.சுப்புரெட்டியார் நிறுவியுள்ளார் என்பதே ஆய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வுஎல்லை**

ந.சுப்புரெட்டியாரின் வடவேங்கடமும் திருவேங்கடமும் என்னும் நூல் இவ்வாய்வு எல்லையாக அமைகின்றது.

**ஆய்வுமுறை**

சங்க இலக்கியச் சான்றுகள் வைணவ சான்றோர்கள், கம்பர், ஆழ்வார்கள் பாடல் ஆகியவற்றைப் பகுத்துக் காணும் பகுப்பாய்வும், விளக்கமுறை ஆய்வும் ஆய்வு முறையாக அமைகின்றது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இந்தஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

அவை :

இயல் 1 : நூல் அமைப்பு

இயல் 2 : சங்க இலக்கியம் காட்டும் வேங்கடம்

இயல் 3 : ஆழ்வார்கள் பார்வையில் வேங்கடம்

இயல் 4 : சான்றோர்கள் நோக்கில் வேங்கடம்

என நான்கு இயல்களாக அமைகின்றன.

**இயல் ஒன்று**

நூல் அமைப்பு, சிறப்புப்பாயிரம், அணிந்துரை, ஆசிரியர் குறிப்பு ஆகிய செய்திகள் முதல் இயலில் இடம்பெற்றுள்ளன.

**இயல் இரண்டு**

சங்க இலக்கியச்சான்றுகளின் மூலம் வடவேங்கடம் யாது, தற்போதுள்ள திருப்பதிக்கும் சங்க இலக்கிய வேங்கடமலைக்கும் உள்ள வேறுபாடு ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

ஆழ்வார்கள் அருளிச்செயல் வாயிலாகவேங்கடம் குறித்தசெய்திகள் இடம்பெற்றுள்ளன.

**இயல் நான்கு**

வைணவச் சான்றோர்கள் திருவேங்கடம் பற்றிப் பாடியுள்ள பாடல்கள் பற்றி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**முதன்மைஆதாரம்**

இவ்ஆய்விற்கு ந.சுப்புரெட்டியார் அவர்களின் வடவேங்கடமும் திருவேங்கடமும் என்ற நூல் முதன்மை ஆதாரமாக அமைகிறது.

**துணைமைஆதாரங்கள்**

திருவேங்கடம் குறித்த செய்திகள் இடம்பெறும் இலக்கியங்கள் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

## இயல் 1

## நூலமைப்பு

ந.சுப்புரெட்டியார் அவர்கள் தனது நூலைக்குறித்த அறிமுகத்துடன் இந்நூலைத்தொடங்குகிறார். தாயறியாத சூலில்லை என்பதற்கேற்ப தனது படைப்பினைப்பற்றி அவரே பேசுவதாக இந்த நூல்முகம் அமைகிறது. இதில்‘துன்பமும் இன்பமுமாகிய செய்வினையால் உலகங்களுமாய்’என்ற நம்மாழ்வாரின் பாடலை கூறித் தொடங்குகின்றார். 1978 ஜனவரி 14-ல் சென்னையில் வாழ்ந்த காலத்தில் திருவேங்கடத்தின் மீது முகிழ்த்த கருத்துக்களை ‘சப்த கிரி’ என்னும் இதழில் வெளியான தகவல்களைத் தொகுத்து ‘‘வடவேங்கடமும் திருவேங்கடமும்’’ என்ற தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளது.

கிருஷ்ணபகவான் அர்ஜீனனுக்கு அருளிய உபதேசத்தினை வியாசர் பதினெட்டு இயல்களில் அமைத்தது போல இவரும் பதினெட்டுக் கட்டுரைகளாக தமது நூலில் அமைத்திருப்பது பொருத்தமாகவும் சிறப்பாகவும் உள்ளது .

இப்பதினெட்டு கட்டுரைகளில் முதல் நான்கு கட்டுரைகளில் வடவேங்கடத்தைப்பற்றிக் கூறியுள்ளார் . இவ்வேங்கடம் வேறு திருவேங்கடம் வேறு என்று சங்க இலக்கியச் சான்றுகளின் மூலம் சிறப்பாக எடுத்துக்காட்டி ஏனைய கட்டுரைகளில் திருவேங்கடத்தையும் திருவேங்கடவனைப்பற்றியும் கூறியுள்ளார்.

நூல்முகம் என்ற தலைப்பில் தனது நூலைப்பற்றி எழுதியுள்ள ஆசிரியர், நூலாக்கத்திற்கு உதவியோருக்கு நன்றிகூறும் முகமாக ஒவ்வொருவரையும் சிறப்பித்து எழுதியுள்ளார்.

இந்நூலிற்கு சிறப்புப்பாயிரம் வழங்கிய இவரது மாணவரான டாக்டர்.அர.சிங்காரவடிவேலனைப் பற்றி சிறப்பித்துக் கூறியுள்ளார். சிங்கார வேலன் 1960-1961 இல் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தன்னிடம் மாணவராக சேர்ந்த ஓர் ஆண்டு காலத்திலேயே இவரது அறிவாற்றலையும் விரைந்து கவி பாடும் தன்மையினையும் தான் உணர்ந்துக்கொண்டதாகவும் , இந்நூலுக்குத் தனது

மாணவர் எழுதிய சிறப்புபாயிரமாலையால் தம் நூலுக்கு ஆன்மத்தொடர்பு புதுப்பிக்கப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

“குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை கலை பயில் தெளிவு கலை கட்டுரை வன்மை பெற்றவர்.”

முனைவர் பட்டம் பெற்று பேராசிரியராகப் பணியாற்றிய சிங்காரவேலன் அவர்களுக்கு இதழாசிரியப் பயிற்சியும் உண்டு. கவிபாடும் பண்பினால் தமிழ்நாடு, பம்பாய் மற்றும் டெல்லி முதலிய பிற இடங்களிலும் ஏறதாழ 500 கவியரங்குகளில் பங்கு கொண்டு தமிழப் பணியாற்றியவர். இத்தகைய சிறப்புகளைப் பெற்ற தமது மாணவன் சிங்காரவடிவேலனின் சிறப்புப் பாயிரமாலை, நன்னுலார் கூறும் சிறப்பு பாயிர இலக்கணப்படி ‘மாடக்குச் சித்திரமும் மாநகர்க்கு கோபுரம்போல’’ அமைந்து தனது நூலுக்குப் பொலிவு தருவதாகக் கூறியுள்ளார். தனது மாணவன் நீங்காத புகழும், நிறைந்த செல்வமும், நீண்ட ஆயுளும் பெற்றுத்திகழுமாறு தனது நன்றி கலந்த ஆசியினை கூறியுள்ளார்.

1950-ல் ந. சுப்புரெட்டியார் காரைக்குடி கம்பன் விழாவில் பங்கேற்கும் வாய்ப்புக்கிட்டியது. அப்போது சொ.முரு என்பவருடன் பழக்கம் ஏற்பட்டது. சொ.முரு அவர்களுக்குப் பெரியாரின் தொடர்பு ஏற்பட்ட பிறகு அவரது சீர்திருத்தக் கொள்கைகள் ஆட்கொள்ள பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் பெண்களுக்கு மறுவாழ்வு அளிப்பதில் பெரிதும் ஈடுபாடு கொண்டார். பின்னர் பெண்களுக்கு உதவி செய்யும் நோக்கில் மகளிர் இல்லம் அமைத்தார்.

சில ஆண்டுகளில் சமூகம் இவ்வில்லத்திற்கு ஊக்கம் காட்டியதினால் அதனை மாண்டிசோரி பள்ளியாக மாற்றி சிறப்பாக பணியாற்றினார். இவரது வாழ்நாளின் இறுதியில் சில ஆண்டுகள் இலக்கியப் பணியிலேயே ஆழ்ந்திருந்தார். இவர் பதிப்பித்த இராமகாதையே இதற்கு சான்றாகும். இவர் கண்ட சங்கங்கள் தன வைசிய வாலிபர் சங்கம் மகளிர் இல்லம் முதலியவையாகும் ஆசிரியராக இருந்தபொழுது நடத்திய இதழ்கள் ‘தன வைசிய ஊழியன்’ ‘குமரன்’ ஆகியவையாகும். சமூகத்தொண்டிற்குச் சங்கங்களும் இதழ்களும் இன்றியமையாதன என்பதை நடைமுறை வாழ்வில் நன்கு அறிந்தவர். இத்தகைய

சான்றோரிடம் ஆறு ஆண்டுகள் நெருங்கி பழகியதால் பல நற்பண்புகள் தனக்கு கிடைக்கப்பெற்றதாக தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**சிறப்புப்பாயிரம்**

சிறப்புப்பாயிரம் என்பது ஒருகுறிப்பிட்ட நூலுக்கு மட்டும் சிறப்பாக பொருந்தும் விடயங்களை உள்ளடக்கிய ஒரு பாயிர வகை ஆகும். முடிவுரை அல்லது அணிந்துரை போன்று சிறப்புப்பாயிரத்தை நூலாசிரியன் தவிர்த்து வேறொருவர் எழுதுவதே மரபு . இளம்பூரணர் தனது தொல்காப்பிய உரையில் , நூலாசிரியரின் ஆசிரியர் , நூலாசிரியருடன் படித்தவர், நூலாசிரியரின் மாணவர் என மூன்று வகையினர் சிறப்புப்பாயிரம் செய்யத் தகுதியுடையவர்கள் என்கிறார். நன்னூல், அந்நூலுக்கு உரைசெய்தவர்களும் சிறப்புப்பாயிரம் எழுதலாம் என நான்கு வகையாகக் கூறுகின்றது.

வடவேங்கடமும் திருவேங்கடமும் எனும் இந்நூலிற்கு, சிறப்புப் பாயிரத்தினை இந்நூலாசிரியரின் மாணவர் அர. சிங்காரவடிவேலன் எழுதியுள்ளார்.

இப்பாயிரத்தில் கூறுவதாவது,

**“ஆக்கியோன் பெயரே வழியே எல்லை**
**நூல் பெயர் யாப்பே நுதலிய பொருளே**
**கேட்போர் பயனோடாயெண் பொருளும்**
**வாய்ப்பர் காட்டல் பாயிரத்திறல்பே”**[1]

ந.சுப்புரெட்டியார் எழுபத்தாறுவயதிலும் எதையேனும் எழுதிக் கொண்டும் படித்துக் கொண்டும் ஒப்பாய்வும் உறழாய்வும் செய்துஉழைத்துக் கொண்டு இருப்பவர். இவரதுபெயரை சொன்னாலே சுறுசுறுப்பும் உழைப்பும் நமக்குதோன்றும்.

காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஐம்பதுக்கும் அறுபதுக்கும் இடைபட்ட ஆண்டில், பத்துஆண்டுகள் பணிபுரிந்தார். திருமாலின் திருவருளால் தமிழைச் சேர்த்து அறிவுலகப் பல்துறையில் நூல்களை இயற்றினார். தன் பலத்தை நம்பி செயல்பட்டவர்.

கறுத்தமேனியும் சிவந்த கண்களையும் தலைமுடி வெளுத்தும் ஒட்டிவைத்தது போன்ற மீசையும் உரைகளும் தேன்மூழ்கிநரைத்திருக்கும். இவர் பரிசாகக் கிடைத்ததற்கு வேங்கடத்தை வணங்குவோம்.

இவருக்குத் தாய்மொழி தெலுங்காக இருப்பினும் முதல் மொழியான தமிழ் மொழியில் மேதையானவர். உலகம் எங்கும் திகழும் புலமை உடையவர். இவரது எண்ணம், மொழி, செயல்கள் அனைத்தும் பெருமாளே என்று இலக்கியத்தில் 'ஆழங்கால்' பாடுவதால் இவரது நூல்கள் சிறப்புடையதாகவும் சுவைபடவும் இருக்கும் என்றும் இந்நூலைப் படிப்பவர்களுக்கு வைணவத்தில் தெளிவும் செம்மையான வாழ்வும் திருமாலின் அருளும் கிடைக்கும். இவரது மாணவராய் பிறந்தது என்பேறு என்றும், விண்ணைத் தொடுமளவு உள்ள வேங்கடமும் அதில் தோன்றும் விரி சுடரும் போல ஆசிரியரது நூலை படிப்போருக்கும் கேட்போருக்கும் அருள் கிடைக்குமாறு வாழ்த்துகிறார்

**அணிந்துரை**

அணிந்துரை என்பது ஒரு நூலை அல்லது வேறு இலக்கிய ஆக்கங்களை அறிமுகபடுத்தி ஆக்குனர் அல்லாத இன்னொருவர் கொடுக்கும் அறிமுகமாகும் . நன்னூலில், ஒரு நூல் சிறப்புடையதாக இருந்தாலும் அதற்கோர் அணிந்துரை அவசியமானது என்று அணிந்துரையின் இன்றியமையாமையை விளக்கியுள்ளது.

இந்நூலிற்கு அணிந்துரையை தி.அ.கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் சிறப்புடன் வழங்கியுள்ளார். அணிந்துரையில் இடம்பெறும் கருத்துக்களை கீழே காணலாம்.

ந.சுப்புரெட்டியார் அவர்கள் தமது நூலாகிய வடவேங்கடமும் திருவேங்கடமும் எனும் நூலில் 18 கட்டுரைகள் அமைத்துள்ளார்.

**“வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்”**[2]

என்று பனம்பாரனார் இயற்றிய தொல்காப்பிய பாயிரத்தில் குறிப்பிட்டுள்ள வடவேங்கடம் என்பது இன்றுள்ள திருப்பதிமலையன்று இவை ஒன்றோடு ஒன்றாக ஒழுங்கற்ற நிலையில் சில குன்றுகளாக தமிழ் நாட்டில் வட புறத்தில் நிலைத்து நீறும் நிழலும் பெற்று காணப்படுகிறது. எனவே பனம்பாரனார் இயற்றிய

தொல்காப்பிய பாயிரத்தில் ‘‘வடவேங்கடம் என்ற சொல்லினது பொருளை சங்க இலக்கிய சான்றுகளின் மூலம் ஆராய்ந்து ‘‘வேங்கட நெடுவரை’’ ‘‘நெடுவரை வேங்கடத்தும்பா்’’ ‘‘வேங்கட வைப்பு’’ என்றும் நீண்ட வரிசையாக அமைந்த மலைத்தொடர்களே வேங்கடம் என குறிப்பிட்டதாலும், புல்லி ஆட்சிசெய்த இப்பகுதி வறண்டு நீரற்ற புகுதற்கரிய பாலை வனமாக உள்ளதாலும் பழங்காலத்தில் தமிழ்கூறும் நல்லுலகமாக இருந்த திருப்பதியும் அதன் கிழக்கு பகுதியில் உள்ள நெல்லூர் முதலிய ஊர்களும் எருமைநாடு எனப்படும் தற்போதைய மைசூரும் இருந்ததினால் இவற்றிற்க்கு வடக்குபுறத்தில் கிழக்கு கடற்கரை தொடங்கி மேற்கு கடற்கரை வரையில் நீண்டு செல்லும் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு சங்ககால வேங்கடமே வடஎல்லையாக இருக்க தகுதிபெற்றுள்ளது என்றும் சங்ககால வேங்கடத்தை புல்லி,திரையன், ஆதனுங்கன் என்ற அரசர்கள் ஆட்சி செய்தனர். இவர்கள் ஆட்சி செய்த பகுதி நீரும் நிழலும் சூழ்ந்து காணப்படுகிறது. எனவே முற்கூறிய வேங்கடத்தின் ஒருபகுதியாக திருப்பதி மலை இருந்திருக்க வேண்டும். வெம்மை மிக்க பாலையை குறிக்கும் இவ்வேங்கடத்தை நம்மாழ்வார் வேங்கடம் என்று சொல்லுகிறார் பாவங்களைக் வேகச் செய்யும் மலை என்ற பொருளைக்கருதி இம்மலையைக் குறிப்பிடுகிறார்.

இம்மலையைச் சிலப்பதிகாரத்திலும் புறப்பொருள் வெண்பா மாலையிலும் திருப்பதியாகவே குறிப்பிட்டுள்ளனர்.

இராவ்சாகிப் கோதண்டபாணிபிள்ளை அவர்கள் மாலவன் குன்றமாக சிலப்பதிகாரத்தில் குறிப்பிடுவது இடைச்செருகல் என்று கூறியிருப்பதனை மறுத்தது ந.சுப்புரெட்டியார் அவர்கள் சங்க இலக்கியச் சான்றுகளின் மூலம் சுட்டிக்காட்டியுள்ளார். அதாவது ஆழ்வார்கள் இம்மலையை திருமாலின் குன்றமாகக் கொண்டிருக்கின்றனர். திருமுறைகளை இயற்றிய சிவனடியார்களும் முருகக்கடவுளைப் பாடிய நக்கீரர் போன்ற சங்கப் புலவர்களும் வேங்கட மலையை சிவபெருமானுக்கோ முருகக்கடவுளுக்கோ உரிமை உடையதாக பாடாமையாலும் சிலப்பதிகாரத்திலுள்ள இப்பகுதி இடைச்செருகல் அல்ல என்கிறார்.

ஐந்தாவது கட்டுரையில் ஆழ்வார்கள் அருளிச்செய்த நான்கு பகுதிகள் இருபத்திநான்கு பிரபந்தங்கள் இவற்றில் உள்ள பாசுரங்களது எண்ணிக்கை ,மதுரகவிகளும் தொண்டரடிப்பொடிகளும் தவிர பிறர் பாடிய திருவேங்கடப் பாசுரங்களது எண்ணிக்கை ஆகியவற்றைக்குறிப்பிட்டுள்ளார்.

ஏழாம் கட்டுரை முதல் பன்னிரெண்டாம் கட்டுரைவரை முதல் ஆழ்வார்கள் மூவர் , குலசேகரப் பெருமாள் திருமங்கை மன்னன் , ஆண்டாள் , சடகோபன் ஆகியோர் திருவேங்கட முடையானை போற்றி பாடிய பாசுரங்களுக்கு பெரியவாச்சான்பிள்ளை இயற்றிய உரைகளை எடுத்துக்காட்டி தமக்கு திருவேங்கடவன் மீதுள்ள பக்தியினை எடுத்துக்காட்டியுள்ளார்.

அண்ணங்கராசர் ஸ்வாமிகளின் நாலாயிர திவ்யார்த்த தீபிகை உரைப்பகுதிகளை சுவைபடக்கூறி இவ்ஆசிரியரின் மீது தமக்குள்ள மதிப்பினை உலகறிய வெளிக்காட்டியுள்ளார் மேலும் வேதாந்த தேசிகர் எழுதிய பாசுரப்பகுதியை மேற்கோளாக ந. சுப்புரெட்டியார் காட்டியுள்ளதாகக் கூறுகின்றார்.

இந்நூலில் சித்தும் அசித்தும் உடலாக அமைந்துள்ளன என்பதனையும், ஆழ்வார்களில் பெரியாழ்வாரும், ஆண்டாளும் உயர்ந்தவர்கள் என்பதனையும், திருமந்திரத்தின் பொருள் இன்னது என்பதும், நம்மாழ்வார் செய்த சரணாகதி இத்தகையது என்றும் தெவிட்டாத அமுதமாக ந.சுப்புரெட்டியார் அழகுபடக் கூறியிருப்பதை சுட்டிக்காட்டியுள்ளார் அணிந்துரை எழுதிய தி.அ.கிருஷ்ணமாச்சாரிய சுவாமிகள்.

சுப்புரெட்டியார் அருளிய இந்நூல் புராணக்காரர்கள் கூறிய படியே ‘‘அழியாத செல்வத்தினை அழிக்க வல்லது’’ என பொருள்படுகின்ற திருமாலின் திருவேங்கடம், ந.சுப்புரெட்டியார் வாயிலாக பல நூல்களென்னும் அழியாத செல்வத்தினை இவ்வுலகுக்கு அளிக்கவேண்டும் என்றும் தனது குலதெய்வமாகிய கோவிந்தனுடைய திருவடிகளில் மனமார வேண்டிக்கொள்வதாகவும் தனது நன்றியினை தெரிவித்துக்கொண்டுள்ளார் கிருஷ்ணமாச்சாரியார்.

**ஆசிரியர் குறிப்பு**

**“குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை**

**கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**

**நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**

**உலகியலறிவோடு உயர்குணமினையவும்**

**அமைபவனூலுரை ஆசிரியன்னே”[3]**

நன்னூலார் கூறும் நல்லாசிரியரின் உயர் குணங்களை இவர் பெற்றுள்ளார்.

ந.சுப்புரெட்டியார் 27.8.1916 இல் தமிழ் நாட்டில் திருச்சி மாவட்டத்தில் பெரகம்பி என்ற ஊரில் பிறந்தார். திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியலில் இளங்கலை பட்டமும்,சென்னை பல்கலைக்கழகத்தில் முதுகலை பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைகழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். தமிழறிஞரும்,பேராசிரியரும், எழுத்தாளருமான இவர் பி.எஸ்.சி ,எல்.டி, வித்துவான் , பி.ஏ, எம்.ஏ, பி.எச்.டி, பட்டங்களை பெற்றவர். இவர் எழுதிய 135 நூல்கள் நாட்டுடமையாக்கப்பட்டன. 1941 முதல் 1950 வரை ஒன்பது ஆண்டுகள் துறையூர் உயர்நிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியராகவும், 1950 முதல் 1960 வரை காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும், 1960 முதல் 1977 வரை திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் பணியாற்றி பிறகு ஓய்வு பெற்றவர். இவர் திரு.வி.க. விருது, திருக்குறள் விருது, டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது, கலைமாமணி விருது முதலிய விருதுகளை பெற்றுள்ளார். டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் சைவம் வைணவம் இரண்டையும் தமது இருகண்களாகப் போற்றுபவர், தமிழிலக்கியத்தின் பல்வேறுகாலத்து நூல்களிலும் உரைகளிலும் ஆழ்ந்த புலமையுடையவர் என்று இவரது திறமையினைப் பேராசிரியர் ந.சஞ்சீவி அவர்கள் கூறியுள்ளார்.

**சான்றென் விளக்கம்**

1. நன்னூல் (காண்டிகையுரை), நூ. எ. 47
2. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்
3. நன்னூல் (காண்டிகையுரை), நூ. எ. 23

## இயல் 2

## சங்க இலக்கியம் காட்டும் வேங்கடம்

வேங்கடம் குறித்த கருத்து வேறுபாடுகள் நிலவுவதால் சுப்புரெட்டியார் அவர்கள் பல சான்றுகளை எடுத்துரைத்து வடவேங்கடம் என்பது வேறு, திருவேங்கடம் என்பது வேறு என்று விளக்கியுள்ளார். இன்றைய திருப்பதியான திருவேங்கடம் தமிழகத்தின் எல்லை அல்ல. வடவேங்கடம் என்பது வடபுறத்தில் கிழக்கு கடற்கரைத் தொடங்கி மேற்கு கடற்கரை இடையிலான மலைத்தொடர் என்பதை பலசான்றுகள் வாயிலாக எடுத்துக்காட்டியுள்ளார். அச்சான்றுகளை இவண் காண்போம்.

**“வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்**

**தமிழ் கூறும் நல்லுலகம்”**[1]

என்று தொல்காப்பியப் பாயிரத்தினை இயற்றிய பனம்பாரனார் தமிழ் கூறும் நல்லுலகத்தை இனம்காட்டுகிறார். தென்குமரி என்பதற்கு நச்சினார்க்கினியர் குமரியாறு கடல்கொண்டது என விளக்கம் அளிக்கிறார். எனவே வடவேங்கடம் என்பது என்ன என்பதையும், சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள வேங்கடத்திற்கும் தற்போதுள்ள திருப்பதிக்கும் உள்ள வேறுபாடுகளையும் ஆராய்ந்து ஐயா எடுத்துரைத்துள்ளதை கூறும் முகமாக இவ்வியல் அமைகிறது.

வடவேங்கம் என்ற சொல்லிற்கு நீண்ட மலைத்தொடர் என்று,

**“முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்**

**வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை”**[2]

அகநானூற்றில் கண்ணனார் பாடியுள்ளார்.

பெண்யானையும் அதன் கன்றும் பசியால் வாடியது. இப்பசியினைப் போக்கக் கூடியது. ஆண்யானை முற்றாத முளையினை உண்பிக்கக் கூடிய சாரலினை உடையது வேங்கடமலை என்று குறிப்பிட்டுள்ளார்.

**“தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய**

**வேங்கட வைப்பிற் சுரன் இறந்தோரே”**[3]

என்று நக்கீரர் தம் பாடலில் இம்மலையை ‘நெடுவரைப் பிறங்கிய வேங்கட வைப்பு’ என்று குறிப்பிட்டுள்ளார். வேங்கை மரத்தின் பூக்கள் புலியினது நிறத்தைப் போன்று கீழே உதிர்ந்து கிடக்கிறது. மரங்களுக்கிடையே முசுக்கலைகள் தாவுவதால் நாரத்தை மலர்கள் உதிருகின்றன. இத்தகைய சூழலும் தேன் மணம் கமழக் கூடியதும் வேங்கட வைப்பு என்று குறிப்பிட்டுள்ளார்.

மாமூலனார் என்ற புலவர் தம் பாடலில் **“கோடுயர் பிறங்கல் குன்று பல நீந்தி தேன் தூங்கு உயர்வரை நன்னாட்டு உம்பர் வேங்கடம்”** என்று வேங்கடத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

சங்கப்புலவரான கல்லாடனாரும் வேங்கடமலையைக் ‘காம்புடைநெடுவரை’ என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்நான்கு சங்கப் புலவர்கள் கூறியுள்ள வேங்கடம் பற்றிய விளக்கத்தை ஆராய்ந்து சுப்புரெட்டியார் கூறியுள்ளதாவது,

இங்கு வரை என்பதற்கு ‘கோடு’ அல்லது ‘வரம்பு’ என்று பொருள்படும் எனினும் ‘வரை’‘நெடுவரை’‘நெடுவரை பிறங்கிய வேங்கட வைப்பு’ என்ற சொற்கள் மலை என்பது பொதுப்பொருள் அல்ல, அது ஒரு குறிப்பிட்ட மலைத் தொடர்களை குறிப்பிடுவது என்று கூறியுள்ளார்.

‘நெடுவரை’ என்பது ‘குன்று’ அல்லது ‘குன்றம்’ என்பதிலிருந்து வேறுபட்டதாகவும் பிற்கால இலக்கியங்கள் இச்சொற்களைத் தவறாக கையாண்டதால் இன்றைய வழக்கில் அவை ‘ஒருபொருட் பன்மொழிகளாக’ வழங்கி வருகின்றன .

திருமங்கை மன்னன் ‘சிங்கவேள்குன்றம்’ என்று கையாண்டிருப்பதைக் காணலாம். ஒன்றோடு ஒன்று ஒழுங்கற்ற நெருங்கிய நிலையில் நாம் காணும் திருப்பதி மலையைக் ‘குன்று’ அல்லது ‘குன்றம்’என்று கூறலாம். ஆனால்

'நெடுவரை' என்று கூறுவது பொருந்தாது எனவே பாரதியாரும் 'மாலவன்குன்றம்' எனக் குறிப்பிட்டுள்ளதை சுட்டிக் காட்டியுள்ளார் சுப்புரெட்டியார்.

தமிழகத்தில் வடகிழக்கு மூலையில் உள்ள ஒரு சிறிய இடத்தை இருகடல்களுக்கும் இடையே நீண்டு கிடக்கும் நிலப்பகுதியின் வடஎல்லையாக கூறுவது எவ்வாறு பொருந்தும் என்பதை விளக்கும் முகமாக காலத்தால் தொல்காப்பியத்தில் தமிழகத்தின் வடஎல்லையாக வடவேங்கடமும் தென் எல்லையாக குமரியும் கூறப்பட்டுள்ளது. கிழக்கிலும் மேற்கிலும் தமிழகத்தின் எல்லையாக கடல்களே அமைந்திருந்தன. எனவே வடவேங்கடம் என்று கூறுவதே மரபாகிவிட்டது. வடக்கிலுள்ள வடவேங்கடத்தைக் கடந்து சென்றால் மக்கள் பேசும் மொழி, அப்பகுதிகளில் வேறுபட்டிருக்கும் என்பதை, சங்க இலக்கியங்களில் காணப்படும் 'மொழிபெயர்தேஎம்' என்ற தொடர் வழியாக அறியலாம் என்றும் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கூறியுள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார். அக்காலத்தில் தமிழர்கள் திருப்பதி மலையை 'வேங்கடம்' என்ற பெயரால் அழைத்தனர். அதுவே நாளடைவில் எல்லைக் குறியாக அமைந்தது என்றும் இம்மலையைக் கடந்து சென்றால் அம்மக்களிடம் தமிழ் பேசும் வழக்கம் இல்லை என்று விளக்கம் தருகிறார்.

பேராசிரியர் அய்யங்கார் அவர்கள்,

**"மழபுலம் வணங்கிய மாவண் புல்லி**

**விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்"**[4]

என்ற தொடரினை அடிப்படையாகக் கொண்டு ஆண்டு முழுவதும் விழாக்கள் நிகழ்ந்து கொண்டிருக்கக் கூடியது வேங்கடம் என்று கூறுவார். இவரது ஊகத்திற்கு மறுப்பாக சுப்புரெட்டியார், சங்க இலக்கியச் சான்றுகளின் மூலம் தமிழகத்திலுள்ள அனைத்துச் சிற்றூர்களிலும் விழவு மலிந்ததாகவும், பருவந்தோறும் விழாக்கள் ஆண்டுதோறும் விழாக்கள், சமய, சமூக, தொழில், அரசியல் பற்றிய பல்வேறு விழாக்கள் தொடர்ந்து வருவதைக் குறிப்பிட்டுள்ளார்.

**“வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்”**[5]

என்ற பாடலடியால் திருமண விழாக்களும்,

**“முந்நீர் விழவின் நெடியோன்”**[6]

எனும் அடியால் தெய்வத்திற்கு எடுக்கப்பட்ட விழாக்களும் அறியப்படுகிறது.

புறநானூற்றில் போர் அல்லது அரசியல் விழாக்கள் குறிப்பிடப்பட்டுள்ளன என்பதை,

**“போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே**

**கல்லென் பேருர் விழவுடை யாங்கண்”**[7]

என்ற அடிகளில் மூலமாக அறியலாம்.

**“காதலர் உழையராகப் பெரிதுவந்து**

**சாறுகொள் ஊரின் புகல்வேன்”**[8]

எனும் பாடலடிகளில் தலைவியுடன் தலைவன் இருப்பதால் விழாக்கொண்ட ஊரினர் மகிழ்ச்சிக் கொள்வதைப் போல அவள் மகிழ்கின்றாள் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது .

இவ்வாறு ஆண்டுதோறும் விழாக்களுடன் ஊர்கள் சிறப்புடன் காணப்பட்டதை சங்கப் பாடல்களில் மரபாகத் திகழ்வதைக் காணலாம்.

அகநானூற்றில்,

**“அழியா விழவின் அஞ்சு வரு மூதூர்”**[9]

என்ற பாடலடியும்,

புறநானூற்றில் வரும் “மடியா விழவின் யாணர் நன்னாட்டு” என்ற அடிகளும் ஆண்டு முழுவதும் விழாக்கள் நீங்காத ஊர் என்பதை உணர்த்துகின்றன.

**“நீறு அடங்கு தெருவின் சாறு அயர் மூதூர்”**[10]

என்ற சிறுபாணாற்றுப்படை பாடலடியின் மூலம் சிற்றூர்களிலும் விழாக்கள் சிறந்து காணப்பட்டதை அறியலாம்.

**"விழவும் அகலுளாங் கண் சீறூர்"**[11]

என்ற புறப்பாடலும் ஒவ்வொரு இல்லமும் விழவுடன் பொலிந்ததற்கான குறிப்பினைப் பகிர்கின்றன.

இச்சங்க இலக்கியப் பாடல்களின் மூலம் நாடு முழுவதும் இல்லம் தோறும் ஊர் முழுவதும் விழாக்கள் மலிந்திருந்ததை அறியமுடிகிறது.

**வேங்கடம் - பெயர் விளக்கம்**

சங்க கால வடவேங்கடத்தைப் பற்றி தெரிந்து கொள்ள 'வேங்கடம்' என்ற சொல்லினது பொருளினை முதலில் அறியலாம். 'வேம்''கடம்' என்ற இரண்டு சொற்கள் 'வேங்கடம்' என்ற கூட்டுச்சொல்லாயிற்று 'கடம்'என்பது பாலை நிலத்தை குறிக்கும் கூட்டுச்சொல்லாகும்.

**"பெயன் மலை துறந்த புலம்புறு கடத்துக்**

**கவை முட் கள்ளிக் காய்விடு கடுநொடி"**[12]

என்னும் குறுந்தொகை பாடலடிகளில் 'கடம்' என்ற சொல் பாலையைக் குறித்ததாகவும்,

**"கடம் பல கிடந்த காடுடன் கழிந்து"**[13]

என்ற அடியில் 'கடம்' பாலை நிலத்து வழியினைக் குறித்தது என்றும் தெரியவருகிறது.

கலித்தொகையில்,

**"காணேம் அல்லேம்**

**கண்டனம் கடத்திடை"**[14]

என்ற அடிகள் கடம் என்ற சொல் பாலைநிலம் என்ற பொருளில் வருகிறது என்று ஆசிரியர் சுட்டிகாட்டி தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு வடக்கே உள்ள நிலப்பகுதியினது இயல்பினைக் கூறுகின்றார்.

காக்கைப்பாடினியார் கடலுக்கும், மலைக்கும் இடையே மிகப்பழங்காலத்தில் ஏற்பட்ட போர் குறித்து பாடியுள்ளதை,

**“வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்**

**தென்திசை யுள்ளிட்டெஞ்சிய மூன்றும்**

**வரை மருள் புணரியொடு பொறாது கிடந்த”**[15]

என்ற பாடலின் வாயிலாக விளக்கியுள்ளார் சுப்புரெட்டியார்.

தென்னிந்தியாவில் வெப்பம் மிகுதியாக காணப்படும் பகுதியாக வடக்கில் கிருஷ்ணனை நதிக்கும் வடபெண்ணை நதிக்கும் துங்கபத்திரை நதிக்கும் சற்றுத் தெற்கில் மலைத் தொடர்களும் குன்றுகளும் சூழ்ந்த நிலப்பகுதியினை கூறலாம்.

அப்பகுதிகளைச் சுற்றியுள்ள கல்பாறைகளிலிருந்து அதிகரிக்கப்பெற்ற கதிரவனின் வெப்பம் $120^0$ - இல் இருந்து $125^0$ வரை இருக்கின்றது. வறண்ட தன்மையுள்ள இந்தப் பகுதி ‘சங்க நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள ‘வேங்கடம்’ என்ற நாட்டுப்பகுதியை பெரும்பாலும் ஒத்திருக்கிறது என்றும் அண்மை காலம் வரையில் இந்தப் பகுதி கொள்ளை நோய்களால் பீடிக்கப்பட்டிருந்தது என்றும் இவ்ஆறுகள் பாசனத்திற்கு பயன்படுவதில்லை எனினும் தற்போது சிறுசிறு அணைகள் அமைத்து நீர்த்தேக்கத்தினை உண்டாக்கும் திட்டங்களால் இவ்விடத்தில் பெரும்பாலான இடம் கணிசமான அளவிற்கு மாற்றங்களை அடைந்து வருகின்றன என்றும் சுப்புரெட்டியார் கூறியுள்ளார்.

சங்க காலத்து வேங்கடப்பகுதியும் தமிழ்கூறும்நல்லுகத்தின் வடக்குப்பகுதியிலும். தட்பவெப்ப நிலையும் இயற்கை அமைப்பும் ஒன்று போலக் காணப்படுகின்றன.

**"அகலிடம் குளித்த அகல்வாய்க் கூவல்**

**ஆறுசெல்வம் பலர் அசைவிட ஊறும்**

**புடையலங் கழற்கால் புல்லி"**[16]

என்ற அகநானூற்றுப் பாடலில் நீரின்றி மலைச் சுனைகள் காணப்படுகின்றன. கதிரவனின் கதிர்கள் மலையின் உச்சியில் நெருப்பினைக் கக்குகின்றன. மலைகளில் உள்ள மூங்கில்கள் காய்ந்து கருகுகின்றன. வன்னிலத்தை இடித்து தோண்டப்பட்ட கிளைகளில் வழிப்போக்கர்களது தாகத்தை தீர்க்கும் அளவிற்கு கூட நீர் ஊறுவதில்லை குன்றுகளை உடைய இந்நாட்டில் மக்கள் செல்வதற்கே அச்சம் கொள்ளும் விதமாக அமைந்துள்ளது. இந்நாடு சுப்புரெட்டியார் 1974 கூடுருக்கு அருகிலுள்ள வித்யநகர் கல்லூரிக்கு பல்கலைக் கழகப் பணியாகச் சென்றபொழுது உப்புவிற்கும் உமணர்களைக் கண்டதாகவும் தற்போது அப்பகுதியில் யானை, வேங்கைக்குப் பதிலாக காட்டுப் பன்றியும் நரிகளும் அலைந்து திரிந்ததும் மாடுகள் விழுந்தும் எழுந்தும் செல்லும் காட்சிகளையும் தான் கண்டதாகக் கூறியுள்ளார்.

தொண்டையர் ஆட்சிக்குக் கீழ் இருந்த நாட்டுப் பகுதியும் சிறப்பாக இல்லை என்பதை,

**"நிழற்கவின் இழந்த நீரில் நீளிடை**

**அழலவிர் அருஞ்சுரம் நெடிய வென்னாது"**[17]

என்ற பாடலடிகள் மூலம் இப்பகுதி நீரற்ற வறண்ட இடம் என்றும் மரநிழல் இன்றி மிகுந்த வெப்பம் உடையதாக இருந்ததையும்,

**"பயந்தலை பெயர்த்து மாதிரம் வெம்ப"**[18]

என்ற அடியின் வாயிலாகவும், எல்லாப் பக்கங்களிலும் நீர் வறண்டு வெப்பத்தால் கொதித்தது என்பதை "கோடுகொள் அஞ்சுரம்" என்றும் "அருஞ்சுரக் கவலை" என்ற அடிகளின் வழி அறியமுடிகிறது.

**"வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென"**[19]

எனும் புறநானூற்றுப் பாடலடி வானம் பொய்க்காமல் மழை பெய்ததால் மலை போன்ற நெற்குவியலை விளைவித்த வேங்கடத்தின் வடபகுதி வற்கடத்தால் தாக்குண்டு கிடக்கின்றது என்று கூறுவதன் மூலம் இவ்வேங்கடப் பகுதியில் செழிப்பான இடங்களும் இருந்திருக்கக் கூடும் என்றும் அறியலாம்.

தமிழ் கூறுநல்லுலகத்திற்கு வடக்கு திசையில் மேற்குக் கடற்கரையிலிருந்து கிழக்குக்கடற்கரை வரை நீண்ட மலைத்தொடற்களும் , மிகுந்த வெப்பத்துடன் காணப்படும் காடுகளும் குன்றுகளும் அடங்கிய பகுதியே சங்ககால நூல்களில் குறிப்பிட்டுள்ள வடவேங்கடம். இவ்வேங்கடப் பகுதி மேற்குக்கடற்கரையிலிருந்து கிழக்குக் கடற்கரை வரை நீண்ட வட எல்லையாக அமைந்திருப்பதனால் வடவேங்கடம் என்ற பெயருடன் வழங்கியதையும் , தொல்காப்பிய பாயிரத்திலுள்ள ‘வடவேங்கடம் தென்குமரி’ என்பதிலுள்ள வேங்கடமும் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள வேங்கடமும் வடவேங்கடத்தையே குறிப்பதாக சுப்புரெட்டியார் உறுதியாகக் கூறுகின்றார். மேலும் இவ்வேங்கடத்தின் எல்லைகளை வரையறை செய்துகாட்டுவதற்கு போதுமான சான்றுகள் கிடைக்காவிட்டாலும் கிடைத்த சான்றுகளைக் கொண்டு அதன் எல்லையை வகுத்துக் காட்டுகின்றார்.

திருப்பதி மலை, சோணாட்டின் வட எல்லையில் கிழக்கு பகுதியிலிருந்து தொடங்கி பாண்டிய நாட்டின் வட எல்லையாக நீண்டு மேற்கு கடற்கரை வரை செல்கிறது. பாண்டிய மன்னன் இந்த வடவேங்கடம் உள்ள திசையிலிருந்து வேழங்களைக் கொண்டு வந்தான் என்பதை,

**“நேரா வன்தோள் வடுகர் பெருமகன்**
**பேரிசை எருமை நன்னாட்டு உள்ளதை**
**அயிரியாறு இறந்தனராயினும் மயரிறந்து**
**உள்ளுப தில்லை”**[20]

என்ற அகப்பாடலில் கர்நாடகத்திலுள்ள அயிரி என்ற ஆற்றைக்கடந்து சென்று பாலை நிலத்தை அடைந்தான் என்று குறிப்பதன் மூலம் வேங்கடம் என்பது பாலை நிலத்தைக் குறிக்கிறது.

**“கதிர் கதங் கற்ற ஏகல் நெறியிடைப்**

**அயிரி யாற்றடை கரை வயிரின் நரலும்”[21]**

என்ற பாடலில் தலைவன் அயிரி ஆற்றைக் கடந்து செல்லும் வழியில் பக்க மலைகளில் மூங்கில்கள் நிறைந்தும், அங்குள்ள வெப்பத்தால் சுரபுன்னை வாடி, கரிந்த நிலையிலும் , அங்கு செல்லும் வழியிலுள்ள கற்குவியல்கள் வெப்பத்தை ஏற்று அனைத்துப் பகுதிகளிலும் பரப்புகிறது. இந்த நதி மேற்குத் தொடர்ச்சிமலையின் கீழ்ப்பகுதியில் உற்பத்தியாகிக் கர்நாடகப் பகுதியின் வட எல்லையாகப் பாய்கிறது. இவ்வாறு கிழக்குக் கடற்கரையில் தொடங்கும் வேங்கடம் மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிவாரம் வரை நீண்டு செல்கின்ற மலையைக் கடந்து சென்றால் மேற்கில் உள்ள கடல் தென்படும்.

**“நேரா வன்தோள் வடுகர் பெருமகன்**

**பேரிசை எருமை நன்னாட்டு உள்ளதை” (அகம்-22)**

என்ற பாடலில் எருமை நாட்டினைப் பற்றிய செய்தி இடம்பெறுகிறது. மைசூருக்கு சங்க காலத்தில் வழங்கப் பட்டபெயர் ‘எருமை நாடு’ இதனை‘எருமை குடநாடு’என்று அகநானூற்றின் வாயிலாக அறியலாம்.

நன்னூல் விருத்தியுரையில்,

**“தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேண்பூழி**

**பன்றி யறுவா வதன் வடக்கு நன்றாய”[23]**

என்ற வரிகள், செந்தமிழ் நாட்டினைக் குறிப்பிடுவதையும் அவற்றுள் ‘குடநாடு’ என்ற பெயர் ‘மேற்கு நாடு’ என்று பொருள்படுவதைக் குறிக்கும். எனவே குட நாடு என்பது கேரளத்தையும் கர்நாடகத்தையும், இரண்டும் சேர்ந்த நாட்டையும் அல்லது தனித்தனியாக இவற்றுள் ஒன்றையோ குறிப்பிடும் எனவே சேரர் குட நாட்டிலிருந்து பிரித்து அறிவதற்காக ‘எருமை குட நாடு’ என்னும் தொடர் வழங்கப் படுகிறது.

தொல்காப்பியப் பாயிரத்தில் மைசூர் பன்னிரு நாடுகளில் ஒன்றாகவும், இப்பகுதியில் செந்தமிழ் வழங்கலாயிற்று என்பதை சங்க இலக்கியங்களின் மூலம்

அறியமுடிகிறது. தொல்காப்பியர் காலத்தில் பயின்று வந்த செந்தமிழ், காலப் போக்கில் கன்னடமாக மாறியது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் தமது மனோன்மணியத்தில் உள்ள தமிழ்த்தாய் வாழ்த்துப்பாடலில் 'கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் உன் உதிரத்து உதித்து எழுந்து ஒன்று பல ஆயிடினும்' என்று பாடியுள்ளதை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர் காலத்தில் மைசூர் தமிழ் கூறுநல்லுலகத்தில் ஒரு பகுதியாக இருந்து வந்தது. இதன் வட எல்லையில் அயிரி ஆற்றினை அடுத்து 'வடவேங்கடம்' இருந்த என்பதையும் சுப்பு ரெட்டியார் ஆய்வு வழி அறியமுடிகிறது. எனவே தமிழ் கூறும் வட எல்லையாக விளங்கிய வடவேங்கடம் தென்னிந்தியத் தீபகற்பகத்தின் வடக்குப் பகுதியில் கீழ்கோடியிலிருந்து மேல்கோடி வரை பரவியிருந்த பகுதியாகும் என்று சுப்புரெட்டியார் தெளிவாகக் கூறியுள்ளார். இதிலிருந்து வேங்கடம் வேறு, வட வேங்கடம் வேறு என்பதை அறியமுடிகிறது.

**வடவேங்கடத்தை ஆண்ட அரசர்கள்**

வேங்கடத்தை ஆட்சிசெய்த அரசர்களைப்பற்றி, சங்க இலக்கியச் சான்றுகளில் சுட்டிக் காட்டியுள்ளார் சுப்புரெட்டியார். எட்டுத்தொகை நூல்களில் புல்லி என்ற அரசனையும் பெரும்பாணாற்றுப்படையிலும் அகநானூற்றிலும் திரையன் என்ற அரசனையும், புறநானூற்றில் ஆதனுங்கன் என்ற அரசனையும் பற்றிய செய்திகள் சங்க இலக்கியச் சான்றுகளாக சுட்டப்பெற்றுள்ளன.

**1. புல்லி**

இவர் தமிழகத்தின் வட எல்லையான வட வேங்கடத்தையும் இதனைச் சூழ்ந்துள்ள நாடுகளையும் ஆட்சி செய்தவர். இவர் ஆட்சி செய்த நாட்டைக் கடந்து சென்றால் வடுகு மொழி பேசும் வடுகர்நாடு காணப்படும் என்பதால், இவர் தமிழகத்தின் வட எல்லையை ஆட்சி செய்தவர் என்றும்,

> **"புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து**
>
> **நடையரும் கானம் விலங்கி நோன் சிலை'[24]**

என்ற பாடலில் புல்லி, கள்வர் இனத்தவரின் தலைவன். தென்னவன் என்று வழங்கப் பெறும் பாண்டியர், கள்வர் தலைவர் என்றும் இப்பாண்டியரின் படைக்கு தேவையான யானைகளை கள்வரின் தலைவனாகிய புல்லி வாழும் வேங்கடத்தில் இருந்து வந்தன என்று அகப்பாடலின் மூலம் சான்றளிக்கிறார். மேலும் மதுரைக் கணக்காயர்,

**‘‘வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை**

**மறப்போர் பாண்டியர்’’**[25]

என்ற அடிகளில் புல்லி, பாண்டியர் குலத்தோடு தொடர்புடையவன். வேங்கடத்தில் கொணர்ந்த யானைகளை உடையது பாண்டியரது படை என்று கூறுவதையும் சுட்டிக்காட்டுகிறார்.

புல்லி ஆட்சி செய்த நாட்டைச்சேர்ந்த வீரர்கள் தாம் வாங்கும் பொருள்களுக்கு எல்லாம் யானைகளையும் யானைகளது தந்தத்தையுமே விலையாக கொடுப்பார்கள் என்றும், புல்லியும் தனது வீரர்களுடன் சென்று களிறு வேட்டையாடி அவற்றின் கோடுகளை விற்று பெற்ற நெல்லையும் தன்னை நாடி வரும் பரிசிலருக்குக்கொடுத்து இன்பம் அடைவான் என்பதை,

**‘‘கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்**

**மழபுலம் வயக்கிய மாவண் புல்லி’’**[26]

எனும் அகநானூற்றுப்பாடலடிகளின் மூலம் எடுத்துரைத்துள்ளார்.

**‘‘மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்**

**நிரை பல குழீஇய நெடுமொழிப் புல்லி’’**[27]

என்ற மாமூலனார் பாடலின் மூலம் , ஆயர்கள் தம் நாடு நோக்கி வருபவரை வரவேற்று வரகு அரிசியால் ஆன சோற்றைப் பாலுடன் கலந்து அளிக்கும் பண்புடைய ஆயர்களின் விருந்தோம்பல் பண்பினையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

இவ்வாறு வீரர்களும் ஆயர்களும் கலந்து வாழும் இவ்வேங்கடத்தை ஆட்சி செய்து இரவலர்களுக்கு பரிசில்களை வாரி வழங்கும் இவனது வண்மையினை மாமூலனார்,

**“பொய்யா நல்லிசை மாவன் புல்லி”[28]**

என்றும்,

**“நெடுமொழிப் புல்லி”[29]**

என்றும் மாமூலனார் பாராட்டியுள்ளார்.

**2. திரையன்**

பெரும்பாணாற்றுப்படையில் பாட்டுடைத் தலைவனாக வரும் குறுநில மன்னன் தொண்டைமான் இளந்திரையன் பாடிய பாடல்கள் நற்றிணையில் மூன்று பாடல்களும் (94,99,110), புறநானூற்றில் ஒரு பாடலும்(185) , காணப்படுகின்றன. திரையன் வெண்வேற்கிள்ளி என்ற சோழனுக்கும் நாகநாட்டு மன்னனின் மகள் பீலி வளைக்கும் பிறந்து கடலில் பயணம் செய்து வரும்பொழுது கலம் சிதைந்து போக திரையன் கடலில் மிதந்து கரையினை அடைந்தான் என்று திரையனது வரலாற்றை எடுத்துரைக்கிறார். இவன் ஆட்சி செய்த தொண்டை நாட்டிற்கு வடக்கு எல்லை வேங்கடம் என்பதை,

**“வினை நவில் யானை விறற்போர்த் தொண்டையர்**
**இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு**
**ஓங்கு வெள்ளருவி வேங்கடம்”[30]**

என்ற பாடலடிகளால் சுட்டிக்காட்டியும்,

**“வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை” (அகம்-85)**

**“செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்**
**பல்பூங் கானல் பவத்திரி”[31]**

என்ற பாடலடிகளின் மூலம் திரையன் வேங்கட நாட்டை ஆட்சி செய்ததாகவும், பூஞ்சோலைகள் பல சூழ்ந்த பவத்திரி எனும் ஊரினை உடையவன் என்பதனையும் விளக்கியுள்ளார். இவன் 'அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்' உடைமையால் தமிழ் வேந்தர்கள் மூவேந்தருள்ளும் சிறந்தவன் திருமாலை முதல்வனாகக் கொண்ட இவனது நாட்டில் ஆறலைக்கள்வரும் பிற தீங்கு புரிபவரும் இல்லை என்றும், காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு ஆட்சி புரிந்தவன் என்றும் வேங்கட மலையும் இவனது ஆட்சிக்கு உட்பட்டது என்றும் பெரும்பாணாற்றுப்படையின் வாயிலாக ந.சுப்புரெட்டியார் சான்றளித்துள்ளார்.

**3. ஆதனுங்கன்**

ஆதனுங்கன் ஒரு குறுநில மன்னன் இவனுக்கு வேங்கட மலையும் அதனைச் சூழ்ந்துள்ள நாடுகளும் உரிமையுடையது. திருமால் தற்போதுகோவில் கொண்டிருக்கும் வேங்கடப்பகுதியே ஆதனுங்கன், புல்லி முதலானோர் நகரமைத்து வாழ்ந்த இடம் என்றும் 'கல்லிழி அருவிவேங்கடம்' என்ற புறப்பாடலில் வேங்கடம் அழகிய சிறு சிறு அருவிகளால் பொழிந்து காணப்படும் என்று அவர் கூறியிருப்பதனையும் எடுத்துக்கூறியுள்ளார்.

ஆதனுங்கன் இரவலர்க்கு ஈயும் பண்புடையவன் இவனை நோக்கி ஆத்திரையனார் எனும் தொண்டை நாட்டு நல்லிசைப் புலவர் தான் இளையராய் இருக்கும் காலத்தே சென்று சந்திக்க, ஆதிரையன் இவனை அருகில் இருத்தி வேண்டுவன நல்கினான். ஆதனுங்கனின் அருங்குணத்தினை ஆத்திரையனார் நன்கு உணர்ந்து தமது உள்ளத்திலே அவரை வைத்து போற்றி வந்தார் இருவரும் உரையாற்றிக்கொண்டிருக்கும் பொழுது தமக்கு ஆதனுங்கன் பால் உள்ள அன்பினை ,

**''எந்தை வாழி ஆதனுங்கவென்**

**நெஞ்சத் திறப்போர் நிற்காண்குவரே**

**நின்னியான் மறப்பின் மறக்குங் காலை**

**என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுது**

**என்னியான் மறப்பின் மறக்குவென்"**[32]

என்று போற்றியுள்ளார். பல ஆண்டுகள் சென்ற பின் ஆதனுங்கன் இறந்ததை வேங்கடம் சென்று அவன் நாட்டை ஆண்ட அவன் வழித்தோன்றலாகிய நல்லோன் முதியனைக் கண்டு, தான் இளையராய் இருந்த காலத்தில் ஆதிரையன் தன் பால் காட்டிய அன்பினை எடுத்துக்கூறி,

**"ஆதனுங்கன் போல் நீயும்**

**பசித்த ஒக்கல் பழங்கண் வீட**

**வீறுசால் நன்கலம் நல்குமதி பெரும"**[33]

என்று போற்றியதனையும் சுட்டிக்காட்டியுள்ளார். மேலே குறிப்பிட்ட இம்மூன்று அரசர்களும் வேங்கடத்தின் வெவ்வெறு பகுதியினை ஆட்சி செய்ததனை சங்க இலக்கியப் பாடல்களாகவும், கல்வெட்டுகளாலும் சான்றுடன் எடுத்துக்காட்டியுள்ளார். மூன்று பேரில் ஒருவர் மேற்கு பகுதியையும், மற்றொருவர் கிழக்கு பகுதியையும், பிறிதொருவர் நடுப்பகுதியை ஆண்டதாகவும், கிருஷ்ணை நதிக்கு அருகில் உள்ள பகுதியை நுங்கன் என்ற பெயரினையும் பட்டத்தினையும் உடைய அரசர்கள் பதினான்கு பதினைந்தாவது நூற்றாண்டுகள் வரை ஆட்சி செய்ததாகவும் குறிப்பிடுகிறார் ந.சுப்புரெட்டியார்.

பவத்திரி எனும் ஊர் கூடுருக்கு அருகில் உள்ளதை அகநானூற்றுப்பாடலின் மூலம் தெளிவு படுத்தி, பவத்திரி எனும் ஊரை கடல் கொண்டது என்பதனை 'கடல் கொண்ட பவத்திரி கோட்டம்' என்ற நெல்லூர் கல்வெட்டுகளில் காணப்படும் சொற்களால் அறியப்படுகிறது என்றும், இக்கடல்கோளுக்குப் பிறகு திரையன் தனது தலைநகரை காஞ்சிக்கு மாற்றிக்கொண்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

வேங்கடத்தின் மேற்குப் பகுதியைப் புல்லி என்பான் ஆண்டான் என்றும் சங்கப் பாடல்கள் வழி விளக்கியுள்ளார்.

சங்க இலக்கியங்களையும் பிற்காலக் கல்வெட்டுகளையும் சான்றாகக் கொண்டு ந. சுப்புரெட்டியார் திருவேங்கடத்தையும், வடவேங்கடத்தையும் வேறுபடுத்திக்காட்டியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம் - சிறப்புப்பாயிரம்
2. அகநானூறு - பா. எண் - 85
3. மேலது - பா. எண் - 141
4. மேலது - பா. எண் - 61
5. புறநானூறு - பா. எண் - 372
6. மேலது - பா. எண்- 9
7. மேலது - பா. எண் - 84
8. குறுந்தொகை – பா. எண் - 41
9. அகநானூறு - பா. எண் -115
10. சிறுபாணாற்றுப்படை – பா. அடி -201
11. புறநானூறு - பா. எண் - 65
12. குறுந்தொகை – பா. எண் - 174
13. சிலப்பதிகாரம் - காடுகாண் காதை- பா. வரி – 90
14. கலித்தொகை – பா. எண் - 9
15. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் -18
16. அகநானூறு – பா.எண் - 295
17. மேலது – பா. எண் - 213
18. மேலது – பா.எண் -131
19. புறநானூறு – பா .எண் - 391
20. அகநானூறு – பா.எண்- 253
21. மேலது – பா. எண்- 177
22. மேலது – பா. எண்- 253
23. நன்னூல் விருத்தியுரை - பா.எண்- 273
24. அகநானூறு – பா.எண்- 295
25. மேலது – பா. எண்- 27

26. மேலது – பா.எண் - 61

27. மேலது – பா.எண் - 393

28. மேலது – பா.எண் - 359

29. மேலது – பா.எண் - 213

30. மேலது – பா.எண் - 340

31. புறநானூறு – பா.எண் - 175

32. புறநானூறு – பா.எண் - 389

# இயல் மூன்று

# ஆழ்வார்கள் பார்வையில் வேங்கடம்

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் தென்னாட்டில் வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்படும் சிறந்த பக்தி இலக்கியமாகும். ஆழ்வார்கள் அனைவரும் எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருள்பெற்றவர்கள். மக்களின் இருளையை அகற்றி மேன்மையளிக்கும் மறையாய் விளங்கியதால் இதனை தென்மொழி மறை என்பர் சான்றோர்.

**திருவேங்கடம்**

ஆழ்வார்களின் இப்பாசுரங்களை நாதமுனிகள் என்ற வைணவப்பெரியார் அரும்பாடு பட்டுத் திரட்டி இப்பாசுரங்களை நான்கு நான்கு தொகுதிகளாக்கி ஒவ்வொரு தொகுதியிலும் ஆயிரம் பாசுரங்கள் அடங்கிஇருக்குமாறு அடைவுப்படுத்தி 'இசைப்பா' 'இயற்பா' என பிரித்து, இசைப்பாக்களை மூன்று தொகுதிகளாகவும் இயற்பாக்களை ஒரு தொகுதியாகவும் வெளியிட்டுள்ளார். திருவரங்கத்தமுதனார் அருளியுள்ள 'இராமானுச நூற்றந்தாதி' இராமானுசர் காலத்தில் இயற்பாத்தொகுதியுடன் 24-வது பிரபந்தமாக சேர்க்கப்பெற்றது என்றும், இன்றுள்ள பிரபந்தத்தின் பாசுரங்களின் தொகையும், பிரபந்தங்களின் தொகையும் வேதாந்த காலத்தில் வரையறுத்துக் கூறப்பட்டவை என்றும் ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளமை கவனிக்கத்தக்கது.

'நம்மாழ்வாரின் முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில் திருவரங்கம், திருவெக்கா, திருவேங்கடம் என்ற மூன்று திருப்பதிகளின் பெயர்கள் மட்டும் இடம் பெற்றுள்ளன. இம்மூன்று திவ்ய தேசங்களில் திருவேங்கடம் நடுநாயகமாகத் திகழ்கிறது. வடநாட்டு திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலாவதாக கூறப்படுவது திருவேங்கடம்.

இதனை திவ்ய கவி அவர்கள் ,

> **"திருவேங்கடம் தொழுதேம் தீய விபூதிக்குள்**
>
> **கருவேம் கடந்நத னெமிவ் வாழ்வு"**[1]

என்று சிறப்பித்துப் பாடுவதனையும்,

வேதாந்த தேசிகர்,

**“விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு**

**வேங்கட வெற்பு என விளங்கும் வேத வெற்பே”[2]**

என போற்றிப் புகழ்வதனைக் காணமுடிகிறது.

இத்தகைய சிறப்புவாய்ந்த வேங்கடத்தைப் பற்றி 213 பாசுரங்கள் திவ்ய பிரபந்தத்தில் உள்ளதை பதின்மர் பாடியுள்ளனர்.

வைணவத்தத்துவம் சித்து, அசித்து , ஈசுவரன் என மூவகைப்படும். இதனை வைணவப்பெருமக்கள் ‘தத்துவ திரையம்’ என்று வழங்குவர். அசித்தும் எம்பெருமான் படைப்பாதலால் அது வழிபாட்டிற்குரியது என்றும்,

**“சென்று சேர் திருவேங்கட மாமலை**

**ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே”[3]**

என்ற நம்மாழ்வாரின் பாசுரம் இதற்கு அரணாக அமைந்துள்ளதையும் , அசித்தின் பெயரை சொன்ன உடனேயே எம்பெருமான் மனம் மகிழ்ந்து நமக்கு அருள்பாலிப்பதனையும் அறியமுடிகிறது.

ஆழ்வார்கள் அருளிச்செய்தவற்றுள் திருவேங்கடவனை போற்றியுள்ள தன்மையினையும் திருவேங்கடத்தின் சிறப்பினையும் ஆசிரியரது கட்டுரைகளில் உரைத்துள்ளமையை இங்கு காணலாம்.

**குலசேகர பெருமான் காட்டும் திருவேங்கடம்:**

இவர் ஊர் திருவஞ்சிக்களம் . சேரஅரசர் மரபில் தோன்றியவர். இயற்பெயர் குல சேகரர். கௌத்துவமணி அமசத்தில் பிறந்தவர்.வட மொழியிலும் தமிழ் மொழியிலும் சிறந்த புலமை பெற்றவர். அவர் சோழ பாண்டியர்களை வென்று தமிழ் நாடு முழுமைக்கும் தலைமை பூண்ட செய்தியினை ‘கொல்லிக்காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்’ எனும் பாடலடியால் அறியலாம் . இவர் திருமால் மீது கொண்ட அன்பினால் திருமாலே சிறந்த தெய்வம் என்று

உணர்ந்தவர். திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு போன்ற திவ்விய தேசத்து பெருமான் மீது பேரன்பு கொண்டவர்.கோவிந்தராசனின் திருவடிகளைத் தலைக்குமேல் சூடுதலையே மகுடாபிஷேகமாகக் கருதுபவர் என்றும்.

அரசன், திருவரங்கன் மீது மிகுந்த ஈடுபாடு உடையவர். திருவேங்கட நாதனை தரிசிக்கச் சென்றால் மீளுவது அறிது என்று கருதிய அமைச்சர்கள் திருமாலிடம் ஈடுபாடுள்ள பாகவதர்களை வரவழைக்க, அரசன் பாகவதர்களை சிறப்பாக உபசரித்தான். இவ்வுபசரிப்பில் மட்டுமே நாட்டம்காட்ட, இவன் ஆட்சிக்குட்பட்ட நாடெங்கும் வைணவ அடியார்களின் கூட்டமும், செல்வாக்கும் பெருகியதைக் கண்ட அமைச்சர்கள் பொறாமைகொண்டு, பாகவதர்கள் மேல் களவுப்பழியினை சுமத்த, அரசனால் அப்பழியை பொறுத்துக்கொள்ள முடியவில்லை அடியார்களின் நற்குணங்களை அறிந்த மன்னன் 'வைணவசிகாமணிகள் இத்தகாத செயலை மனத்தினாலும் கருதார், இது திண்ணம், இதனை உறுதிப்படுத்துவதற்கு யானே பிரமாணம் காட்டுவேன்' என்று கூறி இதனை உறுதிபடுத்த கொடிய நாகம் ஒன்றினைக் கொண்ட குடத்தில் கைவிட்டு 'வைணவ அடியார்கள் மனம், மொழி, மெய்களால் தூய்மை உடையவர்களாயின் இந்நாகம் என்னைத்தீண்டாது. எனக்கூறி கையைவிட நாகம் வாளாது இருந்த செய்தியினை அறியமுடிகிறது.

தான் திருவேங்கட மலையில் ஏதேனும் ஒரு பொருளாக பிறத்தல் போதும் எனவும்,

**"திரு வேங்கடச்சுனையில்**

**மீனாய்ப்பிறக்கும்**

**விதியுடையேன் ஆவேனே"**[4]

எனும் பாடலில் அவரது அவாவினை ஆசிரியர் விளக்கியுள்ளமையை அறியமுடிகிறது.

பெருமானுக்கு அணுக்கத்தொண்டனாய் அவன் வாய்நீருமிழும் பொற்களஞ்சியை ஏந்திக்கொண்டு செல்லும் வாய்ப்புடையவனாக இருந்தால் தான் எளிதில் உள்ளே சென்று விடலாம் என்ற அவாவினைக் கொண்டவர்.

‘எம்பெருமானது திருவருள் நோக்கம் பதியுமாறு அவன் கண்வட்டத்தில் அனைவரும் வேறுபாடின்றி நடமாடும் படியான ஓர் அசேதனப் பொருளாகி அதில் அவனது திருப்பவளத்தினை காணும் படியான அறிவைத்தர வேண்டும்’ என்ற விண்ணப்பத்தினை இறைவனிடம் வைக்கும் விதம் வியப்பிற்குரியது.

**“அடியாரும் வானவரும் அரம்பையடும் கிடந்தியங்கும்**

**படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே”[5]**

இப்பாடலடியே கருவறையின் வாயிற் படி குசேகரன படி என இவரது பெயர் வரக் காரணமாக இருந்தது எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். எப்பிறவி எடுக்க வேண்டும் என்று தோன்றாமல், ஒரு பிறவியினையும் விரும்பாதவராய்,

**“எம் பெருமான் பொன்மலை மேல்**

**ஏதேனும் ஆவேனே”[6]**

என்று குலசேகர ஆழ்வார் தமது ஆசைக்கு தளைகட்டி விடுவதனையும் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

திருவேங்கடவன் மீது குலசேகராழ்வார் கொண்டுள்ள அன்பினையும், பக்தியினையும் அவரது பாடல்கள்வழி அறியமுடிகிறது.

**ஆண்டாள் பார்வையில் திருவேங்கடம்**

திருமாலுக்கு ஆட்பட நினைத்தமையாலும் , திருமாலால் ஆட்கொள்ளப்பட்டமையினாலும் ஆண்டாள் ஆயினாள். இவர் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள் . இவர் பாடிய நூல்கள் திருப்பாவையும், நாச்சியார் திரு மொழியுமாகும். காலம் கி.பி 9-ம் நூற்றாண்டாகும்.

திருவேங்கடவன் மீது கொண்ட காதலால் , ஆண்டாள் மேகத்தினை தூதுவிடுவதாக அமைந்த நாச்சியார் திருமொழியில் அமைந்த பதிகம் ஒன்று ஆண்டாளின் பெருங்காதலை காட்டுவதாக அமைந்துள்ளது என்றும்,

**“கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ”[7]**

என்று திருச்சங்கோடு ஆண்டாள் சொல்லாட அது மறுமொழி பேசவில்லை, திருமாலது பிரிவால் வறுத்தமுறுகின்றாள். தனது நிலையினை திருமாலிடம் கூறுமாறு தூதுவிடுவதனை அறியலாம்.

'வான்கொண்டு கிளர்ந்தமேகங்களே , எம்பெருமான் என்னிடத்துப் பறித்துப்போன கைவளையல்களைத் திருப்பிக் கொடுப்பதாக இருந்தால் என் நிலையைத்தெரிவியுங்கள்' என்று ஆண்டாள் ,

**''தான் கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே''[8]**

மேகங்களிடம் திருமாலது மனக்குறிப்பினை அறிந்து தனது நிலையினைக் கூறுமாறு வேண்டுவதனையும் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

மேகங்களிடம் தனது நலன்களை எல்லாம் பறித்துச் சென்ற நாராயணனுக்கு தனது பசலை நோயினை தெரிவிக்குமாறு வேண்டுகிறாள் என்றும், தேவர்களுக்காக வாமன அவதாரம்பூண்டு, மாபலியிடம் மூன்றடி மண் பெற்ற பெருமான் எழுந்தருளி இருக்கும் தேசத்தில் வாழும் மேகங்களே திருமாலிடம் சென்று தனது நிலையினைக்கூறுமாறு வேண்டுவதனையும் அறியமுடிகிறது.

கார்காலத்தில் தவறாமல் வருவதாக கூறிச்சென்ற திருமால் வராததால் , திருமாலது திருநாமத்தையே உச்சரித்துக்கொண்டிருக்க, இந்நாமமே தன்னை தளர்வடையச்செய்வதாகவும், தளர்ந்த நிலையிலேயே இப்படியே வாழ்நாள்முழுவதும் துக்கமாகவே கழியப்போகிறதா என்று கூறி,

**"ஒருநாளேனும் வாய்ச்சொல் அருளமாட்டாரோ"[9]**

என தனது நிலையினை கூறியுள்ள ஆண்டாளின் திருஉள்ளத்தினை காட்டி, 'நான்கூறிய வார்த்தை கட்டாயம் திருமாலது மனதினை தொடச்செய்யும்'' என்ற கூற்றின் வாயிலாக ஆற்றாமையினை உணரமுடிகிறது.

ஆண்டால் தான் திருமால் மீதுகொண்ட அன்பினையும் தனது நிலையினையும் திருமாலிடம் கூறுமாறு மேகத்தை தூதுவிடுகின்றாள், தனது ஆற்றாமையினையும், தான் கொண்ட காதலையும் தமது பாடலால் தெரிவித்துள்ளதை ஆசிரியர் எடுத்தியம்புகிறார்.

**திருமங்கை ஆழ்வார் கருத்தில் வேங்கடம்**

இவர் சோழநாட்டின் திருமங்கையில் திருக்குறையலூரில் பிறந்தார். வில்லின் அம்சமாகத் தோன்றியவர். சோழ வேந்தனின் தானைத்தலைவனாகத் திகழ்ந்தவர் நீலன். இவர் கள்ளர் குலத்தைச் சார்ந்தவர்.இவரது மகன் கலியன் ஆவான். தந்தைக்கு பிறகு கலியன் ஆலி என்ற நாட்டின் தலைவனாகவும், சோழமன்னனின் தானைத்தலைவனாகவும் விளங்கினார். இவரது மனைவி குமுதவல்லியார் திருமாளிடம் மிகுந்த பக்தி கொண்டவர்.

கலியன் தனது செல்வத்தை எல்லாம் பாகவதர்க்குச் செலவிட அதனால் பொருள் தட்டுப்பாடு ஏற்பட்டது, பிறகு தம் அமைச்சர்களுடன் களவுத்தொழிலில் ஈடுபட்டு பொருளீட்டத்தொடங்கினான். பெருமாள் மணவாளன் கோலத்தில் தனது மனைவியுடன் அணிகளன்களோடு காட்சிதர இவர்களிடம் சிக்கிக்கொண்டு தனது ஆபரணங்கள் அனைத்தையும் கழட்டித்தர கால்விரலில் உள்ள மோதிரத்தை கழட்டமுடியாததால், காலைப்பிடித்து கடித்து அம்மோதிரத்தை வாங்கினான். பிறகு அணிகலன்கள் உள்ளமூட்டையை தூக்கமுடியாமல் அவரிடம் என்ன மாயம் செய்தீர் என்று வாளை எடுத்து அதட்டி கேட்க திருமால், சகலவேத சாரமான திருமந்திரத்தை நர-நாராயணனாய்த் தமக்குத்தாமே சொல்லிக்கொண்டு மணக்கோலத்துடன் மறைந்து காளமேகம் போன்ற மேனியுடன்,

**‘நாடினேன் நாடிநான் கண்டுகொண்டேன்**

**நாராயணா என்னும் திருநாமம்’ (10)**

என்ற பாசுரம் தொடங்கிப் பத்துப் பாசுரங்களிலும் திருவேங்கடவனின் அருட்திறத்தை எடுத்துரைப்பதை அறியலாம்.

திருமங்கையாழ்வார் தான் திருமலைக்குச்செல்லும் பொழுது அம்மலை அழகு அவரது உள்ளத்தை கொள்ளைக்கொள்வதாகவும், ‘எல்லா உலகங்களுக்கும் திலகம்போல விளங்குவது திருமலை’என்று தனது பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளமையினையும், இத்திருமலையில் எண்ணற்ற தீர்த்தங்கள் நிறைந்துள்ளது என்பதை,

‘விண்ணின்று மலைநீரும் பனி நீரும் பெய்யெனப்பெற்றதும் காளமேகங்கள் வந்துபடியும்படியான உயர்ந்து ஓங்கியிருக்கிற சாலைகளால் சூழப்பெற்றதுமான மலை’ என்று குறிப்பிடுவதையும் , ‘வேய்ப்பூம் பொழிசூழ் வரையார் திருவேங்கடம்’ என பல்வேறு சோலைகளையும் அழகுறக் காட்டியுள்ளதையும் காணமுடிகிறது.

**வேங்கடவாணனின் சிறப்பு**

திருமலையில் வாழும் வேங்கடவன் கிருதயுகத்தில் வெளுத்த நிறத்தையும், கலியுகத்தில் கறுத்த நிறத்தையும் துவாரயுகத்தில் சாமள நிறத்தையும் உடையவன் என்றும், இவரை பலன்கள் விரும்பாத முனிவர்கள் வழிப்படுகின்றனர்.

திருமால் பல விரோதிகளை அழிக்க வல்லவர் என்பதனையும், இத்திருமால் கொக்குவடிவமாக வந்த பகாசுரனது வாயை இரண்டாகப்பிளந்தெறிந்தவர், பூதனையிடம் பாலமுதம் பருகி அவளது உயிரையே குடித்தவர், கண்ணனாக தவழ்ந்து சென்று மருதமரங்களை சாய்த்து நளகூபர மணிக்ரீவர்களின் சாபத்தைப்போக்கியவர், இந்திரன் பெய்வித்தமலையால் ஆயர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைப்போக்க குன்றத்தினை கையில் ஏந்தியவர், பாரதப்போரிலே பார்த்தனுக்கு சாரதியாக இருந்து போரினை வெற்றிப்பெறச்செய்தவர். மாபலியிடம் மூவடி மண்கேட்டு இவ்வுலகையே அளந்தவர், இப்படி பல திருச்செயல்களை செய்யும் எம்பெருமான் திருவேங்கட மலையில் எழுந்தருளி இருப்பவர்.

**பாவங்களைப்போக்க வேண்டுதல் :**

‘‘திருமலையில் எழுந்தருளியுள்ள பெருமானே , நீயே எல்லாவித உறவுகளுமாக இருக்க , அது செய்யாமல் தாய், தந்தை, தாரம், சுற்றம், மக்கள் என்று உறவினர் அல்லாதவரை உறவினர்கள் என்று நம்பி துன்பப்பட்டேன் . உண்மையில் எந்தவித ஆற்றலும் அற்றவர்களான அவர்களை வீணே நம்பி மோசம் போனேன் .இப்போது நல்லறிவு ஏற்பட்டு நின்னை வந்தடைந்தேன்’’ என்று திருமாலிடம் ஆழ்வார் தன்னை ஆட்கொள்ளவேண்டும் என்று வேண்டிக்கொண்டதை ஆசிரியர் சிறப்பிட்டு எடுத்துரைத்துள்ளார்.

**ஆழ்வார் தனது அகப், புறப்பற்றுகளை தீக்குமாறு வேண்டுதல்**

‘‘இராவணனால் குடியிருப்பு இழந்து கிடந்த தேவர்கள் யாவரும்களித்து வந்து தொழும் படியான திருவேங்கட மலையிலே எழுந்தருளி இருக்கின்ற எம் பெருமானே! இவ்விருள் தரும்ஞாலத்தின் இருப்பு பெருந்துக்கம் என்றுணர்ந்த என் இடரைப் போக்கியருளாய்’’ ஆழ்வார் இங்கு திருவேங்கடவனை இராமனாக கூறி தனது விண்ணப்பத்தைக் கூறியுள்ளதை விளக்கியுள்ளார். இவர் தனது நெஞ்சில் திருமகளோடு புகுந்த பின்பு அவனது திருவடிகளில் கைங்கிரியம் பண்ணுவது தவிர தான் வேறொன்றும் அறியேன் என இவரது அருள் திறத்தினை ஆசிரியர் கூறியுள்ளார்.

இவ்வாறு திருமங்கை ஆழ்வார் இறைவன் மீதுகொண்ட அன்புள்ளத்தையும், பிற சிந்தனையில் ஈடுபடக்கூடாது என்ற பற்றுள்ளத்தினையும் கொண்ட பக்குவத்தை ந.சுப்புரெட்டியார் விளக்கியுள்ளார்.

**சடகோபன் சிந்தையில் திருவேங்கடம்**

நம்மாழ்வார் கி.பி 9-ம் நூற்றாண்டைச்சேர்ந்தவர். பாண்டியநாட்டின் திருகுருகூர் எனும் ஊரில் பிறந்தார். வேளாண் மரபில் தோன்றியவர். இவரது தந்தை காரியார், தாய் உடையநங்கை ஆவர். இவர் திருவாசிரியம், திருவிருத்தம், திருவாய்மொழி, பெரிய திருவந்தாதி முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

நம்மாழ்வார் அருளிச்செயல்களில் காணப்பெரும் திருவேங்கடத்தைப்பற்றிய பாசுரங்கள் 43 ஆகும்.

**‘‘தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து**

**ஏழில் கொள் சோதி எந்தை தந்தைக்கே’’**[11]

எனும்பாடலில் திருவேங்கட முடையானது திருவடிகளிளேயே எக்காலத்திலும் எத்தேசத்திலும், எல்லாநிலைகளிலும் திருமாலுக்கு கைங்கரியம் செய்யவேண்டும் என்று ஆழ்வார் கூறுவதனை எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

**‘‘உனக்கே நாம் ஆட்செய்வோம்**

**மற்றை நம் காமங்கள் மற்று’’**[12]

என்ற ஆண்டாள் பாடலின் கருத்தும்,

**“தனக்கேயாக என்னைக்கொள்ளும் ஈதே**

**எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே”[13]**

என்ற திருவாய் மொழியினது கருத்தும் உண்மையான கைங்கரியத்தை கூறியுள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார் ந.சுப்புரெட்டியார். ‘எம்பெருமானுக்கே உரியனாகிய நான் எனக்கு உரியன் என்பதழியவேணும், எல்லா அடிமைகளும் செய்யப்பெற வேணும்’ என ஆழ்வார் கூறியுள்ளதனை விளக்கியுள்ளார் ஆசிரியர்.

பக்தர்களது கருத்தில் ‘நம’என்பது ஒரு சிறிய சொல்லாயினும் அதனை ஒருமலையாகவே நினைப்பவன் எம்பெருமான் .இச்சொல்லால் எத்தனையோ பிறப்புகளில் மலை மலையாக குவிந்துள்ள பாவ வினைகளும் நீங்கிப்பெறும். எனவே ‘வேங்கடவன் மேல் வினை முற்றவும் வேம் மெய்’ என ஆழ்வார் கூறுவது பொருத்தமுடையது என்கிறார் ஆசிரியர்.

கீழ்திருவாயில் ஆழ்வார்,

**“கூராழி வெண்சங்கேந்திக் கொடியேன் பால்**

**வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே”[14]**

என்று அளவுக்கு மீறிய பக்தியுடன் பரமபதத்தளவும் கேட்கும் படிக் கூப்பிட எம்பெருமான் மிகவும் தளர்வெய்தி , திருமலையப்பன் திருவடிகளில் பெரிய பிராட்டியார் முன்னிலையாக நீயின்றி எனக்கு வேறுகதியில்லை என்று விண்ணப்பம் செய்து சரண்புகுவதாக ஆழ்வாரது விண்ணப்பத்தினை ஆசிரியர் எடுத்துரைக்கிறார்.

**முதலாழ்வார்கள் காட்டும் திருமலைக்காட்சி:**

திருக்கோவிலூர் எனும் ஊரில் ஒரு வீட்டின் திண்ணையில் பொய்கையார் துயின்றுகொண்டிருந்தார். அப்போது பூதத்தார் சென்று தனக்கு இடம் வேண்டினார் ‘இங்கே ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம் என்று கூற பொய்கையார் இடம் தர பூதத்தாழ்வார் அமர்கின்றார். அப்போது ஒருவர் படுக்கலாம் , இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாம் என்று கூறிப் பேயாழ்வாருக்கும் இடம் தந்தனர்.

இம்மூவருக்கும் இடையில் இன்னொருவர் சேர்ந்து நெருங்குவது போல உணர்ந்தனர், அது திருமால் என உணர்ந்து, தாம் பெற்ற இறையனுபவத்தில் மூவரும் பாடிய நூறு நூறுபாடல்களே முதல் மூன்று திருவந்தாதிகளாக அமைந்ததாகும்.

**பொய்கையாழ்வார்**

திருவேங்கட மலையில் வாழும் குறவர்கள் தங்கள் தினைப்புனங்களில் மேயும் யானையைத்துரத்த பரணிலிருந்து மாணிக்க கட்டியை எறிய யானையின் மீது கண்ட இரத்தினத்தை மின்னல் என எண்ணி, மின்னலுடன் இடி தோன்றுமென அஞ்சி அப்பாம்புகள் புற்றினுள் புகுவதை,

**“மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்**

**எம்மென்னும் மாலது இடம்”[15]**

என பொய்கையாழ்வார் இம்மலைக் காட்சியை சித்தரிப்பதை சுவைபட ஆசிரியர் எடுத்தியம்புகிறார்.

**பூதத்தாழ்வார்**

திருவேங்கட மலையில் உள்ள ஆண்யானை மதப்பெருக்கால் திரிகிறது , வழியில் அது தனது சிறந்த பிடியினைக்கண்டு , அதன்முன் நின்று இரண்டே கணுக்களையுடைய மூங்கில் குருத்தொன்றைப்பிடுங்கி அம்மலையிலுள்ள தேனடையில் தோய்த்து அப்பிடியினது வாயில் வைத்து ஊட்டுவதை ஆழ்வார்,

**“தேன்கலந்து நீட்டும் திருவேங்கடங் கண்டீர்**

**வான் கலந்த வண்ணன் வரை”[16]**

எனும் பாடலின்மூலம் சொல்லோவியமாக் காட்டுகின்றார் பூதத்தாழ்வார்.

**பேயாழ்வார்**

திருவேங்கட மலையில் களிறொன்று தன்பிடியுடன் ஊடல் கொண்டு தனது பேடையை விட்டுப் பிரிகிறது தனது சினத்தால் தனது கொம்பினை மணிப்பாறைகளில் குத்த அதன் கொம்பினின்றும் முத்துக்கள் உதிருகின்றது,

**“விரிந்தசீர் வெண்கோட்டு முத்துதிர்க்கும்**

**வேங்கடமே ! மேலொருநாள்**

**மண்கோட்டு கொண்டான் மலை”[17]**

என்று கூறியுள்ளார். திருமலைகளிலுள்ள பளிங்கு பாறைகளில் தனது நிழலைக்கண்டு தனது எதிரி என மயங்கி அதனோடு போர்புரிகின்றது எனவும் பொருள் கொள்ளலாம் என்கிறார் ஆசிரியர்.

இம்மூன்று ஆழ்வார்களும் திருவேங்கட மலையிலுள்ள அழகிய இயற்கைக் காட்சிகளை சொல்லோவியமாக புனைந்துள்ளனர் என்பதனை ஆசிரியர் சுவைப்படக்கூறியுள்ளார்.

**திருமழிசையாழ்வார் கருத்தில் வேங்கடம்:**

இவர் பிறந்த ஊர் தொண்டைநாட்டு திருமழிசை . இவர் பேயாழ்வாரின் சீடராகி பக்திசாரர் என்ற புதிய திருநாமம் பெற்றதாகவும், இவரியற்றிய ‘திருச்சந்த விருத்தத்திலும், நான்முகன் திருவந்தாதியிலும்’ திருவேங்கடம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன என்றும்,தன்னுடைய உள்ளத்தில் திருமால் நிலைப்பெற்றிருப்பதை,

**‘திற்பதுமோர் வெற்பகத்து’(18)**

என்று திருவேங்கடத்தில் எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் இருப்பதைச் சுட்டியுள்ளார் ஆசிரியர்.

திருவேங்கடவனது மலைச்சிறப்பு, இயற்கை சூழல், திருமாலின் பெருமைகள், பக்தி சிறப்பு ஆகியவற்றை இவ்வியலின் வழி அறியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 78
2. மேலது – 78
3. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் - பா.எண் - 3150
4. மேலது – பா.எண் - 678
5. மேலது – பா.எண் - 685
6. மேலது – ப.எண் - 450
7. மேலது – பா.எண் - 567
8. மேலது – பா.எண் - 581
9. மேலது – ப.எண் -222
10. மேலது – பா.எண் - 948
11. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் -171
12. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் - ப.எண் -223
13. மேலது – பா.எண் - 3102
14. மேலது – பா. எண் - 3539
15. மேலது – பா. எண் -2119
16. மேலது – பா. எண் - 2256
17. மேலது – பா. எண் - 2326
18. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 109

## இயல் 4

## சான்றோர்களின் நோக்கில் வேங்கடம்

வைணவ சமயம் சார்ந்த இலக்கியங்கள் அனைத்தும் திருவேங்கடம் பற்றி பல செய்திகளைப் பதிவு செய்துள்ளது. சிற்றிலக்கியங்கள் பலவும் திருவேங்கடத்தின் பெருமையை பேசுகின்றன. சங்க இலக்கியம் வடவேங்கடத்தை தமிழகத்தின் எல்லையாக வரையறை செய்துள்ளது. சான்றோர்கள் பலராலும் பாடப்பெற்ற திருவேங்கடம் இன்றும் அதன் பெருமை குன்றாது நின்று நிலவுகிறது. திவ்வியகவி, கம்பராமன் போன்றோர் வேங்கடத்தின் புகழ்பாடும் மகத்தான சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளனர். இவர்கள் பாடும் திருவேங்கடம் எத்தகையது என்று சுப்புரெட்டியார் கூறியுள்ளவற்றை இவ்வியலில் காணலாம். திருமலையினது புகழினை வேதாந்த தேசிகர் அவர்கள் தமதுபாடலில்,

**“புண்ணியத்தின் புகலிதென**

**புகளும் வெற்பு**

**பொன்னுலகிற் போகமெலாம்**

**புணர்க்கும் போகமெல்லாம்**

**புணர்க்கும் வெற்பு**

**வேங்கடவெற் பென விளக்கும்**

**வேங்கட வெற்பே”[1]**

எனக் கூறியுள்ளார்.

**“சென்று சேர் திருவேங்கட மாமலை**

**ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே”[2]**

என்ற நம்மாழ்வார் பாடல் இக்கருத்திற்கு அரணாக அமைகின்றது. அழகு சிறந்து காணப்படும் இடங்களில்தான் ஆண்டவன் கோயில் கொள்வான் என்பதற்கு சான்றாக இம்மலையினது இயற்கை அழகினைக் காட்டியுள்ளார்.

**‘‘என் கண்ணை மறந்துன் இரு கண்களையே**

**என்னகத்தில் இசைத்துக்கொண்டு**

**நின் கண்ணால் புவியெல்லாம் நீயெனவே**

**நான் கண்டு நிறைவு கொண்டு’’**[3]

என்று பாரதிக்கு கோவிந்தன் உலகத்தைக்காட்டி தானே இப்பிரபஞ்சம், என்று உணர்த்தியதைப் போல, பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் தம்முடைய கவித்துவத்தால் வேங்கட மலை விண்ணோர்களும் மண்ணோர்களும் எளிதில் அடையக்கூடியவாறு அமைந்துள்ளது என்று சுப்புரெட்டியார் குறிப்பிடுகின்றார். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,

**‘‘துய்ய செம்பொறி கோயிற்**

**சுடரெறிப்பக் கண் முகிழ்த்து**

**வெய்யவன் தேர்மா இடறும்**

**வேங்கடமே’’**[4]

என்ற தமது பாடலில் திருக்கோயிலது விமானம் பொன் மயமானது அதன் சுடர் எம்மருங்கும் வீசி நிற்பதால் வெய்யோனின் தேரில் கட்டிய குதிரைகளின் கண்கள் கூச்சமடைந்து கண் விழிக்க மாட்டாமல் கால்கள் இடறுகின்றன என்பதை எடுத்துக்காட்டி மலையினது உயர்ச்சியினைக் குறிப்பிடுகிறார்.

**திருமலையில் இராசிகளின் காட்சிகள்**

வேங்கட மலையின் உயர்வோடு, பன்னிரெண்டு இராசிகளில் மேஷம், கடகம், சிம்மம், துலாம், கன்னி, கும்பம், தனுசு, மீனம், மகரம் ஆகிய ஒன்பது இராசிகளையும் பொருத்திக்காட்டுவதை ஆசிரியர் விளக்கியுள்ளர்.

**‘‘வாடப்பசித்த வரியுழுவை வாலாட்டி**

**மேடத்தைப் பார்த்திருக்கும் வேங்கடமே"[5]**

வேங்கட மலையில் பசியுடன் புலியொன்று திரிந்து கொண்டிருக்க அது வானத்திலுள்ள ஆட்டுக்கிடாயினது வடிவிலுள்ள மேஷராசியினை பார்த்து சீறுவதாக உள்ள பாடலுக்கு சுப்புரெட்டியார், புலியானது தனது வலிமைக்கும் உணவிற்கும் தகுந்தது இடபராசி. ஆதலால் அவ்வகை வலிமை இல்லாத மேஷ இராசியினைக்கண்டு வெறுப்பதாகக் கூறியுள்ளார்.

**''தாவி வரும் வானரங்கள் தண்குவட்டில் கற்கடம்**

**மேவிவரக் கண்டோடும் வேங்கடமே"[6]**

எனும் பாடலில் மலையில் உச்சியில் உள்ள கடகராசியினைக்கண்டு நண்டுகள், தம்மை பொருந்திவருகின்றன என்று மந்திகள் ஓடும் காட்சியினை திவ்வியகவி பாடலின் மூலம் நமக்கு காட்சிப் படுத்தியுள்ளார்.

**"ஒண் சிந்து ரத்தை வெறுத் தூடும் பிடி வேழம்**

**விண் சிங்கம் கண்டணைக்கும் வேங்கடமே"[7]**

வானத்திலுள்ள சிம்ம ராசியினைக்கண்டு அஞ்சி , ஆண்யானையின் மீது தான் கொண்ட ஊடலையும் மறந்து தானே ஆண்யானையை பற்றுக்கோடாக்கொண்டு தழுவுகிறது என்பதன் மூலம் கவிஞரது சொல்லோவியத்தை வியந்துகூறி, மருத நில உரிப்பொருள் குறிஞ்சி நிலத்தின் கருப்பொருளிடம் காணப்படுவதனையும் விளக்கியுள்ளார்.

கழைக்கூத்தினை, திவ்வியகவி தமது பாடலில் மலைச்சாரலின் மீது ஓங்கி உயர்ந்துள்ள மூங்கிலுக்கு நேராக பெண்வடிவமான கன்னிராசி வருவது கழைக்கூத்தினைப்போல தோற்றம் அளிப்பதாகக் கூறியுள்ளார். ஒரு மூங்கில் வளர்ந்து நிற்க அதற்கு நேராக சுறாமீனது வடிவமான மகரராசி வந்து தங்கும் காட்சி மன்மதனது கொடி மரம் போல காணப்படுவதையும் இவரது பாடல்களால் விளக்கி, மன்மதன் சுறா மீனது கொடியினை உடையவனாதலால் அவனுக்கு தென்மொழியில் 'சுறவக்கொடியோன்' என்றும், வடமொழியில் 'மரகத் வஜன்' என்றும் பெயர்கள் உள்ளதையும் கூறியுள்ளார் .

**“மன்னு குடிகுறவர் வானூர் துலாத்திடையே**

**மின்னு மணி நிறுக்கும் வேங்கடமே”[8]**

அம்மலையில் வாழும் குறவர்கள் தம்மிடம் உள்ள இரத்தினங்களை வானத்திலுள்ள துலாம் இராசியினைக்கொண்டு எடைகாண்பர் என்றும், இக்குறவர்கள் தினைப்புனத்தை மேயவரும் மான்களை வானத்தில் வில்வடிவில் காணப்படும் தனுர் இராசியைக்கொண்டு அம்பு எய்ய முயல்வர் என்றும், திவ்விய கவி கூறியுள்ள சொல்லோவியத்தை வியந்து கூறியுள்ளார்.

வேங்கட மலையில் உள்ள புலியானது அதிரும் குரலையும், திறந்த வாயினையும் கண்டு நிலவில் வாழும் மான் அஞ்சுவதை,

**“ஓண் கொம்பிற் தேன்இறால்**

**ஊர்பிறைக் கேட்டாலுடைத்து**

**விண்கும்பம் வாய் நிறைக்கும்**

**வேங்கடமே”[9]**

திருவேங்கட மலையிலுள்ள மரக்கொம்பு கும்பராசிக்கு மேலுள்ளதென்றும் அம்மரக்கிளையில் தேன்கூடு கட்டப்பட்டுள்ளது. இத்தேனடையில் வானத்தில் செல்லும் பிறைச்சந்திரனது கொம்பு பட்டு உடைகிறது. இதிலிருந்து வழியும் தேன் வானத்திலுள்ள அதற்கு நேராகக் கீழேவந்து பொருந்தும் குடவடிவமான கும்ப இராசியில் நிறைவதைக் குறிப்பிட்டுள்ள திவ்விய கவியினது பாடலைக் கூறி மலையினது உயரத்தினையும் வளத்தினையும் காணலாம் என்று குறிப்பிடுகிறார்.

திருமலையில் உள்ள கோயிலுக்கு அருகில் கோனேரியில் ஒரு குருகு, விண்ணில் தெரியும் மீனராசியினது வடிவம், நீரில் தெரிய அதனை உண்மையான மீன் எனக் கருதி கொத்தி ஏமாந்து செல்வதைக் குறிப்பிட்டு, இராசி மண்டலங்களை விளக்கிய திவ்வியகவி விண்மீன் மண்டலத்திற்கு செல்வதைக் கூறுகின்றார். திரு வேங்கட மலையிலுள்ள பெண்குரங்கு ஆண்குரங்கிடம் ‘மண்ணிலிருக்கும் கிழங்கை உண்ணுவதற்கு பெயர்த்தெடுத்துத் தருமாறு கேட்க,

அதனை வானத்திலிருக்கும் மூலநட்சத்திரம் கேட்டு தன்னைப் பிடித்துத் தர சொன்னதாக அஞ்சி நடுங்குவதை ,

**‘‘மண்மூலம்தா என்று மந்திகடு வற்குறைப்ப**

**விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே’’[10]**

என்ற வரிகள் வழி வேங்கடமலையின் வளமையினை அறியமுடிகின்றது. திருமலையிலுள்ள தென்னை மரத்தில் பாளைகள் வெண்மையாக மலர்ந்திருப்பதைக் கண்டுச் சுனைநீரிலுள்ள மீன்கள் கொக்கு என்று அஞ்சி நீரில் மறைவதை,

**‘‘தண்கமுகின்பாளை தடங்கதிரின் செல்வனுக்கு**

**வெண்கவரி போலசையும் வேங்கடமே’’[11]**

எனும் பாடலடியின் மூலம் வானைத் தொடுமளவிற்கு உயர்ந்துள்ள பாக்குமரம் தேவருலகத்து கற்பகச்சோலைக்கு பந்தல் கால்போலவும், பாக்குமரத்திலுள்ள பாலைகள் கதிரவனுக்கு கவரி வீசுவது போல காட்சியளிப்பதை திவ்விய கவியினது பாடலால் அறியலாம் என்கிறார்.

**வேங்கடவனின் காட்சி**

பெருமானின் திருமேனி வைணவத் தத்துவத்தில் ‘திவ்விய மங்கள விக்கிரகம்’ என்று வழங்கப்படுவதையும், இத்திருமேனியில் சேதநம், அசேதநம் என்ற தத்துவங்கள் பெருமானது ஆபரணங்களாகவும், ஆயுதங்களாகவும் இருப்பதையும் வைணவ தத்துவம் சரீர-பாவனை என்று பேசுவதையும் குறிப்பபிட்டுள்ளார்.

திருமாலின் தோற்றம் முழுவதும் தத்துவங்களின் தொகுப்பாய் விளங்குவதாகக் கூறும் பாடல்,

**‘‘புருடன் மணிவரமாகப் பொன்றா மூலப்**

**பிரகிருதி மறுவாக மான் தண்டாகத்**

**தெருள்மருவாள் உறையாக ஆங்கா ரங்கன்**

**சார்ங்கம்சங் காகமம் திகிரியாக**

**இருடிகள் ஈரைந்தும் சரங்களாக**

**இருபூத மாலைவன மாலையாகக்**

**கருடனுருவாம் மறையின் பொருளாய் கண்ணன்"**[12]

என்று வேதம் கருடனுடைய உடலாக உள்ளது. இவ்வேதத்தின் பொருளாய் விளங்குபவன் பெருமான். இவனுடைய திருமேனியில் சீவான்மா கௌத்துவமாகவும், மூலப்பிரகிருதி ஸ்ரீவத்சம் எனும் மறுவாகவும், மான் என்னும் தத்துவம் நாந்தகம் எனும் வாளாகவும், சார்ங்கம் எனும் வில்லாக, சாத்துவிக அகங்காரமும், திருச்சங்காக தாமசஅகங்காரம், பாஞ்சசநியம் எனும் திருவாழியாகவும், ஞானேந் திரியங்கள் ஐந்தும் கருமேருதிரியங்கள் ஐந்தும் அம்புகளாகவும், பூதங்கள் ஐந்தும் வனமாலையாகவும் அமைந்துள்ளது. இங்கு அனைத்து தத்துவங்களையும் எம்பெருமானுக்கு ஆபரணமாகவும் ஆயுதங்களாகவும் திகழ்வதை வேதாந்த தேசிகர் தமது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளதைச் சுட்டுகின்றார்.

**"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**

**இறைவனடி சேரா தார்"**[13]

என்று வள்ளுவர் கூற்றினை கூறி சரணம் அடைகின்ற உயிர்களுக்கு எல்லாம் உறுதுணையாக இருப்பது பெருமானது திருவடியே என்றும் இறைவனது திருவடிகளில் சேர்வது அடியேனது தன்மைக்கு இயல்பாக அமைவது என்றும் அவர் வலியுறுத்துவதை,

**"மகிழ்ந்து வணங்கும் சமதர்மன்**

**நேயத் திருவடி மாலை தனை**

**நிதம்கற் போர் நின் அருள் பெறுவர்"**[14]

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது.

திவ்விய கவி தமது 'திருவேங்கடத் தந்தாதி என்ற நூலில்' பாதவகுப்பாக,

**"வருவேங்கடத்தும் பியலஞ்சலென்**

**றேளடினம் மால்கழலே"[15]**

என்று திருவடியினது ஏற்றத்தினைப் போற்றிப்பாடியுள்ளார்.

முத்தமிழ்க் கவியின் ஊர் செங்கல்பட்டுக்கு அருகிலுள்ள களத்தூர் ஆகும். இவர் அந்தக்கவி வீரராகவரின் மகள் வயிற்றுப் பேரன் ஆவார். இவர் திருவேங்கடக் கலம்பகம் எனும் சிற்றிலக்கியத்தினை இயற்றியுள்ளார்.

திருவேங்கடமலையின் மீதும், அம்மலையின் மீது கோயில் கொண்டுள்ள திருவேங்கடமுடையானிடம் காதல் கொண்ட ஆசிரியர் ஒரு திருப்பாடலில் தான் திருவேங்கடமுடையானைப் பாடுவதற்குக் காரணம் கூறியுள்ளார். அதாவது ஆழ்வார் பெருமக்கள் அனைவரும் 'நாக்கொண்டு மானிடம் பாடாத' புண்ணிய சீலர்கள். இக்காலத்துப் புலவர் போலவே இப்புலவர் பெருமானும் சில்வாழ் பல்பிணிச் சிற்றுயிர்களை ஓரொரு கால் பாடியிருக்கலாம் அந்த அழுக்கு நாக்கினின்றும் நீங்குவதற்காவே திருவேங்கடமுடையானின் திருநாமத்தைப் பாடி துதிப்பதாக, முத்தமிழ் கவி கூறுவதையும்,

**"நாச்சுத்தம் மேவுவதற்கு**

**நான் ஆசையால் துதி செய்தேன் உன்**

**புண்ணிய நாமத்தையே"[16]**

என்ற பாடலின் வாயிலாக அறியலாம். இதனால்தான் இவர் பாடிய 'கலம்பக மாலை', 'பக்தியின் துதி பாடின மாலை' ஆகின்றது என்று சுப்புரெட்டியார் கூறுகின்றார்.

**"எண்ணார்க் கிருளன்ன வேங்கடத்**

**தான் தொண்டர் ஏவற்றொழில்**

**பண்ணாசைத் தொண்டரவர் தொண்டர்**

**தொண்டர் பதமலரே"[17]**

என்ற பாடலின் மூலமாக தன்னை தொண்டருக்கும் தொண்டராகக் கூறி வைணவ மரபினராகப் புலப்படுத்தியமையினை சுட்டிக் காட்டியுள்ளார் .

தேவருலகத்து கற்பக மலரைவிட, திருவேங்கடமுடையானின் திருப்பாத மலரை தான் விரும்புவதாகக் கூறி தமது ஆழ்ந்த வைணவப்பற்றினை கூறியுள்ளதனை காணும்போது,

**"ஆனாத செல்வத்து**

**அறம்பையர்கள் தற்சூழ**

**வான் ஆளும் செல்வமும்**

**மண்ணரசும் யான் வேண்டேன்"**[18]

எனும் குலசேகரப் பெருமானது வாக்கினையும்,

**"இந்திர லோகம் ஆளும்**

**அச்சுவை பெறினும் வேண்டேன்**

**அரங்கமா நகருள்ளானே"**[19]

என்ற தொண்டரடிப் பொடிகளின் பாசுரத்தையும் நினைக்கச் செய்வதாக ஆசிரியர் பதிவுசெய்துள்ளார்.

**திருவேங்கடத்தின் பெருமை**

குலசேகரப் பெருமாள் தான் திருவேங்கடத்தில் பிறத்தலே தனக்குப் போதும் என்றுரைப்பதை,

**"ஆலத்து அரங்கத்து ஐவாய்ப்பொறிப்**

**பாம்பில் அக்கயிலை**

**போலத் தரங்கத்தை வீசு**

**ஆழியில் துயில் புங்கவர் பைங்**

**கோல் அத்தர் அங்கு அத்தை நன் மகற்கே**

**பண்டு கூறும் முத்தி**

**நூல் அத்தர் அங்கத்தை ஏந்தளன்**

**வேங்கடம் நோற்றதுவே''**[20]

எனும் பாடலில் 'ஆலிலையிலும் திருவரங்கத்திலும் ஆதிசேடனிடத்தும், திருப்பாற்கடலிலும், அறிதுயில் கொண்டிருக்கின்றவரும், அத்தை மகனான பார்த்தனுக்கு முற்காலத்தில் உபதேசித்தருளிய வீடுபேற்றைத் தர வல்ல கீதையை தந்தவனுமாகிய எம்பெருமானது திரு மேனியைத் தரிசித்தற்குத் திருவேங்கடமலை என்ன தவம் செய்ததோ?" என்று கூறுவதனையும் சுட்டியுள்ளார்.

**''மொழிமன்ற முடிமேல் எழுமுதல் அதுவே**

**செழுவட மலைவாழ் விழுமிய பொருளே''**[21]

என்ற பாடலின் மூலம் வேதவிழுப் பொருளே வேங்கட மலையில் எழுந்தருளியிருப்பதாகவும், வடமலையில் வாழும் தேவருக்கு ஏற்படும் பெருமைகளாகவும், ஏழுமலையானுக்கு ஆட்படுபவர்கள் வைகுந்த பதவி பெறுபவராகவும் என்று கூறி திருவேங்கடமுடையானின் திருவடிப் பெருமைகளைப் பறைசாற்றுகின்றார்.

**''புயங்கமல**

**நேரு நாட்டத்தன் நிலமேல் அமருலகத்**

**தாருநாட்டத்தன் சரண்''**[22]

வேங்கட மலையில் உள்ள வேங்கடநாதனின் திருவடியை தொழுது வணங்கினால் பிறவித்துன்பங்களால் உண்டாகும் அச்சம் நீங்கும் என்று முத்தமிழ்க் கவி கூறியதனை விளக்கியுள்ளார் .

நித்திய சூரிகளும், அசுரர்களும், முனிக்கணங்களும் விரும்பும் திருவேங்கடவனை நாம் சேவிக்கத் தெவிட்டாமல் ஆராவமுதமாக நமக்கு சேவை சாதிக்கிறான். மேலும் இவரை வழிபடும் பொழுது வைகுந்தத்தில் இருப்பது போன்ற உணர்வு ஏற்படுவதாகவும், சகல பாக்கியங்களும் கிடைப்பதாகவும் பரமபதத்தில்

நமக்கு இடமுண்டு என்றும் சுப்புரெட்டியார் கூறியுள்ளார். இத்தகைய பெருமையினையும் சீர்மையினையும் உடைய அரவக்கிரியோனுக்கு ஆட்பட்ட முத்தமிழக் கவிஞர் ‘மறந்தும் புறந்தொழா’ நிலையினைக்குறிப்பிட்டு ‘வேதாந்தங்களைக் துதியாமல் பரதேவதையயாகிய நினக்கே தொண்டு பூண்டு ஒழுகுகின்ற எங்களை காத்தருள வேண்டும்’ என்று கூறுவதனை ஆசிரியர் எடுத்தியம்புகின்றார் .

**கம்பனது கருத்தில் திருவேங்கடம்**

கிட்கிந்தா காண்டத்தில் ‘நாட விட்ட படலத்தில்’ இராமனது கட்டளையின் படி சுக்ரீவன் சீதையை தேட நாற்றிசையிலும் வானரப்படைத் தலைவர்களை அனுப்புகிறான். பிறகு சுக்ரீவன் தென்திசையில் சீதை இருப்பதை அறிந்து, வேங்கட மலையைப்பற்றி சற்று விரிவாகக் கூறுவதை,

**“புடைசுற்றும் துணையின்றிப் புகழ் பொதிந்த**

**மேய்யே போல் பூத்து நின்ற**

**அடை சுற்றும் தண் சாரல் ஓங்கியவேங்**

**கடத்திற் சென்றடைதிர் மாதோ”**[23]

என்ற பாடலால் அறியலாம்.

சமஸ்கிருதம், ஆதியில் திருவேங்கட மலைக்கு வடப்புறத்திலுள்ள பல பகுதிகளில் மிகுதியாக விளங்கி வந்ததால் வட மொழி என வழங்கப்பட்டது. மேலும் அம்மலைக்கு தென்புறத்தில் தமிழகத்தில் தென்மொழி என வழங்கப்பட்டது. இவ்விரண்டு மொழிகளுக்கும் மிகுதியாக வழங்கும் நிலங்களுக்கிடையே இருக்கும் எல்லையைக் குறிப்பதால் வேங்கட மலையை ‘வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்று’ என்று கவிஞர் கூறுவதை விளக்கியுள்ளார் .

மேலும் இம்மலையின் அறங்களெல்லாம் சிறப்பான முறையில் அமைந்துள்ளதை ‘நல்லறத்தின் ஈறு’ என்ற சொற்றொடரால் குறித்துள்ளதையும் சுட்டுகிறார் ஆசிரியர் .

தென் திசையை நோக்கிச்செல்லும் வானர வீரர்கட்குத் திருமலையிலுள்ள மாமுனிவர்களின் பெருமையை அருக்க மைந்தன் பேசுவதாக அமைந்த பாடல்,

**“முறையொப்பத் தெளிந்து நோக்கிக்**

**கருவினைய திப்பிறவிக் கொன்றுணர்ந்தங்**

**கதுகளையும் கடையின் ஞானத்து**

**அருவினையின் பெரும் பகைஞர் ஆண்டுளரீண்**

**டிருந்தும் அடி வணங்கர் பாலார்”**[24]

என்ற பாடலில் அம்மலையில் வாழும் முனிவர்கள் தீவினை நேர்வதற்குரிய எச்செயல்களையும் செய்யார். தீவினை, நல்வினை என்ற இருவினைகளையும் வீடுபேறு அடைவதற்குத் தடையாக நிற்பவை என்ற உண்மையை அறிந்தவர்கள். இவ்வினைகளே மனத்தாலும், செயலாலும், சொல்லாலும் செய்யப்பெறும் புண்ணிய பாவங்கள் என்றும், பழவினை, நுகர்வினை, எதிர்வினை என்று மூவகைப்படும் வினைகளையும், தத்துவ உண்மைகளையும் தெரிந்து தெளிந்தவர்கள் திருமலையில்வாழும் முனிவர்கள் என்பதையும் அறியமுடிகின்றது. தாம் இருந்த இடத்திலிருந்தே திக்குநோக்கித் தண்டம் சமர்ப்பிப்பதற்குரிய பெருமையுடையவர்கள். திருவேங்கடமலையினை நெருங்கிய உடனேயே அப்புனித தலத்தின் மகிமையால் பாவங்கள் யாவும் மறைந்து வீடுபேறுகிடைத்துவிடும். எனவே இம்மலையினை வணங்கிவிட்டு, விலகிச் செல்லுமாறு அறிவுறுத்துகின்றான் வானவேந்தன். மேலும் இம்மலை தூய்மை மிக்கதால் இராவணன் அங்கு சென்றிருக்கமாட்டான் என்பது உறுதி என்பதனையும் குறிப்பால் புலப்படுத்துகிறார் ஆசிரியர்.

சீதாபிராட்டியைத் தேடி தெற்கு திசை நோக்கிச்சென்ற வான வீரர்கள் அருந்ததி மலை, மரகத மலைகளைக் கடந்து திரு மலைக்கு வருகின்றனர். இந்த நிலையில் கம்பன் திருமலையினது சிறப்பினைக் கூறியுள்ளார்.

முனிவரும், தேவர்களும், தேவகணங்களும், தத்துவஞானிகளும் தெய்வ மகளிரும், எப்பொழுதும் அருவி நீரில் நீராடுவதையும், அங்குள்ள புண்ணிய

தீர்த்தங்களை மனதில் கொண்டு கவிஞன் நீராடு துறைகளைக் குறிப்பிட்டுள்ளதை ஆசிரியர் தெளிவுபடுத்துகிறார்.

மேலும் திருவேங்கட மலையை அடைந்தவர்களுக்கு வீடுபேறு கிடைக்கும் என்பதை,

**“விலங்கும் வீடுகின்ற மெய்ந்நெறிப்**

**புலன்கொல் வார்கட்கு அனையாது பொய்க்குமோ”[25]**

எனும் பாடலில் அம்மலையில் உள்ள விலங்குகளும் வீடு பேற்றினை அடையும் எனும் பொழுது சன்மார்கத்தில் முழுகுகின்ற தத்துவஞானம் உடையவர்களுக்கு வீட்டுலகம் கிடைப்பது தவறுமோ, என்ற கம்பனது சொல்லாக்கத்தைக் கூறியுள்ளார் ஆசிரியர்.

அம்மலையில் வாழுபவர்கள் திருவேங்கடமுடையானை எப்போதும் வணங்கக்கூடிய பரிசுத்தமான சிறந்த தவத்தை மேற்கொண்டிருப்பவர்கள். அவர்களது திருவடியை வானவீரர்கள் தலையில் கொண்டு வணங்கியதை கம்பர்,

**“நாய கன்றனை நாளும் வணங்கிய**

**தூய நற்றவர் பாதங்கள் சூடினான்”[26]**

என்று கம்பனது வாக்கால் திருவேங்கடத்தினது பெருமையை எடுத்தியம்புகிறார் ஆசிரியர்.

**கம்பராமனது கருத்தில் திருவேங்கடக்காட்சிகள்**

‘திருவேங்கடம் உடையான் திருவாயிரம்’ எனும் நூல் பல சிற்றிலக்கியங்களைக் கொண்ட திரட்டுநூல். இந்நூல் திருவேங்கடமுடையான் மீது பாடப்பட்டது. இந்நூலினை எஸ்.கே.இராமராசன் எழுதினார். இவரை தமக்கு பத்து வயதாக இருக்கும்பொழுதே தான் அறிவேன் என்றும், வித்துவான் நுழைவுத்தேர்வு எழுதும்பொழுதே கவிபாடும் திறன் பெற்றிருந்ததையும் திருமாலின் மீது பக்தியும் துளசிமணம்போல இவரிடம் இயல்பாக அமைந்திருந்ததையும் கூறி, இவர் எழுதிய

சிற்றிலக்கிய தொகுப்பில் திருவேங்கடம் இடம்பெற்றிருக்கும் சிறப்பினைச் சுட்டுகிறார்.

**திருப்பல்லாண்டு**

**“பல்லாண்டு பல்லாண்டு நின் கொற்ற மார்பின்**

**படித்தோங்கு கருணை வடிவே”**[27]

என்று, வேங்கடவர்க்கும் இவரது திருமார்பில் உறைந்திருக்கும் பிராட்டிக்கும் பல்லாண்டு பாடியுள்ளார் .

**திருப்பாவை**

ஆண்டாளது திருப்பாவையின் சாயலில் அமைந்துள்ள இவரது திருப்பாவையிலும்,

**“வேங்கடத்து மேவும் விமலன் அர்ச்சுனர்க்குப்**

**பாங்குடை கீதைபகரும் பரஞ்சோதி”**[28]

நோன்பு இயற்றுவதற்காக ‘நீராடப் போதுவீர்’ என்று குறிப்பாக ஆயர் குலச்சிறுமியர் அழைப்பதை ஆசிரியர் கூறியுள்ளார்.

**திருப்பள்ளி எழுச்சி**

இராமராசன் பாடிய திருப்பள்ளி எழுச்சியில் திருவேங்கடவனைத் துயிலெழச்செய்கின்றார்.

**“துங்க நன்னலமருள் வேங்கடச்செல்வா!**

**சுந்தரனே! பள்ளி எழுந்தருளாயோ”**[29]

என்ற பாடலினைக்கூறி இப்பாடலில் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளிஎழுச்சியிலுள்ள முதற்பாடலின் சாயல் தென்படுவதாக கூறியுள்ளார் ஆசிரியர்.

**அலங்காரம்**

அலங்காரம் எனப்படுவது சிற்றிலக்கியம் ஆகும். இச்சிற்றிலக்கியத்தை,

**"விருந்தே தானும்**

**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"[30]**

என்று தொல்காப்பியர் கூறும் 'விருந்து' எனும் வகையில் இதனை அடக்கலாம்.

**"சினக்கும் இரணியன் மார்பைப்**

**பிளந்து, தெளிந்த மறை**

**தனக்கும் புவிக்கும் உயிர்ப்பருள்**

**வேங்கடத் தற் பரனே"[31]**

எனும் கம்பராசனின் பாடலில் 'எம்பெருமானுக்கும் உயிருக்கும் இடையில் , வினைவயத்தால் தோன்றும் மறைக்கும் மனத்திரையைக் கனக்கும் கருணைக்கரத்தால் கனிந்து நீக்கியருளுமாறு' ஆசிரியர் வேண்டுவதை சுப்புரெட்டியார் விளக்கியுள்ளார்.

**பிள்ளைத்தமிழ்**

பிள்ளைத்தமிழ் என்பதை தமிழில் பிள்ளைப்பாட்டு என்பர். குழந்தைப் பருவத்தை பத்துப் பகுதிகளாக பிரித்துப் பகுதிக்கு பத்தாக நூறுபாடல்களாகப் பாடப்பெரும் பிரபந்தம் ஆகும். இவ்வாசிரியரது ஒரு பாடலினை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

**"அருள்சேர் வழியில் புனல் பெருக்கிக்**

**குருகா புரியார் மறைக்கேட்கும்**

**கோவே தாலோ தாலேலோ"[32]**

எனும் பாடலில் திருவாய் மொழியினது பெருமை இப்பாடலில் கூறியுள்ளதை சுட்டியுள்ளார் ஆசிரியர்.

**திருக்கலம்பகம்**

கம்பராமன் ஏழுமலையான்மீது ‘திருக்கலம்பகம்’ பாடியுள்ளார். இக்கலம்பகத்தில் திருவேங்கடமுடையானை வர்ணிக்கும் கொச்சகம் தலைவியது கூற்றாக வந்துள்ளதையும் கூறியுள்ளார்.

இராமராசன் பாடல்களில் ஆழ்வார் பாசுரங்களின் சாயலும், கம்பனின் சொல்வளமும் மிளிர்வதையும் அறியமுடிகின்றது. தனது வாழ்வில் கலங்கரைவிளக்கமாக வழிக்காட்டியவன் பன்மொழிகுரிசில் திரு.வே.வேங்கடராஜலு ரெட்டியார் ஒருமுறை தம்மிடம் ‘திருத்தக்க தேவரையும் கம்ப நாட்டனையும் ஒருசேர உருக்கி வார்த்தமையைப் போன்றவன் நம் இராமராசன்’ என்று கூறியுள்ளதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

**திருவேங்கடவன் மாலையில் வேங்கடேசன்**

மணவாள மாமுனிகளின் காலத்திலோ அல்லது அவர் காலத்திற்குச் சற்றுப் பின்னரோ வாழ்ந்த ஒரு வைணவ பக்தரால் திருவேங்கடவன்மீது பாடப்பட்டது. ஸ்ரீவேங்கட ஸுப்ரபாதம், ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்திரம், வேங்கடேச பிரபத்தி, ஸ்ரீவேங்கடேச மங்களாசாஸனம் இந்நான்கு வடமொழி நூல்களின் தமிழ் மொழிப்பெயர்ப்பே ‘திருவேங்கட மாலை’ எனும் தமிழ் மொழிப்பெயர்ப்பு ஆகும். இத்திருவேங்கட மாலையில் அடங்கியுள்ள ‘திருவேங்கடவன் திருப்பள்ளி எழுச்சி, திருவேங்கடவன் துதி, திருவேங்கடவன் திருவடித் துதி, திருவேங்கடவன் மங்கள வாழ்த்து’ என்ற நான்கு நூல்களும் ஆகும்.

இத்தொகுப்பு நூலினை பத்ம விபூஷ்ண மகாவித்துவான் பிரதிவாதி அண்ணங்கராசாரிய சுவாமிகள்களின் ஆசியுரை அணிசெய்வதையும், இந்நூலில் இஃது ஒரு மொழிபெயர்ப்பு என்று தோன்றாவண்ணம் அமைத்திருத்தல் சிறப்புடையது என்றும் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

**1. திருவேங்கடவன் திருப்பள்ளி எழுச்சி**

இறைவனைத் துயில் எழுப்பும் மரபினை ஒட்டி வடமொழியில் சுப்ரபாதம் போல ஏழுமலை யானை எழுப்புவதாக அமைந்த பாடல்,

**“கருமை எமக்கே உரிமை எனக்கழறி**

**உரக்க முரலும் ஒவர் முழங்கால்**

**திருவேங்கடவர்! திருக்கண் மலர்க!”[33]**

எனும் பாடல் பிற பள்ளியெழுச்சி பாடல்கள் போலவே அமைந்துள்ளதை எடுத்தியம்புகிறார்.

2. **திருவேங்கடவன் துதி**

இது மொழிபெயர்ப்பு நூல் தமிழில் தோத்திரப் பாக்கள் போல பக்திச் செல்வத்துடன் இந்நூலும் சேர்கிறது. தமிழில்

**“உலகின் இறையே! உத்தம தேவா!**

**விமலா! வேங்கட நாதா! வெல்க! (34)**

வடமொழிப் பாடல் பெற்று வரும் தாள அமைப்பில் இதனையும் பாடலாம் என்று ஆசிரியர் கூறியுள்ளார்.

3. **திருவேங்கடவன் திருவடித்துதி**

ஸ்ரீவேங்கடேச பிரபத்தி என்ற வடமொழி நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு ‘பிரபத்தி’ என்ற வடசொல்லிற்கு தமிழில் ‘அடைக்கலம்’ என்று பொருள். திருமங்கையாழ்வாரின்’ திருவெழுக் கூற்றிருக்கை சரணாகதி தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. இம்மரபினை மணவாள மாமுனிகளின் சீடர்களில் ஒருவர் பாடிய வேங்கடே பிரபத்தி சரணாகதி தத்துவத்தைக் கொண்டிருப்பதாகக் கூறியுள்ளார். இந்நூல் 6 பாடல்களைக் கொண்டது.

4. **திருவேங்கடவன் மங்கள வாழ்த்து**

இந்நூல் 14 பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் திருவேங்கடவா! தேவனே! மங்களம்! என்று அமைந்துள்ளது. வடமொழிப் பாடலில் இறுதி மட்டும் பிராட்டியாரின் ஸ்ரீநிவாஸாய மங்களம் என்பதற்கேற்ப தமிழ்ப் பாடலில் அதற்கேற்ற வடிவம் பெறுகிறது.

இந்நான்கு வடமொழி நூல்களிலும் ஆழ்வார் பாசுரங்களின் செல்வாக்கு நிழலாடுவதையும், வடமொழிப்பயிற்சி இல்லாதவர்கள் கூட தமிழ்க்கவிதை

வடிவத்தில் திகழும் திருவேங்கடவன் மாலை எனும் நூலைப்படித்தால் பக்தி பெருகும் என்று உரைக்கிறார்.

## சான்றெண் விளக்கம்

1. தேசிக பிரபந்தம் உரை –பா.எண்- 82
2. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் -பா. எண்- 3150
3. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 202
4. மேலது – ப. எண்- 203
5. மேலது – ப. எண்- 203
6. மேலது – ப. எண்- 204
7. மேலது – ப. எண்- 204
8. மேலது – ப. எண்- 206
9. மேலது – ப. எண்- 207
10. மேலது – ப. எண்- 208
11. மேலது – ப. எண்- 210
12. மேலது – ப. எண்- 214
13. பதினெண் கீழ் கணக்குநூல்கள் - தொகுதி1- கு.எண்- 9
14. திருவேங்கடவன் திருவடிமாலை – பா.எண்- 101
15. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 217
16. திருவேங்கட கலம்பகம் - பா.எண் - 99
17. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 233
18. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் -பா. எண்- 678
19. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் -பா. எண்- 873
20. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 237
21. மேலது - ப.எண் - 240
22. மேலது – ப. எண் - 241
23. கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்- ப.எண் - 598
24. கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்- ப.எண் - 600
25. கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்- ப.எண் - 706
26. மேலது – ப.எண் -705

27. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 262
28. மேலது – ப.எண் - 263
29. மேலது – ப.எண் - 265
30. தொல்காப்பியம் -பொருளதிகாரம்- நூற். எண் - 239
31. வடவேங்கடமும் திருவேங்கடமும் - ப.எண் - 266
32. மேலது – ப.எண் - 268
33. மேலது – ப.எண் - 277
34. மேலது – ப.எண் - 279

## முடிவுரை

தொல்காப்பியப் பாயிரம் கூறும் வடவேங்கடம் என்பது தற்போது திருவேங்கடம் என்றுவழங்கப்படும் திருப்பதிமலை அன்று என்பதை ந.சுப்புரெட்டியார் பலசான்றுகள் வாயிலாக வரையறுத்துக் கூறியுள்ளார்.

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் இடம்பெறும் ஆழ்வார் பாசுரங்களில் திருவேங்கடம் பற்றிய பாசுரங்களைக் குறிப்பிட்டு வேங்கடவனின் சிறப்புகளை நயம்பட உரைத்துள்ளார்.

அழியாத செல்வத்தை அளிக்கவல்ல திருவேங்கடம் பற்றிய பிற வைணவச் சான்றோர்களின் இலக்கியங்கள் வாயிலாக வேங்கடனின் பெருமைகள் அறியப்படுகின்றது.

இந்நூலின் வாயிலாக ந.சுப்புரெட்டியார் அவர்களின் ஆழமிக்கத் தமிழறிவும் வேங்கடவன்பால் கொண்ட பக்தியும் வெளிப்படுகின்றது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரம்


01. சுப்புரெட்டியார். ந — வடவேங்கடமும் திருவேங்கடமும்
பாரி நிலையம்,
சென்னை – 08
முதற்பதிப்பு 1992


## துணைமை ஆதாரங்கள்


01. அண்ணங்கராசாரியசுவாமிகள் — திவ்வியார்த்ததீயிகை
கிரந்தமாலாஆபீஸ்
காஞ்சிபுரம் - 2

02. ஆழ்வார்கள் விழாமலர் — அருள்பாடுஅரங்கநாதசுவாமி திருக்கோவில்
திருச்சி

03. ஆனந்தன். சு — தமிழ் இலக்கிய வரலாறு
கண்மணி பதிப்பகம்
திருச்சி – 620 002
முதற்பதிப்பு, ஜுன் 2002

04. இராகவையங்கார் — ஆராய்ச்சிதொகுதி
திருமகள் நிலையம்
சென்னை

05. இராமராசன்.எஸ்.கே. — திருவேங்கடமுடையான் திருவாயிரம்
கழகவெளியீடு

06. கதிர் முருகு — பத்துப்பாட்டு மூலமும் உரையும்
சாரதா பதிப்பகம்
சென்னை

07. கழகப் புலவர்கள் — நன்னூல் (கண்டிகையுரை)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
முதற்பதிப்பு 1982

08. கிருஷ்ணவேணிஅம்மையார்.எஸ் — செம்பொருள்
திருமலை திருப்பதி தேவஸ்தானம்

09. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் — கம்பராமயணமம
திருமகள் நிலையம்
சென்னை
முதற்பதிப்பு 2006

10. கோவேந்தன் நாலாயிரத் திவ்வயப் பிரபந்தம்
சாரதாபதிப்பகம்
சென்னை
பதிப்பு 2015

11. கௌமாரீஸ்வரி. எஸ் திருக்குறள்
சாரதாபதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2010

12. தொல்காப்பியர் தொல்காப்பியம்
மாணிவாசகர் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 1998

13. பாக்கியமேரி இலக்கணம் இலக்கிய வரலாறு
மொழித்திறன்
பூவேந்தன் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2013

14. புலியூர்க்கேசிகன் பரிபாடல் மூலமும் உரையும்

கிராபிக்ஸ்
சென்னை, முதற்பதிப்பு 2004

15. புலியூர்க்கேசிகன் — அகநானூறு மூலமும் உரையும்
ஜிவாபதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2004

16. மாணிக்கவாசகர். ஞா — புறநானூறு
உமாபதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2005

17. மாணிக்கவாசகர். ஞா — சிலப்பதிகாரம்
உமாபதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2005

18. வேங்கடராமன் (உ.ஆ) — நற்றிணை
உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்
சென்னை
முதற்பதிப்பு 1989

19. ஜெகதீசன். சு

குறுந்தொகை ஆய்வுக்கோவை

குறிஞ்சிப் பதிப்பகம்

ஆம்பூர் - 02

முதற்பதிப்பு 2005

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

# கவிமணியின் தமிழ்ப்பணி — ஒரு மதிப்பீடு




பேராசிரியர் முனைவர்

ந சுப்பு ரெட்டியார்



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publication*

# கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முதுகலைத் தமிழ்

இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

**சி. ஸ்ரீ வித்யா**

**பதிவு எண் : P18100422**

**நெறியாளர்**

**முனைவர் தி. மணிமொழி, எம்.எ., எம்.பில்., பி.எச்.டி.,**

**உதவிப்பேராசிரியர்**

**தமிழாய்வுத்துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**






**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் (மூன்றாம் சுற்று)**

**A தகுதி (CGPA 3.41/4) பெற்றது**

**திருச்சிராப்பள்ளி – 620 018**

**மார்ச் - 2020**

## நன்றியுரை

சுப்புரெட்டியார் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி என்ற தலைப்பில் இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)க்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றேன்.

எங்களை வழிநடத்திச் செல்லும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ. சுஜாதா அம்மா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். மேலும் எம் தமிழாய்வுத் துறைத் தலைவரும் துணைமுதல்வருமான முனைவர் ச. இராமலட்சுமி அவர்களுக்கும், இவ்வாய்வுக்கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வுத் தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழிநடத்திய எம் நெறியாளர் முனைவர் தி.மணிமொழி அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்து உதவித்தொகை நல்கிய காமாட்சி அம்மாள் ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வுக் காலத்தில் எனக்கு ஊக்கமளித்த தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எம் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

என் ஆய்விற்கு உதவிய என் தந்தையார் ஆ. சிவக்குமார் எனது சகோதரன் சி.சந்தோஷ் எனது தாயார் சி. செல்வராணி அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

எனக்கு துணை நின்று பல உதவிகளை செய்த தோழிகளுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைச் செம்மையாக கணினி தட்டச்சு செய்து கொடுத்த செல்வி பா.சரண்யா அவர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வாளர் கையொப்பம்

சி. ஸ்ரீ வித்யா

## பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1) | கவிமணியின் தமிழ்ப்பணி | 4 |
| 2) | படிமங்கள் | 20 |
| 3) | பண்பாட்டு கூறுகள் | 29 |
| | முடிவுரை | 45 |
| | துணைநூற் பட்டியல் | 46 |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.அ | - | உரையாசிரியர் |
| கு.எ | - | குறள் எண் |
| தெ.ஆ | - | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ. எண் | - | நூற்பா எண் |
| நூற் | - | நூற்றாண்டு |
| பா.அ | - | பாடல் அடி |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| ப.எ | - | பக்க எண் |
| பா.எ | - | பாடல் எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழகத்தின் மூத்த தமிழறிஞர் ஆவார். அவர் நூறு நூல்களுக்கு மேல் எழுதிய பெருமைக்குரியவர். பல்வேறு துறைகளில் ஆழங்கால்பட்டவர். தமிழ் ஆய்வு வளர்ச்சியில் தம்முடைய 87வது அகவையிலும் அயராது உழைத்து தமிழன்னைக்கு பல்வேறு நூல்களை வழங்கியுள்ளார். அவருடைய படைப்புகளில் ஒன்றாக முகிழ்த்தது **கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு** என்னும் நூல். இந்நூலை எழுதிய பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களுக்கு காந்தியடிகளின் வாழ்க்கை பெரிதும் ஈர்த்தது. 1942 ஆகஸ்ட் புரட்சியில் அவர் மனம் ஒன்றினார். 1943 முதல் தந்தை பெரியாரிடம் ஈடுபாடு கொண்டு நேரில் பழகியவர். ஆதலால் சுயமரியாதை இயக்கத்தின் மீது பற்று கொண்டிருந்தார். மேலும் பேராசிரியர் அவர்களுக்கு பாவேந்தர் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். 1948 ஆம் ஆண்டு பாவேந்தர் அவர்களை ஒரு வாரம் தன்னுடைய இல்லத்திற்கு விருந்தினராக அழைத்து, தங்கவைத்து அவருடன் அளவளாவி மகிழ்ந்தார். அவர்தம் பாடல்களில் சுப்புரெட்டியார் தன் உள்ளத்தைக் கொடுத்ததால் பாவேந்தரின் நூற்றாண்டு விழாவில் அவர் பாடல்களைப் பற்றி மூன்று திறனாய்வு நூல்களை எழுதினார். இதற்கிடையில் புதுமைப் பதிப்பகம் **மலரும் மாலையும்** என்ற கவிமணி தேசிய விநாயகம் பிள்ளையின் பாடல்களை வெளியிட்டது. கவிமணியின் பாடல்கள் மிகவும் இனிமையாக இருந்ததால் பலமுறை படித்துப் படித்து மகிழ்ந்தார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். காரைக்குடி சென்றதும் டி.கே.சி.யின் தொடர்பும் கவிமணியின் பாடல்களைப் பற்றிய அதிகமாக மேடையில் பேசி வந்த பேராசிரியர் ஆ. முத்து சிவம் தொடர்பு ஏற்பட்டதால் மேலும் கவிமணியின் பாடல்களில் அதிகம் ஈடுபாடு அதிகமாயிற்று.

தஞ்சாவூரில் நடைபெற்ற எட்டாவது உலகத் தமிழ் மாநாடு அமர்வில் கவிமணி தேசிய விநாயகத்தின் பாடல்களைப் பற்றிய ஆய்வுக்கட்டுரை வழங்கினார். தொடர்ந்து **கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு** என்ற தலைப்பில் ஒரு நூலை எழுதினார். அது 995 அதன் கையெழுத்துப்படியைப் பெற்று, சிறப்பாக முத்து

குமாரசாமி அவர்களின் பரிந்துரையால் கலைஞன் பதிப்பகம் மூலம் நூல் வெளிவந்தது. இவ்வாறாக, ந. சுப்புரெட்டியார் அவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் கவிமணியின் கவிதைகளை மதிப்பீடு செய்துள்ளார். எனவே, ந. சுப்புரெட்டியாரின் மேற்குறிப்பிட்ட நூலினை ஆய்வு செய்வதே நோக்கமாக அமைகிறது. கவிமணியின் தமிழ்ப்பணி என்ற முதல் இயலில் கவிமணி அறிமுகம், எழுத்து, பட்டம், பரிசு, வாழ்விடம், பணி குறித்த செய்திகள் கூறப்பட்டுள்ளன. இரண்டாம் இயலில் படிமங்கள் அதில் கட்புலப்படிமம் செவிப்புலப்படிமம், சுவைப்புலப்படிமம், நாற்றப்படிமம், இயக்கப்புலப்படிமம், கலவைப்புலப்படிமம் என்ற வகைகளாக படிமங்கள் பிரிக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. பண்பாட்டுக்கூறுகள் என்ற மூன்றாம் இயலில் இறையன்பு, நிலையாமை, இயற்கை, மக்கட்பண்பு, ஞான உபதேசம் குறித்த செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**ஆய்வுத் தலைப்பு:**

ந. சுப்புரெட்டியார் நோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி என்பதே இவ்வாய்வேட்டின் தலைப்பாக அமைகின்றது.

**ஆய்வு நோக்கம்:**

கவிமணியின் தமிழ்ப் பற்றையும் அவருடைய கவிப்புலமையையும் எடுத்து கூறுவதே .இவ்வாய்வேட்டின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:**

கவிமணியின் தமிழ்ப்பணி தொடக்கம் முதல் இறுதி வரையிலும் ஆய்வு எல்லையாக கூறப்பட்டுள்ளது.

**ஆய்வு முறை:**

ஆய்வுக் கட்டுரை பகுப்புமுறை திறனாய்வு மற்றும் விளக்க முறை திறனாய்வு அடிப்படையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

**ஆய்வு பகுப்பு:**

முன்னுரை முடிவுரை நீங்கலாக இவ்வாய்வுக் கட்டுரை மூன்று இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை

இயல் - 1 -கவிமணியின் தமிழ்ப்பணி

இயல் - 2 - படிமங்கள்

இயல் - 3 -பண்பாட்டு கூறுகள்

**இயல் ஒன்று:**

கவிமணியின் தமிழ்ப்பணி என்ற இயலில் கல்வி, தொழில், எழுத்து நடை, ஆகியவை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**இயல் இரண்டு**

படிமங்கள் என்ற இயலில் கட்புலப் படிமம், செவிப்புலப் படிமம், சுவைப்புல படிமம், இயக்கப்புல படிமம் போன்றவை விளக்கப்பட்டுள்ளது ˙கூறப்பட்டுள்ளது ஆகும்.

**இயல் மூன்று:**

˙ பண்பாட்டு கூறுகள் என்ற இயலில் இறையன்பு, நிலையாமை, தெய்வவத் தமிழ், ஞான உபதேசம், நிலையாமை முதலிய செய்திகள் கூறப்பட்டுள்ளது.

**முதன்மை ஆதாரம்:**

கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு எனும் நூல் முதன்மை ஆதாராமாக அமைந்துள்ளது.

**துணைமை ஆதாரம்:**

கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் ஆய்வுக் கட்டுரைகள் துணைமை ஆதாராமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

முடிவுரையில் இவ்வாய்வேட்டில் இடம் பெற்றுள்ள கருத்துக்கள் தொகுத்து கூறப்பட்டுள்ளன.

# இயல் - 1

## கவிமணியின் தமிழ்ப்பணி

கவிமணியின் பல்வேறு கால கட்டங்களிலும் எழுதிய பாக்களைத் தொகுத்துப் பல்வேறு தலைப்புகளில் ஆராய்ந்து வகைப்படுத்தி தந்துள்ளார் ந. சுப்புரெட்டியார். கவிமணி காட்டும் இயற்கை காட்சிகளையும் படிமக் காட்சிகளையும் வரலாற்றுப் போக்கிலும் ஒப்பீட்டு முறையிலும் தமக்கே உரித்தான முறையில் திறனாய்ந்துள்ளார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் இவ்வியலில் கவிமணியின் கல்வி, எழுத்து, வாழ்விடம், தமிழ்ப் பணி, பட்டங்கள், பரிசுகள் போன்றவற்றை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**கவிமணி அறிமுகம்:**

கவிமணி குமரி மாவட்டத்தில் நாகர்கோவில் சுசீந்திரத்தை அடுத்துள்ள தேரூர் என்ற சிற்றூரில் 1876 இல் தாது ஆண்டு ஆடித்திங்கள் 14 ஆம் நாள் பிறந்தார். தந்தையார் சிவதாணுபிள்ளை. தாயார் ஆதிலெட்சுமி அம்மாள். சிவதாணுபிள்ளை நாஞ்சில் நாட்டிலே முதன்முதலில் ஆங்கிலம் படித்தவர்களுள் ஒருவர். உப்பள விசாரணை அதிகாரியாகப் பணியாற்றியவர். தாயார் ஆதிலெட்சுமி அம்மாள். மாணிக்கவாசகம் பிள்ளை, மூத்த பிள்ளை என்றவரின் திருமகனார். மூத்த பிள்ளை என்பவர் தமிழ்ப் புலவராக திகழ்ந்தவர். கவிதை இயற்றும் புலமை மிக்கவர். ஆதிலெட்சுமி அம்மாள் பிறந்த இடம் திருநாகை என வழங்கும் நாகப்பட்டினம். அங்கு அவர் தாய் வீட்டார் புகழ் மிக்க வணிகர்கள். சொந்த கப்பல் வைத்து கடல் வாணிகம் நடத்தி வந்தனர். பிற்காலத்தில் பொருள் இழப்பு ஏற்பட்டதனால் வாணிகத்தைத் துறந்து நாஞ்சில் நாட்டில் குடியேறி விட்டார்கள். கவிமணி அவர்களின் அறிமுகத்தை சுப்புரெட்டியார் கவிமணியின் தமிழ்ப் பணி என்ற நூலில் இவ்வாறு கூறியுள்ளார்.

**கல்வி:**

தொடக்க நிலைக் கல்வியைத் தேரூரில் உள்ள பாட சாலைகளில் இளமை முதற் கொண்டே தமிழும் மலையாளமும் பயின்றார். தாய்மொழியாகிய தமிழ் மொழியின் மீது அளவற்ற பற்றுடையவராகத் திகழ்ந்தார். இளமை முதற்கொண்டே தமிழ் கவிதைகள் இயற்றுவதில் ஆர்வம் காட்டி வந்தார். தமிழ் நூல்களை முறையாக கற்க வேண்டும் என்ற பேரவா இவர்தம் மனத்தை உந்தி கொண்டே இருந்தது. தேரூரின் அருகில் உள்ள (வாணன்) தவத்திரு சாந்தலிங்க தம்பிரான் அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஐந்தாறு ஆண்டு காலம் முறையாக பாடம் கேட்டு ஆர்வத்துடன் பயின்றார். திருநெல்வேலி உமையொருபாக குருக்களிடம் சிவதீட்சையும் பெற்றுக் கொண்டார்.

கோட்டாற்றிலுள்ள அரசாங்க ஆங்கிலக் கல்லூரியில் பயின்று மெட்ரிக்குலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்றார். அதன் பின்னர் நாகர் கோவிலுள்ள கல்லூரியில் எம்.ஏ வகுப்பில் சேர்ந்து பயின்றார். பல இடையுறுகளால் ஆங்கில கல்வியை நிறுத்திவிட வேண்டிதாயிற்று. இருப்பினும் ஆங்கில நூல்களையும் ஆங்கிலக் கவிதைகளையும் எப்பொழுதும் படித்து வந்தார். இதன் பின்னர் திருவனந்தபுரம் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சிலகாலம் பயின்று பயிற்சிக்குரிய தேர்வில் தேர்ச்சி பெற்றார்.

**ஆசிரியத் தொழில்:**

கல்வித்துறை வாழ்க்கையே தமக்குரியது என்று மேற்கொண்டார். முதலில் கோட்டாற்றிலுள்ள நடுநிலைப்பள்ளியில் துணையாசிரியராகப் பணியில் அமர்ந்தார். (1901ம் ஆண்டு ஐப்பசித் திங்கள்) நாகர்கோவில் ஆசிரியர் பயிற்சி பள்ளியிலும் பின்னர் திருவனந்தபுரம் மகளிர் ஆசிரியப் பயிற்சி பள்ளியிலும் துணையாசிரியராக பணி ஏற்றார். அடுத்து திருவனந்தபுரம் அரசர் மகளிர் உயர்நிலை பள்ளி தமிழாசிரியராகவும் இறுதியாக அரசர் மகளிர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராகவும் பல்லாண்டுகள் பணியாற்றினர்.

அறிவியல் துறையில் நல்ல அறிவு பெற்றிருந்தமையால் அப்பாடம் பற்றிய பயிற்சிப் பாடங்களைக் கற்பிப்பதில் சிறந்த ஆசிரியராகத் திகழ்ந்தார். ஆனால்

இலக்கிய கல்வியை மறவாது ஒருபொழுதும் விடாது இலக்கியங்களை கற்பதிலும் அவற்றை ஆராய்வதிலும் காலத்தை செலவிட்டார். இறுதிக் காலத்தில் அரசர் மகளிர் பள்ளியில் தமிழாசிரியராகவும் அரசர் மகளிர் கல்லூரியில் விரிவுரையாளராகவும் பணியாற்ற வாய்ப்புகள் கிடைத்த போது, தமது உயிராசைக்குரிய தமிழையே தாம் கற்பிக்கும் வாய்ப்புகள் நேர்ந்தது பற்றிக் கவிமணி பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். இறுதியாக 1931ம் ஆண்டில் மனநிறைவுடன் ஆசிரியப் பணியினின்றும் ஓய்வு பெற்றார்.

**எழுத்துப்பணி:**

தவத்திரு சாந்தலிங்கத் தம்பிரான் அவர்களிடம் தமிழப் பயின்று வரும்போதே கவிதை இயற்றும் ஆற்றல் முகிழ்க்கத் தொடங்கியது. அப்பெரியாரின் கட்டளைப்படி தம் சொந்த ஊராகிய தேரூரில் கோயில் கொண்டிருக்கும் “அழகம்மையின் மீது அழகம்மை” ஆசிரிய விருத்தம் (பத்து பாடல்கள் அடங்கியது) என்ற கவிதை நூலையும் அடுத்துள்ள சுசீந்திரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தாணுமாலயப் பெருமான் மீது பலதோத்திரங்களையும் துதிப்பாடல்களையும் இயற்றினார். (சுசீந்திர மாலை)யின் கையெழுத்துப்படி ஆசிரியரிடமிருந்து தவறி விட்டது. நினைவிலிருந்த ஒரு பாடல் மட்டும் மலரும் மாலையும் நூலில் இடம் பெற்றுள்ளது. இவை இவர் தம் கன்னிப் படைப்புகளாக அமைந்தன. கவிதை இயற்றும் பண்பு கருவிலே திருவுடையதாக அமைந்திருந்தது என்பதை அக்காலத் தமிழர் உலகம் நன்கு அறிந்தது.

கல்லூரி வாழ்க்கையில் இவருடைய கவித்துவம் வெளியாதற்குரிய வாய்ப்புகளும் அடிக்கடி நேர்ந்தன. இவர் இயற்றிய கவிதைகள் கல்வித்துறை அதிகாரிகளாலும் பல அறிஞர்களாலும் தமிழ் விற்பன்னர்களாலும் பெரிதும் பாராட்டப் பெற்று வந்தன. பல சந்தர்ப்பங்களில் பாடப்பெற்ற தனிப் பாடல்கள் (வாழ்த்து பாடல்கள், சரம கவிகள்) பிற்காலத்தில் வெளிவந்த “மலரும் மாலையும்” பதிப்பில் இடம்பெற்றுள்ளன. தமிழ்நாட்டு இதழ்களில் ஆண்டான் கவிராயர் தேவன், ஐயம், பிள்ளை, குயில் என்ற புனைப்பெயர்களில் பல பாடல்கள் வெளியாயின. இவரை அறிந்தோரெல்லாம் இவரிடம் பெருமதிப்பு

கொண்டிருந்தனர். இவருடைய கல்வி அறிவு, தமிழப்புலமை, கற்பிக்கும் ஆற்றல், கவிதை இயற்றும் திறன், நேர்மை, பண்பாடு முதலிய பல இனிய குணங்கள் பற்றித் திருவிதாங்கூர் பெருமக்கள் நன்கு உணர்ந்து இவரைப் போற்றி வரலாயினர். சுருங்கக் கூறின் அக்காலத் தமிழ்ச் சமூகம் இவரிடம் பெருமதிப்பு கொண்டிருந்தது என்ற செய்தியை சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**எழுத்து வடிவங்கள்:**

திருவனந்தபுரத்திலிருந்து பண்டிதமுத்து சாமிப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு வெளி வந்த "தமிழன்" என்ற இதழிலும் "கேரள சொசைட்டி பேப்பர்" முதலிய இதழ்களிலும் இவருடைய பாடல்களும் ஆய்வுரைகளும் வெளிவந்து கொண்டிருந்தன. "மருமக்கள் மான்மியலும்" என்ற நகைச்சுவை நூல் பகுதிபகுதியாக தமிழினில் வரத் தொடங்கியது. "யதார்த்தவாதி" என்ற புனைப்பெயரில் "நாஞ்சில் நேசன்" என்ற இதழில் பல தமிழ்க் கட்டுரைகளை வெளியிட்டார். மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்த "செந்தமிழ்" என்ற திங்கள் இதழிலும் இவரது கவிதைகளில் சில வெளிவந்தன.

இவை தவிர, மலரும் மாலையும் கவிதைத் தொகுதி என்ற கவிதை நூலைக் காரைக்குடி புதுமைப் பதிப்பகம் என்ற நிறுவனம் வெளியிட்டது. (1938) "ஆசிய சோதி" என்ற நூலும் இப்பதிப்பகமே வெளியிட்டது. (1941) இதே ஆண்டில் இப்பதிப்பகம் (இளந்தென்றல்) என்ற தலைப்பில் குழந்தைப் பாடல்களை வெளியிட்டது. "நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்" என்ற நூலும் இப்பதிப்பகத்தின் மூலம் அச்சு வடிவம் பெற்றது. (1942) "தேவியின் கனிகள்" என்ற தலைப்பில் திருவல்லிக்கேணி ஸ்டார் பிரசுரம் வெளியிட்டது. (1945) இதில் மலரும் மாலையில் வெளிவந்துள்ள சரசுவதி துதி, குழந்தை, தாலாட்டு, கிளி, பசுவும் கன்றும், சந்திரன், முத்தம் தா என்னும் ஏழு கவிதைகள் அடங்கியிருந்தன. "உமர்க்கய்யாம்" என்னும் நூலை கவிக்குயில் வெளியிடு மூலம் வெளிவந்தது. (1945) "காதல் பிறந்த கதை" (கவிதைத் தொகுதி) அருள் நிலைய வெளியீடாக வெளிவந்தது. (1947) "தேவியின் கீர்த்தனங்கள்" என்ற நூல் பாரி நிலையம்

வெளியிட்டது. (1953) இந்த பதிப்பகம் கவிமணியின் ‘வரை’ என்ற வசன இலக்கியத்தையும் வெளியிட்டது.

1951 முதல் கவிமணியின் மலரும் மாலையும், நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம், உமர்கய்யாம், ஆசிய சோதி, தேவியின் கீர்த்தனங்கள் முதலியவற்றை பாரி நிலையத்தார் பதிப்புரிமை பெற்று வெளியிட்டு வருகின்றனர்.

**கவிமணியின் வரலாற்று நூல்கள்**

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை வரலாறு என்ற தலைப்பில் கவியோகி சுத்தானந்த பாரதியார் எழுதி வெளியிட்டார். 1945 ‘கவிமணி வரலாறு’ என்ற நூலை வித்துவான் செ. சதாசிவம்பிள்ளை எழுதி வெளியிட்டார். (1948) இந்த நூல்களின் உரிமை இவர் மருகர் குமாரசாமி பிள்ளையிடம் (1950) முதல் இருந்து வருவதாக அறியக் கிடக்கின்றது என்கிறார் சுப்புரெட்டியார்.

**பட்டமும் பரிசுகளும்**

1940இல் “கவிமணி” என்ற விருது இவருக்கு வழங்க பெற்றது. தேவியின் கீர்த்தனங்கள் என்னும் இசை நூல் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசும்(1956) “குழந்தை செல்வம்” என்னும் கவிதை தொகுதிக்கு சென்னை அரசாங்கக் கல்வித்துறையின் (DPI) பரிசும் (1957) பெற்றன.

**வாழ்விடம்**

ஓய்வு பெற்ற பின், கவிமணி நாகர் கோவில் நகருக்கு வடதிசையில் சுமார் இரண்டு கல் தொலைவிலுள்ள தமது துணைவியாரின் பிறந்தகமாகிய புத்தேரி சிற்றூரைத் தமது அமைதியான வாழ்க்கைக்குரிய இடமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டு தமிழ், ஆங்கில நூல்களையும் படித்து அனுபவிப்பதிலும் கல்வெட்டுக்கள் முதலியவற்றை ஆய்வதிலும் பொழுது போக்கிக் கொண்டிருந்தார். வந்தார். இடையிடையே பலர் விருப்பத்திற்கிணங்க தமிழ்க் கவிதைகளை இயற்றி அவர்களை மகிழ்வித்து கொண்டிருந்தார்.

**பாராட்டுக்கள்:**

கவிமணியின் நூல்கள் தமிழ்கூறு நல்லுலகில் உலாவத் தொடங்கியதும் நாடளாவிய பாராட்டுக்களும் வந்து குவியத் தொடங்கின. அவற்றுள் சிலவற்றை ஈண்டு குறிப்பிடுவேன் என்று சுப்புரெட்டியார் கூறுகிறார்.

- காரைக்குடிக்கு அருகிலுள்ள ஆத்தங்குடி என்ற சிற்றூரில் நகரத்தார் சார்பாக ஒரு பாராட்டு நடைபெற்றது (மே 11 1943)
- மதுரையில் பாரதியார் கட்டிடம் திறந்து வைத்தார். (செப்டம்பர் 11 1944)
- செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார் உபசரித்து (மே 12 1943) வெள்ளி பாத்திரங்கள் பரிசளித்தார்.
- திருநெல்வேலி கலை அன்பர்கள் கவிமணியை வரவேற்றுப் பாராட்டினார்(செப்டம்பர் 26 1944)
- கவிமணியின் 70ம் ஆண்டு பிறந்த நாள் விழாவாகக் கொண்டாட பெற்றது. அதன் நினைவாக கவிமணி மலர் வெளியிடப் பெற்றது.
- நாகர்கோவிலில் நடைபெற்ற மூன்றாவது தமிழ் எழுத்தாளர் மாநாட்டில் பங்கு கொண்டு வரவேற்புரை நிகழ்த்தினார் (1948).
- கன்னியாகுமரியில் நடைபெற்ற தமிழ்நாட்டின் தென்குமரி எல்லை மாநாட்டை திறந்து வைத்து சிறப்புச் சொற்பொழிவாற்றினார் (சனவரி 6 1950)
- டாக்டர் ஆர்கே சண்முகம் செட்டியார் தலைமையில் பொன்னாடை போர்த்தப்பெற்று பாராட்டுப் பெற்றார் (அக்டோபர் 1950)
- அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கண்ணியப் பொறுப்பில் தமிழ்ப் பேராசிரியராக அமரும்படி வேண்டுகோள் விடுத்தது (திசம்பர் 1950)
- திருவாவடுதுறை மகா சந்நிதானம் தவதிரு அம்பலவாண தேசிக பராமாச்சாரிய சுவாமிகள் பொன்னாடை போர்த்தி பாராட்டியது. (திசம்பர் 5 1950)

- திருச்சி வானொலி நிலையம் கவிமணியை பேட்டி கண்டது. என்னை இயக்கிய இலட்சியம் என்பது பற்றி நிருபரின் வினாக்களுக்குப் பொருத்தமான விடைகள் பகர்ந்தார். (ஏப்ரல் 1951)
- திருவனந்தபுரம் வானொலிநிலையம் பேட்டி கண்டு கவிஞரின் பாடல்களை அவர்களே பாட ஏற்பாடு செய்தது. (மார்ச் 13 1954)
- கல்கத்தா பாரதி சங்கத்தினர் கவிமணி பிறந்த நாள் விழா கொண்டாடி சிறப்பு செய்தனர். பாரதி வழி பெருங்கவிதைக்கு விழா கொண்டாடி முதல் வழிகாட்டியாக அமைந்தனர். (ஆகஸ்டு 8 1956)

**சிவப்பேறு:**

நம்மிடையே இருந்து அன்புகாட்டி அறம் பெருக்கி வாழ்வாங்கு வாழ்ந்து நமக்கு வழிகாட்டிய கவிமணி அவர்கள் தம் புகழ் நிலை பெறச் செய்து பொன்னுலகமடைந்தார் (செப்டம்பர் 26 1954).

**நினைவுச் சின்னங்கள்:**

திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்தில் தம் அன்னையார் பெயரில் பரிசு வழங்குவதற்காக அறக்கட்டளை நிறுவுதல் (1944).

கவிமணி பிறந்த தேரூரில், தேரூர்ப் பெருமக்கள் கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை நினைவு நிலையம் என்னும் பெயரால் பெரியதொரு மண்டபம் நிறுவித் தமது பேரன்பினை வெளியிட்டனர். இ∴து இச்சிற்றூரின் நடுநாயகமாய் கலை நிலையமாய் கண்டவர் தம் கண்ணையும் கருத்தையும் கவர்வதாய் அமைந்து திகழ்கின்றது ( மே 1952).

நாகர்கோவில் நகரில் கவிமணி நிலையம் உருவாகியுள்ளது. கவிமணி தாம் படித்து அனுபவித்துப் போற்றிய நூல்களையெல்லாம் இந்நிலையத்திற்கு அன்பளிப்பாக அளித்துள்ளார்கள் (சூலை 1953).

புத்தேரியில் கவிமணி இறுதியாக இருந்து அமைதியுடன் வாழ்ந்து மறைந்த இடத்தில் அவர் மருகர் கவிமணி இல்லம் எனப்பெரிய அழகிய மாளிகை அமைத்துள்ளனர். இம்மாளிகையில் கவிமணி அவர்களின் வாழ்க்கையை

நினைவூட்டும் பல உருவப் படங்களும், பிற சின்னங்களும் அமைத்துள்ளனர். இது கவிமணி அவர்களை நினைவுகூறும் வகையில் சிறந்ததொரு நிலையமாகத் திகழ்கின்றது. ( நவம்பர் 21, 1955)

**கவிமணியின் தமிழ்ப்பணி:**

கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை பாரதியின் பரம்பரையைச் சேர்ந்தவர். நடை, கற்பனை, சந்தம் முதலிய அம்சங்களில் பாரதியைப் பின்பற்றியவர். கவிதை போக்கிலும் பாவனையிலும் பாரதியை முன்மாதிரியாகக் கொண்டவர். கவிமணியின் படைப்புகள் அவரை ஒரு சிறந்த தற்கால கவிஞர் என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

தமிழ்ப் பண்பாட்டினை உணர்த்தும் கவிமணியின் அரிய கவிதைகளில் தமிழ் மக்கள் பெரிதும் ஈடுபட்டனர். தமிழகமெங்கும் இவர்தம் புகழ்மணம் பரந்து கமழ்ந்தது. முதல் கட்டுரையில் குறிப்பிட்ட பல விருதுகளை இவர் பெற்றமையே இதற்கு பெருஞ்சான்றாக அமைந்துள்ளன என்பதை காண முடிகின்றது. இவர் தம் கவிபாடும் திறமையைப் போலவே அருங்குணங்களிலும் இவர் சிறந்து விளங்கினார் என்பதை தமிழ்கூறு நல்லுலகம் நன்கு உணர்ந்தது. இக்காலத்தில் அண்மையில் சிவப்பேறு அடைந்த வாரியார் சுவாமிகளிடம் வாழ்த்து பாடல்களை மக்கள் பெற்று வந்ததைப் போலவே, அக்காலத்தில் இவரிடம் வாழ்த்து பாடல்களை ஆசிச்செய்திகளாகப் பெறுவதற்கு பலரும் விரும்பினர். இதன் பலனாக பல வாழத்துப் பாடல்கள் பாராட்டுப் பாடல்கள் ஆகியவை வெளிவந்தன. இவற்றால் மக்கள் பெருமகிழ்ச்சி எய்தினர். இவ்வகைப் பாடல்கள் ஒரு சிலவே அச்சு வடிவம் பெற்றுள்ளன. எட்டயபுரத்தில் பாரதி மண்டபம் திறக்கப்பெற்ற பொழுது இவர் பாடிய கவிதைகள் இங்கு குறிப்பிடத்தக்கனவாகும். இவற்றுள் சில இந்நூலில் ஆங்காங்கு எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன. இனி இவர்தம் கவிதைகளின் இயல்புகளை பற்றிச் சிறிது நோக்குவோம் என்கிறார் சுப்புரெட்டியார்.

கவிதையின் இயல்பை வரையறை செய்வதற்கு கவிதை இன்னது என்று விளக்குவதற்கு சில நூற்றாண்டுகளாக, நூற்றுக்கணக்கான ஆய்வாளர்கள் முயன்று

வந்துள்ளனர். அறிஞர்களில் "ஜான்சன்" என்பவர். கவிதை என்பது ஒலிநயம் அமைந்த சொற்களின் கட்டுகோப்பு, இன்பத்தை உண்மை உடன் இணைப்பது அறிவுக்கு துணையாக கற்பனையைக் கொண்டிருப்பது என்று கூறுவார் கார்லைல் என்பவர். இசை தழுவிய எண்ணமே கவிதை என வரையறுப்பார். மனித சொற்களால் அமைய முடிந்த மகிழ்வூட்ட வல்லதும் செம்மை நிறைந்தது மான கூற்றே கவிதையாகும் என்பது மாத்யூ ஆர்னால்ட் என்பவரின் கருத்தாகும். கவிதைக்குக் கூறும் இலக்கணம் இங்ஙனம் மேற்புல அறிஞர் கூறியவை அனைத்தும் கவிதையின் இலக்கணத்தை திட்டமாக வரையறுக்க இயலவில்லை.

இனி நம் நாட்டு அறிஞர்கள் மொழிவதையும் காண்போம் என்கிறார் சுப்புரெட்டியார். சீதா பிராட்டியின் அழகை வருணிக்கப் புகுந்த (கம்ப நாடன் பொன்னின் சோதி, போதின் நாற்றம் தேனின் தீஞ்சுவை) என்று ஒவ்வொன்றாக சொல்லி பார்த்து ஒன்றில் கூட மனநிறைவு பெற முடியாமல் இறுதியாக

**"செஞ்சொற் கவி இன்பம்"[1]**

என்று கூறி மனநிறைவு பெறுகின்றார். நன்னூலாசிரியரும்

**"பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல் பல**
**சொல்லால் பொருட்கு இடனாக உணர்வினின்**
**வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"[2]**

என்று வரையறுத்துள்ளார். இதில் யாக்கைக்கும் கவிதைக்கும் ஒப்புமை கூறப் பெற்றுள்ளது. தோல், குருதி, தசை, எலும்பு முதலிய தாதுக்களினால் ஆன உடல் உயிருக்கு இடனாக கல்வியறிவில் மிக்க வல்லோரால் அணிபெறச் செய்ய பெறுவதே கவிதையாகும் நம் கவிமணியவர்களும்

**"உள்ளத் உள்ளது கவிதை - இன்பம்**
**உருவெடுப்பது கவிதை**
**தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை**

**தெளிந்து உரைப்பது கவிதை”[3]**

என்று கவிதைக்கு இலக்கணம் கூறுகிறார்.

இங்ஙனம் கூறியுள்ள மேற்புல அறிஞர்களின் கூற்றுகளிலும் நம் நாட்டு அறிஞர்களின் கூற்றுகளிலும் கவிதையின் முழு வடிவம் தோன்றவில்லை. கவிதையின் உருவம் திருமலை நாயக்கர் மகால் தூணை போல் தூலமாகத் தெரிவதில்லை என்று புதுக்கவிதையைப் பற்றி மீரா கூறுவது பொருத்தமாகத் தோன்றுகிறது. ஏதோ இன்னும் நாம் காணாத பல கூறுகள் கவிதையினுள் உள்ளன என்றே நம் மனம் எண்ணத் தோன்றுகிறது. உயிருள்ள வளரும் இயல்புடைய கவிதையைச் சொற்கோட்டைக்குள் வளைத்துக் கிட்டிலில் மாட்டி விடலாம் என்று நினைப்பது தவறு. அ∴து இயலாத தொன்று அது மேலிருந்து விழும் அருவி நீரைப் பற்றுவது போலாகும். அ∴து அண்ணாமலையான் தன்மையைத்தான் கொண்டுள்ளது. அவனது அடியையும் முடியையும் மாலும் அயனும் காண முடியாது அல்லலுறுவதைப் போல் கவிதையின் இயல்பை ஆய்வாளர் கண்டறிய முடியாமல் திண்டாடுகின்றனர் எனினும் இம்முயற்சிகள் பயனற்றது அல்ல.

கவிதையின் இயல்புகள் காலந்தோறும் இடந்தோறும் சூழ்நிலைக்குத் தக்கவாறு வேறுபடுகின்றன. அவற்றுள் ஒரு சில அம்சங்களையே ஒவ்வோர் ஆய்வாளரும் அறிய முயல்வது. ஆனால் தாம் கூறுவதே எல்லா வகையாலும் முற்ற முடிந்த உண்மையெனத் தாமும் நம்பி வாசகர்களையும் மயங்கச் செய்து விடுகிறார்கள். இக்குறையினால் இன்னோரது நூல்கள் பயனற்று போய்விட வில்லை. விதை இயல்புகள் ஒரு சிலவற்றின் முக்கியத்துவம் நன்றாக நம் மனதில் ஆழப்பதிந்து விடுவதற்கு இவ்வித நூல்கள் உதவுகின்றன. அன்றியும் இந்நூல்களை நாம் கற்குந்தோறும் நமது அறிவு விசாலமடைகின்றன. கவிதை அனுபவம் மேலும் முதிர்வதற்கு இடம் ஏற்படுகின்றது.

கவிமணி பெரிய காவியம் ஒன்றையும் படைக்க வில்லை. அவர் படைத்துள்ள ஆசிய சோதி, உமர்கய்யாம் பாடல்கள், மருமக்கள் வழி மான்மியம் ஆகியவை சற்றுப் பெரியவை. இவற்றுள் முதலிரண்டும் ஆங்கில கவிதைகளைத்

தழுவி ஆக்கப் பெற்றவை. இவற்றின் கருத்து தமிழ் மக்களுக்கு ஏற்ற முறையில் மாற்றப் பெற்றுள்ளது. தமிழ்க் கவிதைகட்கு ஏற்றபடியாகவும் அக்கருத்தோடு ஒத்த பிற கருத்துக்களும் சேர்க்க பெற்றுள்ளன. எனவே இக்கவிதைகள் ஆங்கில மூலத்தின் கருத்தை பொதுவாக எடுத்து கொண்டு தமிழ்ச் சூழலுக்கு ஏற்ற முறையில் தமிழ் மக்கள் அனுபவிக்கும் பாங்கில் வேண்டிய மாற்றங்கள் செய்து அழகுற அமைக்கப் பெற்றவையாகும். மொழி பெயர்க்க எடுத்து கொண்ட ஒவ்வொரு கவிதைகளிலும் கவிமணியின் ஆன்மா புகுந்து நின்று கவிதை கருத்தின் வடிவினை தானே மேற்கொண்டு, புதியப் படைப்பாக கூறிய நாரணன் விளையாட்டை வால்மீகி வடமொழியில் கூறியதை, கம்பன் தமிழ் பண்பாட்டிற்கேற்பத் தமிழில் செப்புவதை போல கவிமணியின் படைப்புகள் அமைந்துள்ளன என்று சொல்லலாம். இவர் தமிழாக்கம் செய்த “முதல் துயரம்” வண்மை கண்டவர் யார்? பிற சிறிய கவிதைகளும் “அழியா உயிர்ப்பு” “மூன்று விஷயங்கள்” போன்ற பிற சிறிய கவிதைகளும் இங்ஙனமே அமைந்துள்ளன. இக்கவிதைகளில் மொழி பெயர்ப்பு என்ற உணர்ச்சியே உண்டாவதில்லை. நமது நாட்டில் நமது தாய்மொழி மரத்தில் இயற்கையாகக் காய்த்து சுவைபடக் கனிந்த கனிகளே இவை என்று சொல்லத் தக்கனவாகவே அமைந்துள்ளன என்று கூறுவதில் யாதொரும் தவறும் இல்லை என்கிறார் சுப்புரெட்டியர்.

**சிறுவர் இலக்கியம்:**

இந்த வகை இலக்கியத்திற்கு முதன் முதல் வித்திட்டவர் பாரதியார். இவரைப் பின்பற்றி பாவேந்தர் பாரதிதாசன். இந்த இரண்டு கவிஞர் பெருமானின்களில் அடிச்சுவட்டில் கவிமணி நடைபோடுகின்றார்.

“மலரும் மாலையும்” என்ற இவர்தம் படைப்பில் “மழலை மொழி” என்ற பகுதியில் காணப்பெறும் “முத்தம் தா” என்பது முதல் “பாண்டியாடுதல்” முடியவுள்ளப் பதினாறு பாடல்களும் குழந்தை அனுபவத்தை ஒட்டிய பாடல்களேயாகும்.

**“கண்ணே! மணியே! முத்தந்தா**
**கட்டிக் கரும்பே முத்தந்தா**

**வண்ணக் கிளியே! முத்தந்தா**
**வாசகக் கொழுந்தே முத்தந்தா"**[4]

இந்த பாடல் மழலையருக்குப் பொருத்தமான பாடல்களாகும்.

கவிமணியின் சிறுபாட்டுகளில் சில முதல் தரமானவை. கிளி, மலர்கள், குழந்தை, ஆறு முதலியவை சிறந்த நயமுடையவை. கற்றோர்க்கு இன்பம் தரவல்லவை. கவிதைகளை சுவைக்க தெரிந்தவர்கள் இந்த பாடல்களை மாணிக்கங்களாக மதிப்பார்கள். ஒரு நல்ல வல்ல அகத்தெழுச்சியம் கவிதையின் கட்டுகோப்பும் கவிமணியின் பாடல்களில் மிளிர்கின்றன.

"மலரும் மாலையும்" என்ற தொகுதியில் சமூகம் என்ற பகுதியில் காணப்பெறும் கவிதைகள் சிறப்பாக இருந்த போதிலும் அவை அரசியல் சமூக சீர்திருத்தப் பிரசாரத்திற்காகவே எழுதப் பெற்றுள்ளன என்றும் அது காரணம் பற்றி இலக்கியச் சுவையிலும் கவிதைக் சுவையிலும் சிறு குறைவுற்றனவாகச் சிலர் கருதுவர். இக்கருத்தைப் பலர் ஏற்றுக்கொள்ளுவர். (பொங்கல் திருநாள், தீபாவளிப் பண்டிகை) மக்கள் மகிழ்ச்சியுடன் கொண்டாடும் பண்டிகைகள் பெண்கள் உரிமைகள் என்ற பாடல்களில் பெண்களின் தியா உணர்வு அற்புதமாகச் சித்தரிக்கப் பெறுகின்றது. எடுத்துக்காட்டுகளாக

**"அல்லும் பகலும் உழைப்பவரார் ? – உள்ளத்து**
**அன்பு ததும்பி எழுபவரார்**
**கல்லும் கனிலக் கசிந்துருகித் - தெய்வ**
**கற்பனைவேண்டிதொழுப வாரர்?**[5]

இவற்றைப் பிரசார கவிதைகள் என்று திருநாமம் சூட்ட முடியுமா இங்ஙனமே உடல் நலம் பேணல் "சுகாதாரக் கும்மி" நாட்டுக்கே உழைப்போம் என்ற தலைப்புகளில் உள்ள பாடல்களை பிரசாரக் கவிதைகள் என்று குறைத்து மதிப்பிடல் அறிவுடைமை அன்று. இது சுவைபண்பு இல்லாதவர் செயல் என்று தள்ளத்தக்கது என்கிறார் சுப்புரெட்டியார்.

**கவிமணியின் தமிழ்:**

இவரது தமிழை குறித்துச் சில சொற்கள் இது காறும் மேற்கூறிய கவிதைகளால் நாம் அறிந்தது இது. இவருடைய தமிழ் என்றும் உள்ளத்தில் போற்றி வைக்கத்தாகும் பொற்களஞ்சியம். நமது மூதாதையரின் பண்பாட்டிலும் மரபிலும் ஊறித் தோய்ந்து இனிமை முற்றிய தமிழ் உண்மை நிரம்பிய தமிழ் கல்லார்க்கும், கற்றார்க்கும், நாட்டார்க்கும், நகரத்தார்க்கும் ஒன்று போல் நலம் அளிக்கும் தமிழ். காணார்க்கும் கண்டார்க்கும் கண்ணளிக்கும் தமிழ். இந்த இயல்புடைய தமிழ் நம் நாட்டில் அரிதாகிக் கொண்டு வருகின்றது. இழக்க முடியாத இந்த அரிய செல்வத்தை நமக்கு போற்றி அளித்தவர். நம் கவிமணி அவர்களே என்று கவிமணியின் தமிழ் குறித்து கூறியுள்ளார் சுப்புரெட்டியார்.

ஆய்வாளர்கள் அனைவரும் உண்மைக் கவிதை பற்றிய ஒரு விஷயத்தில் ஒன்றிய உள்ளத்தினராய் உள்ளனர். சிறந்த உண்மையான உயர் கவிதையைப் படித்த அளவிலேயே நம் மனத்தில் விவரிக்க முடியாத ஓர் இன்பத்தை காண முடிகின்றது. நாமக்கல் கவிஞர் கூறுவார் கவிமணியின் கவிதையை,

**“புவியன கவிகள் பாடும்**
**புலமையப் போற்று கேனேதா?**
**சேவிமகிழ் இனிய சொல்லின்**
**செறிவினை மெச்சு கேனோ?**
**நவம்மிகப் பழமைபேசும்**
**நயத்தினைப் புகழு வேனோ?**
**கவிமணி யவரை வாழ்த்தக்**
**காரணம் எதனைச் சொல்வேன்”[6]**

என்று இதில் அவர் கூற முடியாமல் தவிப்பதைக் காணலாம். காதல் பிறந்த கதை, கருணை கடல், அன்பின் வெற்றி முதலியவற்றை உண்மை கவிதைகள் என உரைக்கலாம். ‘கால் நதியின் கதியதனில் கடவுள் ஆணையைக் காண்போமாயின் ஞால மீது சுகமெல்லாம் நம்மை வந்து அடையும் நாமே நமக்குத்’

துணையானால் நாடும் பொருளும் நற்புகழும் தாமே நம்மை தேடிவரும் கவிமணியின் பாடல்களில் மீண்டும் மீண்டும் நம்மனம் ஆழங்கால் படும்போது நம் மனதில் புதியதோர் இன்பம் சுரக்கின்றது. அவற்றை நுகர நுகரத் தெவிட்டாத இன்பத்தை அடைகின்றோம். அவை என்றும் மாறாத இளமைத் தன்மையோடும் நம் மனத்தை கவர்வனவாக உள்ளன. பல பாடல்கள் பல தலைமுறைகளாகத் தமிழ் மக்களை இன்புறுத்தி நிலவும் என்று உறுதி கூறலாம். சில பாடல்கள் என்றும் வாடாமலர்களாய் நின்று நிலவும் இனிய மனம் கமழ்ந்து தமிழன்னையின் திருவடிகளில் ஒளிரும் என்று கருதலாம். இவற்றையெல்லாம் கருதியே நாமக்கல் கவிஞர். கவிமணி பாரதியின் பாடல்களில் சுவைத்து மகிழ்ந்து பாட்டுக் கொரு புலவன் பாரதி என்று கூறுவது போல்

**‘‘தேசிக விநாயகத்தின் கவிப் பெருமை**
**தினமும் கேட்பது என் செவிப் பெருமை’’[7]**

என்று மொழிந்து மகிழ்கின்றார். இதே பாணியில் கவிமணியின் பாடல்களைத் திறனாய்ந்து பேசுகின்றார். அப்பேச்சில் சில கவிதைகள். இவருடைய பாடல்களில,

**‘‘கோழி குலவிவரும் கிளி கொஞ்சும்**
**குழந்தை எழுந்து துள்ளி கிளிமிஞ்சும்**
**ஏழை எளியவர்கள் யாவருக்கும்**
**இன்பம் கொடுக்க அவன்பா விருக்கும்**

**காடும் மயலயம் அதில் கலை பேசும்**
**கடலும் ஞானம்தர அலைவீசும்**
**பாடும் தேசிகவி நாயகத்தின்**
**பழமை பாட்டிடன் என்றா உவக்கும்**

**படித்து பழகாத பாமர ருக்கும்**

**பருக அதில் நேச மிருக்கும்**

**ஒடித்துப் பொருள் பிரிக்கும் சந்திகளில்லை**

**ஊன்றிப் பதம் கூட்டும் பந்தன மில்லை''**[8]

என்பனவற்றை காணலாம்.

**''உழுது தொழில் புரியும் பாட்டாளி**

**உழைப்பில் ஒய்வுதரும் பாட்டாகும்''**[9]

என்பார் நாமக்கல்லார் இங்ஙகனம் பல்லோர் பாராட்டும் அவர் கவிதைளில் உள்ளம் பறி கொடுத்த நம் மனமும் கவிமணி தற்காலக் கவிஞர்களில் தலை சிறந்தவர் என்று மதிப்பிட்டும் அறுதியிட்டு மகிழும் என்கிறார் சுப்புரெட்டியார்.

இவ்வியலில், கவிமணி பற்றிய அறிமுகம், கல்வி, தொழில், எழுத்து வடிவங்கள், நூல்கள், வாழ்விடம், தமிழ்ப்பணி போன்ற செய்திகளை பேராசிரியர் சுப்புரெட்டியார் அவர்கள் திறம்பட கூறியுள்ளார். இதன் மூலம் கவிமணியின் தமிழ்ப்பணி அளப்பரியது என்பதை அறிய முடிகிறது. சுப்புரெட்டியர் கவிமணி மீது கொண்டிருந்த ஈடுபாட்டையும் இதன் வழி அறியமுடிகிறது. கவிமணியின் படைப்புகளில் ஆழ்ந்து தோய்ந்தவர் சுப்புரெட்டியார் என்பதை இவ்வியலின் வழி அறியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 2

2) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 13

3) கவிமணி, பா.எண் - 3

4) கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பா.எண்-60

5) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 5

6) கவிமணி, பா.எண் - 6

7) கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பா.எண்-7

8) கவிமணி, பா.எண் - 8

9) கவிமணி, பா.எண் - 9

.

# இயல் - 2

# படிமங்கள்

படிமம் என்பது சொற்களால் கவிஞன் புலன்களுக்கு கவர்ச்சி உடையதாக செய்யும் ஒரு வகை உத்தி. புலன்களின் மூலம் படிப்போரின் எழுச்சிகளையும் அறிவினையும் கிளர்ந்தெழச் செய்ய இயலும். இதனைக் கருதியே கவிதையில் படிமம் கையாளப்பெறுகின்றது என்று கூறுவார் பர்ட்டன் என்ற ஆங்கிலத் திறனாய்வாளர்.

எண்ணத்திற்கும் புலன்களுக்கும் குறியீடுகளாக இருப்பவை சொற்கள் ஆகும் என்பதை நாம் அறிவோம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக்கவிதையில் உள்ள சொற்கள் அல்லது சொற்கோவைகள் சில பல படிமங்களை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் செய்வதைப் போலவே படிமங்களும் கருத்துநிலைச் செயலில் நம் புலன்களைத் தூண்டி நம்மிடம் கவிதை அனுபவத்தை எழுப்பி கவிதையைத் துய்த்து மகிழ்வதற்கு துணையாக அமைகின்றன.

கவிமணியின் பாடல்களில் இத்தகைய படிமங்கள் அமைந்திருப்பதால் பாடல்களைப் பயில்வோர் மனதில் இவை தோன்றி கவிதை அனுபவத்தை கிளர்ந்தெழச் செய்கின்றன. இனி சிறப்பாக ஒவ்வொரு புலனையும் பொதுவாக பல புலன்களையும் கவரும் படிமங்களைக் காணலாம்.

**கட்புலப் படிமங்கள்**

பல்வேறு படிமங்களிடையேயும் கட்புலப் படிமங்களே அதிகமாக உள்ளன. இவையே படிப்போரின் மனதில் நிலையான பதிவினை விளைவிக்கின்றன. கட்புல நரம்பு ஏனைய பல நரம்புகளை விட தடித்திருப்பதே இதற்கு காரணம் என கருதலாம். இதன் காரணமாகவே இந்த கால கல்வியில் கட்புல - செவிப்புல

துணைக்கருவிகள் அதிகமாக பயன்படுத்தப் பெறுகின்றன. பள்ளிகளில் சுற்றுலா அமைத்து மாணாக்கர்களை பல்வேறு இடங்களுக்கு இட்டுச்சென்று பல்வேறு காட்சிகளை நேரில் காண செய்கின்றனர். கவிமணியின் பாடல்களில் கட்புலனைக் கவரும் ஒரு சில படிமங்களைக் காணலாம்.

**‘‘நாடிப் புலங்கள் உழுவார்**
**கரமும் நயவுரைகள்**
**தேடிக் கொழிக்கும் கவிவாணர்**
**நாவும் செலுங்கருணை**
**ஓடிப் பெருகும் அறிவாளர்**
**நெஞ்சும்’’[1]**

இது கலைமகள் வணக்கப் பாடலின் பகுதி. இதில் உழுவார் கரம், கவிவாணர் நா, அறிவாளர் நெஞ்சு ஆகியன கட்புல படிமங்களாகும்.

**செவிப்புல படிமங்கள்**

காதினால் மட்டும் கேட்டு உள்ளத்தைப் பறி கொடுக்க செய்யும் படிமங்களாகும் இவை. கவிமணியின் பாடல்களில் இவற்றைக் காணலாம்.

**‘‘குன்றினோடு குழியெலாம் இச்சிறிய வேயின் வரு**
**குழல் கொண்டு சென்று நீயுன்**
**குமுத வாய்வைத்து தவநவமான் இசைகள் செவி**
**குளிரவே ஊதி நிற்பாய்’’[2]**

இது அஞ்சலி ஆசிரிய விருத்தத்தின் ஒரு பகுதி. இதில் ‘நவமான இசைகள்’ கட்புல படிமமாகும்.

**‘‘வாசம் மெழும் சோலை வாய் மது உண்டு வண்டினம்**
**மதுரை கீதங்கள் பாட’’[3]**

இதுவும் அஞ்சலி ஆசிரியவிருத்தமே. இதில் மதுரை கீதங்கள் செவிப்புல படிமமாகும்.

**"குயிலும் கிளியும் பாட்டில் கூவுமே"[4]**

**"செந்தமிழ் நாட்டின் முதன்மொழி**
**செவியில் சேரும் முன்னே"[5]**

**"எங்கள் நாடு தான் பூபாள**
**இசையில் ஏறிடும் மேல்"[6]**

இவற்றில் கூவுதல், முதல் மொழி செவியில் ஏறுதல், பூபாள இசையில் ஏறிடுமேல் என்பன செவிப்புல படிமங்களாகும்.

**சுவைப்புலப் படிமங்கள்**

நாவினால் பெரும் அனுபவத்தை தரும் பாடல்கள் அதிகமாகவே காணப்படுகின்றன.

**"தித்திக்கும் முக்கனிகள் எத்திக்கும் உதிர்கின்ற**
**செரிமரச் சோலை"[7]**

இது அழகம்மை ஆசிரிய விருத்தம். இதில் தித்திக்கும் முக்கனிகள் சுவைப்புல படிமமாகும்.

**"பாவின் சுவை கடல் உண்டெழுந்து - கம்பன்**
**பாரில் பொழிந்த தீம்பாற்கடலை"[8]**

இது இலக்கியப் பஞ்சகத்தில் கம்பனைப் பற்றிய பாடல். இதில் பாவின் சுவை கடல், தீம்பாற்கடல் இவைகள் சுவை படிமங்களாகும்.

**"பண்டைத் தமிழ்மொழியைப் - படித்து**
**பக்குவம் செய்து வைத்தோன்**
**கண்டின் சுவையெல்லாம் - சொல்லில்**
**கனியைக் காட்டிடுவோன்"[9]**

இது கம்பனைப் பற்றியப் பாடல். இதில் கண்டின் சுவை என்பது சுவைப்புலப் படிமமாகும்.

**“கற்கண்டு சீனி,**
**கனியும் கனிந்தொழுகும்**
**சொற்கொண்டு எமக்குச்**
**சுகமளிக்கும் பூங்குயிலோ?”[10]**

**“தேவாரப் பாகும்**
**திருவாசகத் தேனும்**
**நாவார உண்ணஎம்மான்**
**நன்மகவாய் வந்தானோ”[11]**

இதில் கற்கண்டு, சீனி, பாகு, தேன் ஆகியவை சுவைப்புல படிமங்களாகும்.

**நாற்றப்புலப் படிமங்கள்**

மூக்கினால் முகர்ந்து அனுபவிக்கக்கூடிய படிமங்களாக அமைந்திருப்பவை இவை.

**“பூவாகி அப்பூப் பொருந்துவனமாகி அப்**
**பூவினுறு மணமுமாகி**
**பூதமாய் புலனாய் புறப்பாளுமாய் அப்பூ**
**புனாப்பை அறிவிக்கும் அறிவாய்”[12]**

இது அழகம்மை ஆசிரிய விருத்தம். இதில் மணம் நாற்றப்புல படிமமாகும்.

**“மண்டலம் எங்கும் கமலும் அருந்தமிழ்**
**வாசம் நுகர்ந்து மகிழ்வோமே”[13]**

இதில் அருந்தமிழ் வாசம் என்பது நாற்றப்புலப் படிமமாகும்.

**நொப்புலப் படிமங்கள்**

தொடுவதால் அனுபவிக்கக்கூடிய படிமங்கள் இவை. இவை கவிமணியின் பாடல்களில் மிக அரிதாக உள்ளன.

**“பொன்றுத லிலாதநிலை தரவல்ல உன்கரப்**

**புனிதம் உடல் தீண்டலாலே''[14]**

இதில் உடல் தீண்டல் என்பது நொப்புலப்படிமமாகும்.

**“முத்தம் கொடுக்குது**

**வெள;ளை பசு - மடி**

**முட்டிக் குடிக்குது**

**கன்றுக்குட்டி''[15]**

இது ‘பசுவும் கன்றும்’ என்பதில் வருவது முத்தம், முட்டிக் குடித்தல் என்பவை நொப்புலப் படிமங்களாகும்.

**இயக்கப்புலப் படிமங்கள்**

ஒரு பொருள் அல்லது ஒரு மனிதனின் இயக்கத்தை விளக்குவன இந்நிலை படிமங்களாகும்.

**“பாலாறு பொங்கி**

**பாறைகளும் உடைந்து உருளப்**

**பாய்ந்து ஒழுகும்''[16]**

இது அஞ்சலியில் வருவது. இதில் உடைந்து உருளுதல், பாய்ந்து ஒழுகுதல் இயக்கப்புலப் படிமங்களாகும்.

**“தையலர் மீதிலே மையலாய் ஓயாது**

**சண்டாளன் நெறியிலெல்லாம்**

**சாடிக் குதித்தோடி அலைகின்ற மனம்''[17]**

இதில் சாடுதல், குதித்தல், ஓடுதல், அலைதல் ஆகியவை இயக்கப்புலப் படிமங்களாகும்.

**“பறக்கும் குருவியோடு என் உள்ளம்**

**பறந்து பறந்து திரியும்**

**கறக்கு பசுவைச் சுற்றி – அதன்**

**கன்று போலத் துள்ளும்''[18]**

இ∴து இலக்கியம் என்று பகுதியில் வரும் கவிதை பற்றியது இதில் பறத்தல் திரிதல் துள்ளுதல் இயக்கப்புல படிமங்கள்.

**"அலைமேலே அலைவந்து மோதுமேயடா - அலை**
**அழகான முத்தையள்ளிக் கொட்டுமேயடா**
**மலைமேலே மலைவளாந் தோங்குமேயடா – அதை**
**வனங்கள் அடர்ந்தடர்ந்து சூழுமேயடா"**[19]

இது பட்டிக்காட்டான் வாயிலிருந்து வருவது இதில் 'மோதுதல்' 'அள்ளிக் கொட்டுதல்' இயக்கப்புலப் படிமங்கள்.

**"சுதந்திரப் பாட்டில்' – உள்ளம்**
**துடிதுடிக்குதடா**
**பதமெ ழும்புதடா - கையும்**
**படபடக்குதடா"**[20]

இதுவும் பட்டிக்காட்டான் வாயில் வருவது 'துடித்துடித்தல்' 'பதமெழும்புதல்' 'படபடத்தல்' ஆகிய இவை இயக்கப்புலப்படிமங்கள்.

**கலவைப்புலப் படிமங்கள்**

பெரும்பாலும் படிமங்கள் தனித்து வருதல் அருமை. அவை கலவையாகவே அமைந்து அவற்றிற்கு மெருகூட்டுகின்றன. கவிமணியின் பாடல்களில் இவற்றை காண்போம்.

**"மணமும் நிறமும் இல்லாவோர்**
**மலரே எனினும் ஐயா நின்**
**பணியில் சேரத் தாழாது**
**பறித்துக் கொள்ள வேண்டினனே"**[21]

இது அஞ்சலியில் ஒரு பாடல். இதில் மணம் 'நாற்றமுள்ள படிமம்.' நிறம் என்பது கட்புல படிமம். இவை இரண்டும் இணைந்து பாடலுக்கு மெருகூட்டுகின்றன.

**“அம்பொற் குழைகள் மிசையாட**

**அரைஞான் சதங்கை இசைபாட**

**நம்பன் கண்ணன் அழகியவோர்**

**நடனாய் வந்து நடக்கின்றான்”**[22]

இது ‘அன்பின் வெற்றி’ என்ற மீரா பற்றிய சரித்திரக் கவிதையில் ஒரு பாடல். இதில் ஆடுதல், நடித்தல், இயக்கப்புலப் படிமங்கள். பாடுதல் செவிப்புலப் படிமமாகும். இவை மூன்றும் இணைந்து பாடலை சிறப்பிக்கின்றன.

**“தேனும் தினையும் பாவில் உண்ணலாம் அடா – மிகத்**

**தித்திக்கும் முக்கனியும் உண்ணலாம் அடா**

**கானக்குயில் இசையும் கேட்கலாம் அடா – ஊடே**

**களிவண்டு பாடுவதும் கேட்கலாம் அடா”**[23]

இது பட்டிக்காட்டான் வாயில் வருவது. தேன், தினை, முக்கனி சுவை படிமங்கள். வண்டு பாடுதல் செவிப்புலப் படிமம். இவை கலந்த கலவை படிமம் கவிதைக்கு சுவையூட்டுகின்றது.

**கவிதை அனுபவம்**

நம் உடல் தூண்டல் - துலங்கல் என்ற உளவியல் தத்துவப்படி இயங்குகின்றது. வெளி உலகிலிருந்து தூண்டல்கள் நம் புலன்களைத் தாக்கும்போது அவற்றிற்கேற்ப புலன்கள் துலங்குகின்றன. அதாவது, அப்புலன்கள் அத்தூண்டல்களால் கிளர்ச்சி அடைகின்றன. அதனால் ஏற்படும் உணர்ச்சி மனம் அனுபவிக்கின்றது. இந்த உணர்ச்சிப் பெருக்கில் உண்டாகும் இன்பமே - முருகுணர்ச்சியே - சுவையாகும்.

எடுத்துக்காட்டாக மணப்பொருள்கள் நல்கும் மணத்தை நாற்றப்புல நரம்புகள் நரம்புகள் வாங்கி மூளைக்கு அனுப்புகின்றன. மனம் அப்பொருள்கள் நல்கும் மணத்தை அனுபவிக்கின்றது. ஊதுவர்த்தி, சாம்பிராணி மணம் செயல்படுவதை கருதலாம். மல்லிகை, மருக்கொழுந்து, ரோஜா முதலியவை தரும்

மணங்களிலிருந்து, அவை இன்னவை என்று மனம் வேறுபடுத்தி அறிகின்றது. இங்கனமே பிற புலன்களின் மூலம் பெறும் தூண்டல்களால் மனம் அந்தந்த பொருள்கள் தரும் சுவைகளைப் பெற்று, அவற்றில் ஈடுபடுகின்றது. இவ்வாறு வெளியுலக தூண்டல்களால் அடிக்கடி மனம் பெறும் அனுபவம் பெருமூளையில் பதிவாகி விடுகின்றது. உலகை இன்பமயமாகக் கண்டு உள்ளத்தில் பூரிப்பு அடைபவர்களே கவிஞர்கள். கவிமணி இயல்பாகவே கவிஞர் ஆதலால் இந்த அனுபவத்தை பெறுபவராகின்றார்.

இவ்வாறு பெருமூளையில் பதிவாகியிருக்கும் அனுபவம் அச்சு வடிவில் உள்ள கவிதைகளைப் படிக்கும்போது, நினைவாற்றலின் காரணமாக கருத்துநிலை தூண்களாக மாறுகின்றன. அவை மூளையிலுள்ள பூத்தண்டு, மேற்பூத்தண்டு என்ற பகுதிகளின் மூலமாக புலன்களை அடையும் போது, மூளையில் அற்புதமாக அமைந்திருக்கும் நரம்பு அமைப்புகளைத் தூண்ட அந்நரம்புகளின் இயக்கத்தால் மாங்காய்ச் சுரப்பிகள் போன்ற நாளமில்லா சுரப்பிகளில் சாறுகளை ஊறச் செய்து குருதி ஓட்டத்தை மிகுவிக்கின்றன. உடலும் கிளர்ச்சி அடைகிறது. அப்போது கவிதைகளில் வரும் படிமங்களைப் புலன்கள் மீண்டும் மனதில் தோன்ற செய்கின்றன. மனம் அக்காட்சிகளை அனுபவித்து மகிழ்கின்றது. இத்தகைய முருகுணர்ச்சி கவிமணியின் பாடல்களில் கவிதை அனுபவமாக மிளிர்கின்றது. இந்தப் பாடல்களை நாம் பயிலும் கால் அதே உணர்ச்சியை நாம் பயிற்சியால் பெற முடிகிறது என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

புதுக்கவிதைகளின் உத்திகளில் ஒன்றான படிமங்களைப் பல வகைப்படுத்தி கூறியுள்ளார் கவிமணி. ஐம்புலன்களால் நுகரப்படும் படிமங்களைப் பிரித்துப் பாடியுள்ளார். இவ்வாறாகக் காட்சிகளை கவிதைகளில் பல நிலைகளில் அனுபவித்து கூறியுள்ளார். இதன் மூலம் கவிமணியின் அனுபவத்தையும் ஆழ்ந்த ஈடுபாட்டையும் அறிய முடிகிறது என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

**சான்றெண் விளக்கம்**

1) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 3

2) கவிமணி பா.எ – 34

3) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 74

4) கவிமணி பா.எண் - 158

5) தேவராம் பா. எண் - 218

6) கவிமணி தேசிகவிநாயம் பிள்ளை பா. எண். - 5

7) கவிமணி தேசிகவிநாயம் பிள்ளை பா. எண். - 113

8) கவிமணி பா.எ – 28

9) கவிமணி பா. எண. – 53

10) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 209

11) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 25

12) கவிமணி, பா.எண் - 56

13) கவிமணிதேசிகவிநாயம்பிள்ளைபா. எண். - 5

14) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 16

15) கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை , பா.எண் -268

16) கவிமணி பா.எ - 47

17) கவிமணிபா.எ-117

18) கவிமணியின் தமிழ்ப்பணி பா.எ. 156

19) கவிமணியின் தமிழப்பணி பா.எண் -162

20) கவிமணி பா. எண்- 16

21) கவிமணி, பா.எண் -13

22) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -17

23) கவிமணியின் தமிழ்ப்பணி – 12

# இயல் - 3

# பண்பாட்டு கூறுகள்

பண்பாட்டுணர்ச்சி கவிமணியின் பாடல்களில் மிகுதியாக காண முடிகிறது. இவரிடம் அமைந்த பண்பு, வாழ்ந்த சுழ்நிலை, பெற்றகல்வி முறை, முதலியவை இவருடைய பண்பாட்டுணர்ச்சியை வளர்த்தன. இதனால் அவருடைய பாடல்களும் பண்பாட்டுச்சியைப் பிரதிபலிப்பவனாய் அமைந்தன என்று கருதுவதில் தவறொன்றும் இல்லை என்கிறார் சுப்புரெட்டியார். அறிவியலில் மிகவும் ஆழங்கால் பட்டிருந்தமையால் அதில் பெற்ற பயிற்சியினால் எப்பொருளையும் அறிவியல் முறையில் நோக்குதல் வேண்டும் என்ற மனப்பான்மையையும் இவரிடம் உண்டாயிற்று. இந்த மனப்பான்மையும் இவருடைய பண்பாட்டுணர்ச்சிக்கும் வரம் அளித்தது என்று கூறுகிறார் சுப்புரெட்டியார். கவிமணியின் பாடல்களில் பண்பாட்டு செய்திகள் இருப்பதை பின்வருமாறு கூறியுள்ளார். இவ்வியலில் இயற்கை, வாழ்வியல், இறையன்பு, நிலையாமை, மக்கள் பண்பு, ஞான உபதேசம், இரட்சிகர், தெய்வத் தமிழ், பண்டைய இலட்சியங்கள் போன்ற பண்பாட்டு செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**இறை அன்பு:**

கவிமணி இயல்பாகவே இறையன்புடையவராக இருந்தார். திருநெல்வேலியில் வாழ்ந்து வந்த உமையொருபாக தேசிகர் என்பவரிடம் சிவதீட்சையும் பெற்றார். இவ்வாறு தீட்சை பெற்ற போதுகவிமணி தேசிகர் மீது பாடிய பாடலை நினைவு கூறலாம் என்கிறார் சுப்புரெட்டியார்.

**“வேறும் ஒருதுணையான் வேண்டுவனோ? வேணுவனம்**
**தேறும் உமையோர் பாகத் தேசிகனே! – எனக்கு**
**எய்யாப் பிறவி இருள் அகல நீ அளித்த**
**பொல்லா விளக்கிருக்கும் போது”[1]**

தாம் பிறந்த ஊராகிய தேரூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அழகம்மையின் மீது அழகம்மை ஆசிரிய விருத்தம். (10 பாடல்கள்) என்னும் பதிகத்தையும் அடுத்துள்ள சுசீந்திரத்தில் எழுந்தருளியுள்ள தாணுமாலயப் பெருமாள் மீது பல தோத்திரகளையும் துதிப்பாடல்களையும் இயற்றியுள்ளார். இங்ஙனம் இவர்தம் சமயப் பற்றும் இவருடையை பண்பாட்டுணர்ச்சியை மிக ஆழமாக்குவதற்கு காரணமாக அமைந்தது. இவ்வுணர்ச்சியின் விளைவாக இவர் மூலம் "கலைமகள் துதி, இலக்குமி துதி, செந்தில்குமரன், முருகன் புகழ்மாலை" முதலிய பக்தி பாடல்கள் பிறந்தது.

**தெய்வத் தமிழ்:**

கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது நம் நாட்டில் வழங்கி வரும் ஒரு பழமொழி. ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒரு முதுமொழி. மக்களிடையே இறைவழிபாட்டை நினைவுறுத்திக் கொண்டே இருக்கும் ஓர் ஆற்றல் நிலையம். நாவுக்கரசரும் இதுபற்றி ஒரு தேவாரம் பாடியுள்ளார்.

**"திருக்கோயில் இல்லாத திருவி லூரும்**
**திருவெண்ணீா் அணியாத திருவி லூரும்**
**பருக்கோடிப் பத்திமையால் பாடா வூரும்**
**பாங்கினொடு பலதலங்கள் இல்லா வூரும்**
**விருப்போடு வெண்சங்கம் ஊதா ஆரும்**
**விதானமும் வெண்கொடியும் இல்லா வூரும்**
**அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணா வூரும்**
**அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே"[2]**

என்ற திருப்பாடலில் கோயில் ஓர் ஊரின் வானொலி நிலையம் போல. ஒரு தொலைக்காட்சி நிலையம் போல பல தெய்வச் செயல்கட்கு இருப்பிடம் போல் இயங்குவதைக் கண்டு அறியலாம்.

**பண்டைய இலட்சியங்கள்:**

பலவழிகளாலும் உரம் பெற்று வளர்ந்த பண்பாட்டுணர்ச்சி மிக்க இவர்தம் உள்ளம் நமது மூதாதையர்களின் பண்டைய இலட்சியங்கள் மீது சாயத் தொடங்கியது. அவற்றின் பெருமையை எண்ணி எண்ணி இவர் மனம் கனியத் தொடங்கியது. உயர்ந்த இலட்சியங்கள் யாவும் திரண்டு உருப்பெற்று விளங்குவது போல் தோன்றிய புத்தர் பெருமான் வரலாற்றில் தம் மனத்தைப் பறிகொடுத்தார். ஆங்கிலத்தில் எட்வின் ஆர்னால்டு எழுதிய ஆசியசோதி என்ற நூலைப் பலமுறை கற்று அந்த நூலின் அழகையும் புத்தர் பிரானின் குணநலன்களையும் அனுபவித்து மகிழ்ந்தார். இந்த அனுபவத்தின் விளைவாக (புத்தர் அவதாரம், புத்தரும் ஏழைச்சிறுவனும், கருணைக்கடல், புத்தரும் மகனை இழந்த தாயும், காதல் பிறந்த கதை) முதலிய கவிதைத் தொகுதிகள் தோன்றின. இவற்றின் தொகுப்பே"ஆசிய சோதி" என்ற அரியதொரு நூலாக வடிவம் பெற்றது. இப்பாடல்களின் சில பகுதிகள் தற்காலித் தமிழ் இலக்கியத்தில் தலை சிறந்து விளங்குவதைக் கண்டு மகிழலாம் என்கிறார் சுப்புரெட்டியார்.

**"வையகத்தில் உயிர்கள்மிக வாடக் கண்டேன்**
**வழியறியாது அவைமயங்கி வருந்தக் கண்டேன்**
**மெய்யிதுஎன்று உய்யும்நெறி காட்டி நன்மை**
**விளைவிப்பர் எவரையுமே கண்ணிற் காணேன்"**[3]

இப்பாடல் தேவர் அவையில் இறைவன் பேசிய அருளுரை என் மனக்காதில் கேட்டது என்கிறார் கவிமணி. இதில் புத்தர் அவதரித்த செய்தியை கவிமணி அறிந்ததாக சுப்புரெட்டியார் கூறுகிறார்.

**இயற்கை:**

இயற்கை பற்றி இவர் இயற்றிய பாடல்கள் பண்பாட்டுணர்ச்சியைப் பளிச்சிடுவதாய் அமைந்துள்ளன. மேல்நாட்டு கவிஞர்களாகிய வொர்ட்ஸ் வொர்த், டென்னிசன் போன்றவர்களின் இயற்கையை பற்றி பாடிய பாடல்களை திறன்வாய்வாளர்கள் அவற்றைப் பலபடியாக புகழ்வதை காண்கின்றோம். சைவசமய குரவர்களாகிய சம்பந்தர், நாவுக்கரசர், தம்பிரான் தோழர் இவர்கள்

பாடல்களிலும் ஆழ்வார் பெருமக்கள் அருளியுள்ள பாசுரங்களிலும் இயற்கை பற்றிய வருணனைகளைக் கண்டு அறிய முடிகிறது. எடுத்துக்காட்டாக ஞானசம்பந்தர் தேவராத்தில் ஒரு பாடல்.

**“புலனைந்தும் பொறிகலங்கி**
**நெறிமயங்கி அறிவழிந்திட்டு**
**ஐம்மேல் உந்தி**
**அலமந்த போதாக**
**அஞ்சேல் என்றருள் செய்வான்**
**அமரும் கோயில்**
**வலம் வந்த மடவார்கள்**
**நடமாட முழவதிர**
**மழையென் றஞ்சி**
**சிலமந்தி அலமந்து**
**மரமேறி முகில்பார்க்கும்**
**திருவையாறே”[4]**

இப்பதிகத்தின் பாடல்கள் அனைத்தும் ஈற்றடிகள் இரண்டிலும் திருவையாற்றின் இயற்கைச் சுழல் அற்புதமாகக் காட்ட பெறுகின்றது. இப்பாடலில் இயற்கை பண்பாடு இருப்பதை சுட்டிக் காட்டியுள்ளார் சுப்புரெட்டியார்.

திருமங்கையாழ்வாரின் திருக்கோவலூர் பற்றிய திருமொழியில் அத்தலத்து இயற்கைச்சூழல் அழகுற அமைந்திருப்பதை காணலாம்.

**“எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட**
**இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன்காட்ட**
**செழுந்தட நீர்க்கமலம் தீவிகை போல் காட்டும்**
**திருக் கோவலூர் “[5]**

என்றும்

**“கோங்கரும்பும் சுரபுன்னை குரவு ஆர்சோலைக்**
**குழாம்வரிவண்டு இசைபாடும் பாடல் கேட்டுத்**
**தீங்கரும்பு கண்வளரும் திருக்கோ வலூர்”[6]**

என்றும் திருக்கோவலூர் பற்றிய பாசுரங்களால் இயற்கை வளம் சித்திரிக்கப் பெற்றிருப்பதைக் காண முடிகிறது.

நம்மாழ்வார் இயற்கையில் இறைவனையே கண்டு மகிழ்வார்.

**“பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற**
**காவி மலர் என்றும் காண்தோறும் ! – பாவியேன்**
**மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வலை**
**எல்லாம் பிரான் உருவே என்று”[7]**

என்ற பாசுரத்தில் திருமால் இயற்கை அனைத்திலும் நீக்கமற நிறைந்துள்ளார் என்று கூறப்பட்டுள்ளது.

கவிமணியின் பாடல்களில் புல் பேசும். அது தன்னைப் பசும்புல் என்று அறிமுகப்படுத்திக் கொண்டு, தன் சுயசரிதையைக் கூறுகின்றது. மலர்கள் திருவாய் மலர்கின்றன.

**“பூமகளின் புன்னகைப்போல்**
**பூத்திடு வோமே – கம்பன்**
**பாமணக்கும் தமிழினைப் போல்**
**பரமளிப்போமே”[8]**

என்பதில் இதனைக் காணலாம். மலையை நோக்கி அணில் பேசுகின்றது. சூரிய காந்தியை நோக்கி கவிஞர் பேசுகின்றார்.

**“காயும் கதிரவன் மேனியை நோக்க – உன்**
**கண்களும் கூசிக் கலங்காவோ**

**நேயம் மிகுந்தவர் காய வருத்தம்**
**நினைப்பதும் இல்லையே? சொல் அடியே"**[9]

என்ற பாடலில் இதனை காணலாம். கடலை நோக்கி கவிஞர் பேசுகின்றார். இங்கெல்லாம் பண்பாட்டுணர்வுகள் பளிச்சிடுகின்றன. இதன்மூலம் கவிமணி தம் பாடலில் இயற்கையை இணைத்து பாடியுள்ளதும் இயற்கை மீது கொண்டிருந்த ஈடுபாட்டையும் கூறியுள்ளார் சுப்புரெட்டியார்.

**இறைவனின் இருப்பிடம்:**

ஆங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியுடன் இறைவனின் இருப்பைக் காட்டுவது இந்திய பண்பாட்டின் அடிநிலைக் கொள்கை. இறைவன் அணுவுக்கு அணுவாயும் எல்லாப் பொருள்களும் இயங்கு திணை, நிலைத்திணை அனைத்திலும் உறைகின்றான். அந்தர் யாமித்துவம் என்று அவை குறிப்பிடும் இக்கொள்கைகளை கம்பநாடன்,

**"வானின்று இழிந்து வரம்கந்து**
**மாபூ தத்தின் வைப்பெங்கும்**
**ஊனும் உயிரும் உணர்வும்போல்**
**உள்ளும் புறமும் உளன் என்ப"**[10]

என்று விளக்கி வைப்பார். இந்த அடிநிலைக் கொள்கைக்கு ஏற்பக் கவிமணியும் கிளி முதலிய பறவைகளை குறித்து ரோஜா முதலிய செடிகளை குறித்தும் மழலை மொழிபேசும், குழந்தைகளை குறித்தும் பாடிய பாடல்களில் பண்பாட்டுணர்ச்சியின் பெருமை பளிச்சிடுகின்றது. கிளியை குறித்து,

**"கொம்பிற் கொலுவிருந்து – களித்து நீ**
**கூவும் குரல் வருமேல்**
**பம்பி யெழுஞ் சோலை எனக்குப்**
**பரம பதம் அடியோ!**[11]

என்ற பாடல்களில் இயற்கையை கடந்தும் அதற்கு ஆதாரமாய் நின்று விளங்கும் தெய்வீக சக்தியை இவர் அனுபவிக்கும் திறத்தை உணர்த்துகின்றது. மழலையர் பேசுவதைக் குறித்து இவர் பாடிய பாடல்களும் இத்தகைய அனுபவத்தின் பெருமையை நமக்குப் புலனாகின்றது.

**“பூவின் அழகுனது முகத்தில் - என்றும்**
**பொலிந்திடும் காரணம் என்? குழந்தாய் !**
**தேவரும் கண்டறியாக் காட்சி – யானும்**
**தெளிவுறக் கண்டபலன் அம்மா![12]**

இவை முன்னற் குறிப்பிட்டத்தற்குச் சான்றுகளாகும். ஆக, இறைவன் அனைத்து உயிர்களிடத்தும் வீற்றிருக்கிறான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

**நிலையாமை:**

நம் நாட்டு கொள்கைகளுள் நிலையாமை கொள்கையும் ஒன்று. வள்ளுவ பெருந்தகையும்

**“நில்லா தவற்றை நிலையின் என்றுணரும்**
**புல்லறி வாண்மை கடை”[13]**

என்று கூறுவர். இளமை, யாக்கை, செல்வம் இவற்றின் நிலையாமையை உணர்த்தி, நிலைத்த இன்பத்தை நல்குவதாகிய வீடுபேற்றை வற்புறுத்தி அதற்கு உபாயமாகிய துறவைக் கூறுகிறார் வள்ளுவர். வேறுசில ஆசிரியர்கள் குறிப்பாக அகத்துறைப்புலவர்கள், யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை என்ற இரண்டனையும் குறிப்பிட்டு இல்லற இன்பத்தைக் காலம் தாழ்த்தாமல் நுகர வேண்டும். என்று கூறியுள்ளார் கலித்தொகையாசிரியர்.

**“இளமையும் காமமும்**
**நின்பாணி நில்லா”[14]**

எனவும்

**“இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்**
**ஒரோவகை தம்முள் தழீஇ ஓரோஓகை**
**ஒன்றன்கூ றாடை உடுப்பவரே யாயினும்**
**ஒன்றினர் வாழ்க்கையை வாழ்க்கை அரிதரோ**
**சென்ற இளமை தரற்கு”[15]**

என்று கூறுவர். இந்த இரண்டாவது வகை ஆசிரியர்களின் கருத்தைப் பெரும்பாலும் கொண்டதே உமர்கய்யாம் பாடல்

**“மலர்ந்து நல்லமணம் வீசி**
**வையம் புகழ வாழாமல்**
**உலர்ந்து வீழும் அரும்புகளில்**
**உலகில் யாரே எண்ணிடுவார்?[16]**

என்ற பாடல்கள் சான்றுகளாகும். இன்னும் பிறிதோரிடத்தில்

**“ஆகாய மளவுயர்ந்து வளர்ந்து நின்ற**
**அரண்மனையும் அரைநொடியில் அழியுமென்று”[17]**

என்ற பாடலில் நிலையாமை கூறப்பட்டுள்ளது. இங்ஙனமாக கவிமணி இப்பாடலில் விளக்கி இருப்பது போல் வேறு எங்கும் தமிழ் இலக்கியங்களில் காணமுடியாது. இப்பாடல்களும் இவர் இந்திய பண்பாட்டைத் தலையாய நோக்கமாக கொண்டுள்ளார் என்பதை விளக்குகின்றது. இந்த நெறியினைப் பின்பற்றியே தமது வாழ்வின் பெரும்பகுதியிலும் பாடி வந்துள்ளார் இப்பெருமகனார் என்கிறார் சுப்புரெட்டியார். கவிமணியின் பாடல்களில் நிலையாமை செய்தி கூறப்பட்டுள்ளதை இதன்வழி அறிய முடிகிறது.

**மக்கட் பண்பு**

கவிமணியின் பாடல்களில் மக்கட்பண்புக் கோட்பாடு பல இடங்களில் காணப்படுகின்றது. சமய நூல்களும் சமயச் சார்பான நூல்களும் மறுமையில் வீட்டுலகம் அடைவதற்கு உதவுபவை. மக்களது இல்வாழ்விற்கு உதவி அவர்களுடைய நலத்தைப் பேணுபவை நமது பண்டைய இலக்கியங்களாகும். இவற்றை நன்கு கற்பதால் மக்கட்பண்பு சிறந்து விளங்கும் என்பது அறிஞர் கொள்கை. தமிழின் மறுமலர்ச்சியில் இதுவும் ஓர் அம்சமாகும். திருக்குறளைக் குறித்து

**“வள்ளுவர் தந்த திருமறையைத் - தமிழ்**
**மாதின் இனிய உயிர்நிலையை”**[18]

என்பார். மேலும்

**“மக்களுக்கு மாநிலத்தில் வாழ்க்கை வழிகளெலாம்**
**சிக்கலறக் காட்டிநலம் செய்நூலாம்”**[19]

என்று சிறப்பிப்பார். கலித்தொகையை குறித்து

**“கற்றவர் மெச்சும் கலித்தொகையாம் - இன்ப**
**கற்பனை சேரும் களஞ்சியத்தை”**[20]

என்று பாராட்டுவார்.

இலக்கியக் கல்வியாலன்றியே பிற வழிகளாலும் நம் மக்கள் வாழ்க்கையில் மேம்பட்டு விளங்க வேண்டும் என்று கருதி வேறுபல பாடல்களும் பாடியுள்ளார். நம் கவிமணி “வையமும் வாழ்வும்” என்ற பகுதியிலுள்ள பாடல்கள் பலவும் இத்தகையனவே என்கிறார் சுப்புரெட்டியார்.

**பாண்டியாடுதல்:**

சிறுமியர்கட்கு ஏற்ற விளையாட்டு. அவர்களை மனங்கவரும் விளையாட்டு. இத்தலைப்பில் பாடல்கள் உள்ளன.

**“பாங்கி தோழி, பங்கஜம்!**
**பாண்டி யாட வாராயோ?**

**பாட்டி எனக்குப் பரிசளித்த**
**பல்லாங் குழியைப் பாரிதோ!''[21]**

**''மாமா நேற்று வாங்கித் தந்த**
**மாணிக் கத்தைப் பாரிதோ**
**அத்தை தந்த கட்டிமுத்தின்**
**அழகை வந்து பாரிதோ!''[22]**

திருமணத்தில் பெண்ணையும் மாப்பிள்ளையையும் நலுங்கு முதலியவை நடைபெறும்போது இந்த விளையாட்டில் விடுவார்கள். இதில் பழக்கமில்லாத அப்பாவி மாப்பிள்ளை பெரும்பாலும் தோற்று விடுவதே நடைமுறை. பெண்ணின் தோழியர் யாவரும் பெண்ணின் வெற்றியை கைகொட்டிச் சிரித்து மகிழ்வார்கள். மாப்பிள்ளை முகத்தில் அசடு வழியும். இவைகள் சுவைத்து களித்து படிக்கத்தக்கவை. பாடி மகிழ தக்கவையாக அமையும்.

**பறவை வாழ்வில்:**

மரங்களில் தங்கி ஆனந்தமாய்ப் பாடிக் கொண்டிருக்கும் பறவையின் வாழ்க்கையைக் கண்டு, அதனின்றும் சில படிப்பினைகளை வழங்குவார். இவையாவும் மனித பண்பினைப் பற்றியனவாகவே இருக்கும். இந்த பறவையின் வாழ்வில்,

**''பறந்து பறந்தெங்கும் திரியும்**
**பறவை வாழ்வினைப் போல்**
**சிறந்த வாழவேதும் - இந்தச்**
**செகத்தில் கண்டதுண்டோ''[23]**

**"நமனை எண்ணியெண்ணி – உள்ளம்**
**நடுந டுங்கிடாமல்**
**அமைதி காணலாம் நித்தியு**
**ஆனந்தம் பெற்றிடலாம்''[24]**

இவற்றை சிந்தித்தால் இவையாவும் மக்கட் பண்புக் கோட்பாடு என்பது தெளிவாகும்.

**“ஆதி எது? என்று – வினவும்**
**அவன் ஓர் அறிவிலான்**
**ஆதி இது என்று கூறும்**
**அவனும் ஒரு மூடன்![25]**

அணுவுக்குள் அணுவால் அப்பாலுக்கப்பாலாய் இருக்கும் இறைவனை எப்பொழுதும் சிந்தையில் இருத்தல் வேண்டும் என்பது நமக்கு உணர்த்தும் ஒரு பேருண்மை.

தினை விதைத்தவன் தினை அறுப்பான் . வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்பது உலகினர் வாயில் உதிரும் பொன்மொழி இவ்வுண்மையினைக் கவிமணி

**“நன்மை விதைத்திடில் என்றும்**
**நல்மையே விளையும்**
**தின்மை விதைத்திடில் - அதுபோல்**
**திண்மையே விளையும்”[26]**

என்று விளக்குவர். ஆதலால்

**“பொய் களைந்திடுவோம் - மெய்யைப்**
**போற்றி நின்றிடுவோம்**
**செய்கடனை நிதம் - உலகில்**
**செய்து வாழ்ந்திடுவோம்”[27]**

என்பது நமக்கு அப்பெருமான் உணர்த்தும் அறிவுரை. இதனையே நித்திய நைமித்தி கருமங்கள் என்று சமய நூல்கள் குறிப்பிட்டுக் காட்டும் என்கிறார் சுப்புரெட்டியார்.

**ஞான உபதேசம்:**

சில கருத்துக்களை மனத்திற்கு உபதேசிப்பதாகக் கவிதைகள் அமைந்துள்ளன. இறைவனால் திருநாமங்களை நாவினால் ஒலியின்றி நவிற்றிக் கொண்டு தியானத்தில் ஈடுபடுமாறு ஆற்றுப்படுத்துகின்றார். உருவ வழிபாட்டிற்கு இவர் முக்கியத்துவம் தருவதில்லை. பூ, கற்பூரம் முதலிய ஆராதனப் பொருள்கள் கூடத் தியானத்திற்கு தேவை இல்லையல்லவா? மனத்தில் ஞான தீபத்தை ஏற்றுமாறு உபதேசிக்கின்றார். ஒரு வகையில் இது வள்ளல் பெருமானின் கொள்கையை ஒத்துள்ளது.

> **“நெஞ்சகமே கோயில் நினைவேசுகந்தம் அன்பே**
> **மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய்! பராபரமே![28]**

என்ற தாயுமானவர் வாக்கும் நினைவுக்கு வருகின்றது.

அப்பர் பெருமானின் திருவாக்கும் நினைவிற்கு வருகின்றது ஞானஉபதேசத்திற்குரிய கருத்துக்களும் கவிமணியின் பாடல்களில் பொதிந்துள்ளதாக சுப்புரெட்டியார் கூறியுள்ளார்.

**குதிரைகள்:**

இன்று குதிரைகள் வண்டி இழுக்கவும் வட்டரங்குகளில் சுற்றி சுற்றி ஓடவும் தனிபட்டோர் சவாரி செய்யும் ஓட்டப்பந்தயத்தில் பயன்படுத்தவும், ஊர்க்காவலர் படையில் சவாரி செய்யவும், போர்த்துறையில் குதிரை படைகளாகவும் பயன்படுத்தப் பெறுகின்றன. இவற்றையெல்லாம் குதிரைகள் விரும்புவதில்லை வெறுக்கின்றன. தம் குறைகளைக் குதிரைகளே சொல்லுவதாகக் கவிமணியின் பாடல்கள் அமைந்துள்ளன. சிலர் குதிரைகளின் வால் மயிரை வெட்டிக்குஞ்சம் போல் ஆக்கி விடுகின்றனர்.

> **“வளர்ந்து வரும்வாலை வெட்டி வெட்டித் - தேய்ந்த**
> **மாறுபோல் ஆக்கிக் குறைத்திடும் நீர்**

**தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை ஓட்டிடத்**
**தக்க உதவிகள் செய்வதுண்டோ''[29]**

வாயில் கடிவாளம் போடுவதையும் உடம்பின் குறுக்கே சேணம் இடுவதையும் அவை விரும்புவதில்லை பார்வையைக்கட்டி மறைப்பதையும் வெறுக்கின்றது.

எல்லா செயல்களிலும் பங்கு கொள்ளும் குதிரைகளின் கால ் குளம்புகளின் பாதுகாப்புக்காக லாடம் கட்டுவதை விரும்புவதில்லை தோள் பட்டைகளை கட்டுவதையும் அவை வெறுக்கின்றது.

குதிரைகள் புலம்பல் பற்றிய பாடல்கள் அற்புதமாய் அமைந்திருப்பதால் அனைத்துமே ஈண்டு காட்டி விளங்க பெற்றது. கவிமணியின் மக்கட் பண்பு பேணும் தன்மை இவற்றில் அற்புதமாக வெளிப்படுகின்றது என்கிறார் சுப்புரெட்டியார்.

**இரட்சிகர்:**

சமயப் பொறை சமரச நிலை ஆகிய இவை தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள். தமிழ்ப் பண்பாட்டின் உருவமான கவிமணி இயேசு பெருமானைப் பற்றியும் பாடியுள்ளார். இப்பாடல்கள் சுருக்கமாக அப்பெருமான் வரலாற்றையும் அவர் மன்பதைக்கு உரைத்த செய்திகளையும் குறிப்பிடுகின்றன.

**''பூமியை ஆளுதற்குத் - தேவ**
**புத்திரன் வந்துதித்தான்**
**சேமம் பிறக்குமென – யூதர்**
**சிந்தைகளித்திருந்தார்''[30]**

இப்பாடலில் இயேசுப் பெருமானைப் பற்றி கூறியுள்ளார். இவர் பாடல்கள் யாவும் பாமர மக்களுக்கும் படித்து நுகரும் வண்ணம் கவிமணி கூறியுள்ளார்.

இங்ஙனம் நமது பண்பாட்டினை உயிர் நாடியாக கொண்டுள்ளன. கவிமணியின் பாடல்கள் இந்நெறியை கடைப்பிடித்தே தமது வாழ்வின் பெரும்பகுதியிலும் பாடி வந்துள்ளார். கவிமணியின் பாடல்களை

நோக்கின் அவர் முற்போக்கு கருத்துடையவர் என்பது தெளிவாகின்றது தாம் வாழும் சமுதாயம் பலவகை இன்னல்களும் நீங்கி அதற்குரிய உயரிய நிலையை அடைய வேண்டும் என்ற ஆழ்ந்த உணர்ச்சியை உடையவர் கவிமணி.

**முடிவுரை:**

பண்பாடு கால தேச நியதிகளுக்குள் அடங்குவதன்று. பிற நாடுகளிலும் பிற சமயங்களிலும் உள்ள பெரியோர்களையும் சான்றோர்களையும் பாராட்டிப் போற்றும் இயல்பு வாய்ந்தது.

பண்பாட்டு கூறுகளாகன இயற்கை, வாழ்வியல், நிலையாமை, இரட்சிகர், தெய்வத் தமிழ், இறையன்பு, ஞானஉப'தேசம் போன்ற பண்பாட்டு செய்திகளை இதன் வழி அறிய முடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 4

2) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 1

3) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 5

4) தேவாரம் பா. எண் - 8

5) நாலாயிரத் திவ்ய பிரபந்தம் பா. எண் - 3

6) நாலாயிரத் திவ்ய பிரபந்தம் பா. எண் - 4

7) கவிமணி பா.எ - 10

8) கவிமணி பா.எ – 2

9) கவிமணி தேசிகவிநாயம் பிள்ளை பா. எண. - 16

10) கம்ப இராமாயணம் பா. எண் 15

11) கம்ப இராமாயணம் பா. எண் 15

12) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 6

13) திருக்குறள், மணக்குடவா் உரை, குறள் - 331

14) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் - 18

15) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -19

16) கலித்தொகை பா. எண் - 5

17) கவிமணி பா.எ – 21

18) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 1

19) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 6

20) கலித்தொகை பா.எண் -4

21) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -11

22) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -23

23) கவிமணி – 3

24) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -22

25) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -3

26) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -5

27) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -7

28) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் பா.எண் -8

29) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -5

30) கவிமணியின் தமிழ்ப்பணி, பா.எண் -8

# முடிவுரை

ந. சுப்புரெட்டியார் அவர்கள் பல தமிழ் நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு என்பது ஒரு நூல் இந்நூலில் கவிமணியின் படைப்புகளில் உள்ள அனைத்து கருத்துக்களையும் ஆராய்ந்து திறனாய்வு செய்து கூறியுள்ளார். கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை பாரதியின் பரம்பரையைச் சார்ந்தவர் நடை, கற்பனை, சந்தம் முதலிய அம்சங்களில் பாரதியைப் பின்பற்றியவர். தமிழ்ப் பண்பாட்டினை உணர்த்தும் கவிமணியின் அரிய கவிதைகளின் பால் தமிழ் மக்கள் பெரிதும் ஈடுபட்டனர். தமிழகமெங்கும் அவர்தம் புகழ்மனம் பரந்து கமழ்ந்தது.

கவிமணி திறம்பட தம் கவிதைகளில் கருத்துக்களை கூறியுள்ளார். மொழிபெயர்ப்பு செய்தும் கவிதை படைப்பை உருவாக்கியுள்ளார். இயற்கையை நயம்பட கூறியுள்ளார். கற்றோருக்கு இன்பம் தரக்கூடியவையாக அமைந்துள்ளது.

நல்ல கவிதைக்குரிய குணமும், நயமும், இன்பத்தை உண்டாக்க வல்ல அகத்தெழுச்சியும் கவிதையின் கட்டுக்கோப்பும கவிமணியின் பாடல்களில் மிளிர்கின்றன. பெண்களின் உரிமைகள் அற்புதமாக சித்தரித்து கூறியுள்ளார் ந. சுப்புரெட்டியார் பல்லோர் பாராட்டும் கவிதைகளில் உள்ளம் பறிகொடுத்தவர். ந. சுப்புரெட்டியார் கவிஞர்களில் கவிமணி தலைசிறந்தவர் என்று மதிப்பீட்டு கூறியுள்ளார்.

# துணை நூற்பட்டியல்


**முதன்மை ஆதாரம்:**

| | | |
|---|---|---|
| கவிமணியின் தமிழ்பபணி ஒரு மதிப்பிடு | - | ந. சுப்புரெட்டியார்<br>முதற்பதிப்பு - 2002<br>கலைஞன் பதிப்பகம்<br>19 கண்ணதாசன் சாலை<br>தியாகராஜன் சாலை<br>சென்னை 600 017 |

**துணைமை ஆதாரம்:**

| | | |
|---|---|---|
| **கவிமணி** | - | **அரசு**<br>முதற்பதிப்பு – 1955<br>மறுபதிப்பு – 2002<br>திருநெல்வேலி தென்னிந்திய<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக்<br>கழகம்<br>154 டி.டி.கே. சாலை<br>சென்னை – 18 |
| கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை | - | செ. சுதாசிவம்<br>முதற் பதிப்பு – 2011<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>41-டி சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட்<br>அம்பத்தூர் சென்னை 600 098 |
| கலித்தொகை | - | தமிழமுதன்<br>முதற் பதிப்பு – 1988<br>சாராதா பதிப்பகம்<br>சென்னை 600 014 |
| கம்ப இராமாயணம் | - | வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார்<br>முதற்பதிப்பு – 1985<br>உமா பதிப்பகம்<br>பவளக்காரத் தெரு<br>சென்னை 600 001 |

| | | |
|---|---|---|
| தாயுமானவர் (மூலமும் உரையும்) | - | தி. சம்பந்த முதலியார்<br>உமா பதிப்பகம்<br>10/171 பவளக்காரத் தெரு |
| திருக்குறள் | - | மணக்குடவர் உரை<br>சாரதா பதிப்பகம்<br>சென்னை 600 014 |
| தேவாரம் | - | பி.ரா. நடராசன்<br>முதற்பதிப்பு – 1985<br>உமா பதிப்பகம்<br>பவளக்காரத் தெரு<br>சென்னை 600 001 |
| நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் | - | பொய்கையாழ்வார்<br>முனைவர் த.கோவேந்தன்<br>சாரதா பதிப்பகம்<br>சென்னை 600 014 |

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

# தாயுமானவர்



1916  2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publication*

# தாயுமானவர் குறித்து ந.சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முதுகலைத் தமிழ்

இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

**செ.சுவாதி**

**பதிவு எண் : P18100424**

**நெறியாளர்**

முனைவர் **அ.இரா.கோமதி,** எம்.எ., எம்.பில்., பி.எச்.டி.,

**இணைப்பேராசிரியர்**

**தமிழாய்வுத்துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**





**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் (மூன்றாம் சுற்று)**

**A தகுதி (CGPA 3.41/4) பெற்றது**

**திருச்சிராப்பள்ளி – 620 018**

**மார்ச் - 2020**

# நன்றியுரை

'தாயுமானவர் குறித்து ந.சுப்புரெட்டியாரின் சிந்தனைகள்' என்ற தலைப்பில் இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சிக்கும்) எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றேன்.

எங்களை வழிநடத்திச் செல்லும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ. சுஜாதா அம்மா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். மேலும் எம் தமிழாய்வுத் துறைத் தலைவரும் துணைமுதல்வருமான முனைவர் ச. இராமலட்சுமி அவர்களுக்கும், இவ்வாய்வுக்கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத் தோடு ஆய்வுத் தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழிநடத்திச் சென்று கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர் முனைவர் அ.இரா கோமதி அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய் பளித்த காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கிய ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வுக் காலத்தில் எனக்கு ஊக்கமளித்த தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எம் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

என் ஆய்விற்கு உதவிய என் தந்தையார் போ. சேல்வம் எனது சகோதரன் செ. அரவிந்த் எனது பாட்டி மூக்காயி அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

எனக்கு துணை நின்று பல உதவிகளை செய்த தோழிகளுக்க் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைச் செம்மையாக கணினி தட்டச்சு செய்து கொடுத்த செல்வி பா.சரண்யா அவர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வாளர் கையொப்பம்
(செ.சுவாதி)

# பொருளடக்கம்


| இயல் எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1 | தாயுமானவரின் வாழ்க்கை வரலாறு | 5 |
| 2 | சுப்புரெட்டியாரின் ஆன்மீகப் பார்வை | 24 |
| 3 | சுப்புரெட்டியாரின் தத்துவப் போக்கு | 37 |
| | முடிவுரை | 54 |
| | துணைநூற் பட்டியல் | 55 |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.அ | - | உரையாசிரியர் |
| கு.எ | - | குறள் எண் |
| தெ.ஆ | - | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ. எண் | - | நூற்பா எண் |
| நூற் | - | நூற்றாண்டு |
| பா.அ | - | பாடல் அடி |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| ப.எ | - | பக்க எண் |
| பா.எ | - | பாடல் எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

தமிழ்நாடு திருச்சி மாவட்டம், பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தவர். டாக்டர் ந.சுப்புரெட்டியார் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் முதுகலைப் பட்டமும் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர்.

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960ல் தமிழ்த் துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார். தமிழறிஞர், எழுத்தாளர், பேராசிரியர் எனும் பன்முகம் கொண்ட இவரது 135 நூல்களையும் தமிழக அரசு தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் 2008,2009 ம் ஆண்டில் நாட்டுடைமையாக்கியது.

சுப்புரெட்டியார் அவர்கள் திரு.வி.க விருது திருக்குறள் விருது, டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது, கலைமாமணி விருது போன்ற விருதுகளைப் பெற்றுள்ளார்.

இவர் இயற்றிய நூல்களுள் ஒன்றுதான் தாயுமானவர் அடிகளாரின் வாழ்வு, அவர்களது அருட்செயல்களைப் பற்றியுதும், இவ்வாறு எளிய நடையில் நூல்கள் எழுதி பொதுமக்களுக்கு விருந்தளிக்க வேண்டும் என்கிற பேரன்பு அவர் மனதைப் பல ஆண்டுகளாகவே நெருடிக் கொண்டு இருந்தது.

தெளிவு, இனிமை, எளிமை இவர்தம் நூல்களின் தனிச்சிறப்பியல்புகள் ஆகும். ந. சுப்புரெட்டியார் மதிப்பீடு செய்த

தாயுமானவர் எனது திட்டக் கட்டுரையாக ஆய்வு செய்துள்ளேன். இதில் நான் தாயுமானவரின் வாழ்க்கை பற்றிய செய்தியையும் ஆன்மீகம் பற்றியும், மனதினை பற்றியும் தத்துவமான செய்திகளும் இவ்வாய்வில் தொகுத்து கூறப்பட்டுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு:**

தாயுமானவர் குறித்து சுப்புரெட்டியாரின் சிந்தனைகள் என்பது இவ்வாய்வேட்டின் தலைப்பாக அமைகிறது.

**ஆய்வு நோக்கம்:**

சுப்புரெட்டியாரின் வாயிலாக தாயுமானவரது வாழ்க்கை வரலாற்றையும்,அவரது ஆழ்ந்த ஆன்மீகப் பார்வையையும் மேலும் சுப்புரெட்டியாருடைய தத்துவ நோக்குகளையும் ஆய்வதே இவ்வாய்வேட்டின் நோக்கமாக அமைகிறது.

**ஆய்வு கருதுகோல்:**

தாயுமானவரின் பெருமையினை பிறப்பு முதல் ஆழமாக அனுபவித்து பாடி உள்ளமையை சுப்புரெட்டியாரின் சான்றாதாரங்களுடன் விளக்கியுள்ளார்.

**ஆய்வு எல்லை:**

தாயுமானவரின் பொருள் வணக்கம்,கருணாகரக் கடவுள் சின்மையானந்த குரு, பரிபூரணானந்தம் மௌனகுரு வணக்கம் போன்ற பாடல்கள் ஆய்வு எல்லையாக அமைகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இந்த ஆய்வானது முன்னுரை முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

இயல் - 1 - தாயுமானவர் வாழ்க்கை வரலாறு

இயல் - 2 - சுப்புரெட்டியாரின் ஆன்மீகப் பார்வை

இயல் - 3 - சுப்புரெட்டியாரின் தத்துவப் போக்கு

**இயல் ஒன்று:**

தாயுமானவரின் சிறப்புகளையும், கல்வி, குருவருள் பெற்றமை, அழுவலில்அமர்தல், தாயுமானவர் வாழ்க்கையின் திசை திருப்பம் மற்றும் வாழ்க்கை போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் இரண்டு:**

சுப்புரெட்டியாரின் ஆன்மீகப் பார்வையில் இறைவனின் திருக்குணங்கள், ஆன்மாவின் அருங்குணங்கள், வாழ்வில் வினையின் பங்கு, புனிதமெனும் அத்துவிதம் சித்தர் பெருமக்கள் போன்றவை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் மூன்று:**

சுப்புரெட்டியார் காட்டும் தாயுமானவர் தத்துவங்கள் பற்றியும் மனதினைப் பற்றியும் விளக்குவதாக இவ்வியலில் அமைந்துள்ளது.

**முதன்மை ஆதாரம்:**

இவ்வாய்விற்கு தாயுமானவர் பாடிய பாடல்கள் முதன்மை ஆதாரமாக அமைகிறது.

**துணைமை ஆதாரம்:**

தாயுமானவர் பற்றிய நூல்களும்,ஆய்விற்கு தேவைப்பட்ட பிற நூல்களும், துணைமை ஆதாரமாக பயன்படுத்தப்படுகின்றன.

**முடிவுரை:**

ஆய்வேட்டின் இறுதியில் முக்கியமான முடிவுகள் முடிவுரை என்ற தலைப்பின் கீழ் தரப்பெற்றுள்ளது. ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுத்து ஆய்வேட்டின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

# இயல் - 1

## தாயுமானவரின் வாழ்க்கை வரலாறு

தாயுமானவர் எவ்வுயிரையும் தம்முயிற்போல் எண்ணி இரங்கும் அருள் ஒழுக்கத்தை உலகோர்க்குரைப்பதில் ஒப்பற்ற ஆர்வமுடையவர்.

உலகினர் யாவரும் மெய்நெறியைக் கடைப்பிடித்து அகண்டகாரச் சிவத்தைத் துயக்கும் வண்ணம் கூவும் கருணை முகிலனைய பேரறிவாளர் தாய் என்னும் தலைமையில் தலை சான்றவர்.

உலகம் போற்றும் ஒருமுதல்வனின் பொதுத்தன்மைகளை இன்சுவை ததும்பும் பாடல்கள் வாயிலாகத் தெளிவுறுத்திய பாவலர். உயர்ந்த பேரின்ப நிலை ஒன்றினையே விரைந்து செல்லும் உயிரின் தன்மையைத் தன்னிலை கூறுமுகத்தான் விளக்கிக் கூறியவர்.

மனமாயையின் நுட்பம் உரைத்த மூதறிவாளர் அவரே! சிவானுபூதிப் பெருஞ்செல்வராகிய தாயுமானவர் எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணும் அருளொழுக்கம் உடைய செம்மனச் செல்வர் வடநூல் கடலையும் தமிழ்நூல் கடலையும் நிலைகண்டுணர்ந்த பேரறிஞர். மூவர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் பாடலின் இணையற்ற தீஞ்சுவையையும், மணிவாசகரின் திருவாசகக்கனியையும் நுகர்ந்த தகைமையாளர், அறஒழுக்கத்திலும் அருளொழுக்கத்திலும் தலை நின்ற அருள் ஆசான் வரவையே குறிக்கோளாகக் கொண்டு எதிர்நோக்கும் திருவருட் பதிவுநிலை எய்தியவர்.

தாயுமானவர் **கி.பி பதினெட்டாம்** நூற்றாண்டைச் சார்ந்தவர் அவர்தம் பெற்றோர் **கேடியலியப்பிள்ளை,** தாயார் **ஜெகவல்லி அம்மையார்** ஆவார். வேதாரண்யம் என்று வழங்கப்படும் திருமறைக்காட்டில் கி.பி 1705ல் தோன்றியவர். இளம் பருவத்திலேயே கருணை உள்ளங் கொண்டு சன்மார்க்க நெறியில் ஈடுபட்டவர்.

இவர் பாடல்களில் சமரசத்தைக் காணலாம். கடவுள் என்பது **அன்பு, ஆனந்தம், இன்பம், கருணை, வெட்டவெளி, அறிவு, சோதி** என்பார். மனிதருக்கு மனிதர் வேற்றுமை பாராட்டுவதை, என் தெய்வம் பெரியது. உன் தெய்வம் சிறியது என்று பேசிச் சமயச் சண்டையிடுவதை தாயுமானவர் அறவே வெறுத்தார். கடவுளை வேறிடங்களில் தேடி அலைய வேண்டாம் ஒவ்வொருவரும் தம் உள்ளத்திலேயே கடவுளைக் காணமுடியும் என்பதே தாயுமானவரின் நம்பிக்கை.

தாயுமானவர் காலத்தில் தமிழகத்தில் சாதிச் சண்டைகள் இருந்தன. சமயப் பூசல்கள் நிலவின. மக்கள் பற்பல தெய்வங்களை வணங்கி வந்தனர். மத வெறுப்பும் மத வெறியும் தாண்டவமாடின. மக்கள் ஒற்றுமையின்றி வாழ்வதைக் கண்டு தாயுமானவர் நெஞ்சு உருகினார். கடவுள் ஒன்று, மதங்கள், மதத் தத்துவங்கள் எல்லாம் ஒன்று. வீண் சண்டைகள் வேண்டாம். எல்லோரும் நன்னெறியில் வாழ வேண்டும். என்பதை வலியுறுத்த எளிய தமிழில் பல இனிய பாடல்களை இயற்றினார். இவர் பாடல்களை ஆழ்ந்து படிப்போர் அவற்றின் இனிமையில் ஈடுபடுவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

அடிகள் திருப்பாடல்களில் வடமொழிச் சொற்கள் பயின்று வரினும் செந்தமிழ்ச் சுவை குன்றாமல் நிறைவு பெற்றுள்ளது. **திருக்குறள், திருமந்திரம், தேவராம்** முதலிய நூல்களின் கருத்துகளும், சொற்களும் செவ்விதியின் இடம் பெற்றுள்ளன.

தங்கு தடையின்றிச் செல்லும் ஆற்றொழுக்குப் போன்று, நடை நயம்பட அமைந்துள்ளது. அடிகளின் தெளிவான தூய உள்ளமும், வீடு பேற்றின்கண் உள்ள பேர்அவாப் பெருக்கும் பதார்த்தங்கள் பாராது பரமே பார்க்கும் பெருநோக்கும், வெள்ளம் போன்ற சொற்பெருக்கும், அவர் திருப்பாடல்களில் மிளிர்கின்றன அடிகளாரின் பாடற்பகுதியில் முடிவினை வைத்தும், தொடக்கத்தைக் கொண்டும், பெயர் பெற்றுள்ளன.

தாயுமானவர் **56** தலைப்புகளில் **1452** பாடல்களைப் பாடியுள்ளார். இவர் தம் பாடல்கள் தலைவி கூற்றாய் அமையும். மணிவாசகரின் திருவாசகத்தைக் தழுவியே அமைந்துள்ளனவாகக் கருதப்படுகின்றது.

தாயுமானவரின் பாடல்கள் **வெண்பா, கொச்சகக் கலிப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா** என்னும் பா வகைகளில் அமைந்துள்ளன. பாவினங்களாகிய ஆசிரிய **விருத்தம், கலி விருத்தம், கலித்துறை** வடிவங்களிலும் இவர் பாடல்கள் உள்ளன. **சிந்து, வண்ணம், கண்ணி** ஆகிய வடிவங்களில் அவை அமைந்துள்ளன.

பரிபூரணப் பொருளைத் தாயுமானவர் தேடிச்செல்லுங்கால் இறைவன் அவருக்கு மவுன குருவின் சந்திப்பை ஏற்படுத்தினார். அவரை வணங்கித் தாயுமானவர் தம் குறையைப் போக்குமாறு வேண்டுகின்றார்.

> **“தாயினும் இனிய நின்னைச் சரணென அடைந்தநாயேன்**
> **பேயினுங் கடையனாகிப் பிதற்றுதல் செய்தல்நன்றோ?**
> **தீயிடை மெழுகாய் நொந்தேன் தெளிவிலேன் வீணே காலம**
> **போயினது ஆற்ற கில்லேன் பூரணானந்த வாழ்வே”**[1]

**தாயுமானவரின் பாடல்:**

தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு என்னும் நூலில் **36** தலைப்புகளில் **1452** பாடல்கள் உள்ளன. அவற்றில் **771** பாடல்கள் கண்ணிகளாகவும் **83** பாடல்கள் வெண்பாக்களாகவும் உள்ளன.

**1736** ஆம் ஆண்டு துறவு பூண்ட தாயுமானவரை ஒரு சித்தர் என்பார்கள். சமரச சன்மார்க்க நெறியைப் பரப்பிய இவரது பாடல்கள் தாயுமான சுவாமிகள் திருப்பாடற்திரட்டு என வழங்கப்படுகிறது. தமிழ் மொழியின் உபநிடதம் என அழைக்கப்படும் இதில் **56** பிரிவுகளில் **1452** பாடல்களும் உவமைகளும், பழமொழிகளும் இடம் பெறுகின்றன.

> **“சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும**
> **மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே”**[2]

**தாயயுமானவா் கல்வி:**

பாடசாலையில் கல்வி கற்றார். தாயுமானவா் **தமிழ், வடமொழி, கணிதம், ஜோதிடம்** போன்றவற்றில் நிபுணராக விளங்கினார். தாயுமானவா் இளம்பிறை போல் இனிது வளா்ந்து வந்தார். பெற்றோர்கள் அவருக்கு உரிய காலத்தில் கல்வியைத் தொடங்கினா்.

**"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து"[3]**

ஒருவனுக்கு ஒரு பிறப்பிலே கற்ற கல்வியானது ஏழு பிறப்பிலும் பயன் உடைத்து என்ற வள்ளுவா் கருத்துப்படி முற்பிறப்பின் வாசனையால் தென்மொழி வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் உள்ள **இலக்கியம், இலக்கணம்,** தருக்க முதலாய நூல்களைப் பிழையின்றி ஓதிக் கற்றுத் துறைபோய வித்தகரானார்.

இவற்றை நன்குணா்ந்த தாயுமானவரின் கல்வி வெறும் உலக அளவில் மட்டும் நின்று விடவில்லை. இந்த உலக வாழ்வின் உச்சியில் திகழும் உண்மை நாட்டம், மெய்யுணா்வின் நாட்டம், அவரை ஈா்த்தன. வாலறிவன் நற்றான் தொழுது வாழ்க்கையின் பயனை அடைய அவா் மனம் அவாவி நின்றது.

இவா் கற்ற கல்வியெல்லாம் ஆன்ம இலாபத்தை அடைதல் எவ்வாறு என்றும் அதனையே விரும்பும் பெருவேட்கை எழுவதற்கே உதவுவனவாயின

**"மண்ணொடு விண்காட்டி மறைந்துமறை யாவருனைக்**
**கண்ணொடுகண் ணாகஎன்று காண்பேன்? பராபரமே"[4]**

என்பவற்றால் திருவருட்பெற்றியோா்ந்து அதனை எப்போதும் பாடியும் தேடியும் பயன்பெறும் அவாவினைக் கண்டு தெளியலாம்.

**தாயுமானவர் அலுவலில் அமர்தல்:**

இந்நிலையில் திருச்சிராப்பள்ளி அரசர் குடும்பத்தில் இரண்டு தலைமுறைகள் கழிந்தன. முத்துக்கிருட்டிணநாயக்கரும், முத்து வீரப்ப நாயக்கரும் மறைந்தபின்னர் விசயரங்க சொக்கநாத நாயக்கர் ஆட்சிக்கு வந்தார். இவரது ஆட்சிக் காலத்தில் தான் கேடியலியப்பப் பிள்ளை சிவப்பேறு எய்தினார். அரசர் தாயுமானவரை வரவழைத்து அவர்தம் ஆற்றலைப் பரிசோதனையாலறிந்து மிக வியந்து தந்தை வசித்து வந்த பதவியை மைந்தருக்கு நல்கினார்.

உலகியலில் தமக்கு வழிமுறையாக வந்த அலுவலைத் தாயுமானவர் ஏற்று அரசாங்கக் கடமையைச் செவ்விதின் இயற்றி வருபவராயினார்.

எனவே பெரியோர்களை எதிர்ப்படும் போதெல்லாம் தாயுமானவர், தத்துவ ஆராய்ச்சி பற்றிய ஞானதாகம் உடையவராய் இருந்து வந்தமை

**"பாராயோ என்முகம் பார்த்தொருகால் என்கவலை**
**தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே"[5]**

என்முகத்தை பாராயோ, ஒருகால் பார்த்து என் வியானத்தைத் தீராயோ நீ வாய்திறந்து சொல்வாயாக.

சைவத்தில் அதிகம் ஈடுபாடு இருந்தமையால் தேவாரம், திருவாசகம், இருந்தமையால் சைவ ஆகமங்கள், அருணகிரியாருடைய திருப்புகழ், போன்றவற்றையும் நன்கு கற்று வந்தார். தினம் மலைக்கோட்டையில் மலை ஏறித் தாயும்ஆனவன் ஆன சிவனை தரிசினம் செய்து விட்டுப் பின்னர் திருவானைக்காவல் சென்று அகிலாண்ட நாயகியை வழிபடுவதைத் தன்நித்திய தொழிலாக வைத்திருந்தார்.

மலைக்கோட்டை தரிசனம் முடிந்து கீழே இறங்கிக் கொண்டிருந்த தாயுமானவரை வழியில் ஒரு முனிவரைக் கண்டார். அந்நிலையில் தனது உடலும் உள்ளமும் அவர் பால் ஈர்க்கவே, தாயுமானவர் அவருடைய கால்களில் விழுந்து வணங்கினார். அதிகம் பேசாத திருமூலர் மரபில் வந்த அக்குரு மௌனகுரு என

அழைக்கப்பட்டு வந்தார். அம்முனிவரின் வாயினின்று அபூர்வமாகவே சொற்கள் வெளிவரும். அதை ஒட்டியே தாயுமானவர் தம் பாடல்களில் "மூலன் மரபில் ஒரு மௌனகுருவே " என்று போற்றியும் அவரையே தம் குருவாக ஏற்றறுக் கொண்டு அவருக்கு ஆட்பட்டார்.

**குருவருள் பெற்றமை:**

சுமயக்குரவர்கள் வாழ்க்கையினைக் கூர்ந்து நோக்குங்கால் அவர்களுக்கு குருஅருள் திருவருளால் கிடைத்தமை கண்டு தெளியலாம் அப்பர், சம்பந்தர், சுந்தரர் இவர்கட்கு இறைவன் திருவருளே நேரில் கிடைத்தது. அப்பருக்கு நல்லூர்ப் பெருமான் திருவடி தீட்சை நல்கினார். நினைந்துருகும் அடியாரே என்ற முதற் குறிப்புடைய திருத்தாண்டகத்தில் திருவடி என் தலைமேல் வைத்தார் என்று பாடல் தோறும் வரும் சொற்றொடரால் இஃது அறியப்படும். சம்பந்தருக்கு சிவஞானம் அம்பிகையின் முலைப்பால் உண்டதால் கிடைத்தது

சுந்தரரை இறைவனே தடுத்தாட் கொண்டார். மாணிக்கவாசகரைத் திருப்பெருந்துறை இறைவன் குருந்த மரத்தடியில் சிவனடியார்களாகிய மாணாக்கர்கட்கு நடுவே ஆசிரியராக இருந்து ஆட்கொண்டதாக வரலாறு கூறுகின்றது.

திருவெண்ணெய் நல்லூரில் சுவேதவனப்பெருமாள் என்ற பிள்ளைத் திருநாமத்துடன் எழுந்தருளியிருந்த மெய் கண்டாருக்கு வான்வழியாகச் சென்ற பரஞ்சோதி மாமுனிகள் உபதேசித்துச் சென்றார் என்பதை அறிகின்றோம்.

தாயுமான அடிகள் எத்தனையோ நாட்கள் குருவை நாடி அலைந்த வண்ணம் இருந்தார்.

**"தேடினேன் திக்கனைத்தும் தென்டனிட்டேன் சிந்தைநைந்து**
**வாடினேன் என்மயக்கம் மாற்றாய் பராபரமே"[6]**

உன்னைப் பெறவேண்டித் திசைகளெல்லா வற்றினும் தேடினேன். தேடிக்காணாமையால் திசைநோக்கி நமஸ்கரித்தேன் அவ்வாறு நமஸ்கரித்தும்

உன்னைக் காணப் பெறாமையால் மனம் நொந்து வாடினேன் என்று தி. சம்பந்த முதலியார் கூறுகிறார்.

சுவாமிகள் சிவஞான சித்தியார் என்ற நூலில் எட்டாம் சூத்திரம் முப்பதாம் பாடலின் முற்பாதியைத் தாயுமானவர்க்கு ஓதி அவருக்கு மெய்ந்நூல் தெளிவினை அருளினர் என்ற செவிவழிச் செய்தி வழங்கி வருகின்றது இச்செய்தியை அரண் செய்வது போல்

**"பாதிவிருத் தத்தால்இப் பார்விருத்த மாகஉண்மை**
**சாதித்தார் பொன்னடியைத் தான்பணிய தெந்நாளோ"?**[7]

என்ற பாடல்கள் அமைந்துள்ளன,

மாணிக்கவாசகருக்கு பக்குவம் அடைந்த நிலையில் இறைவன் குருந்த மரத்தடியில் குருவாக நின்று ஆட்கொண்டதுபோல் இறைவனும் பெரியோரை அடிபணிந்து ஆசானாய் அருள் புரிவான். அவன் மௌனகுருவாயிலாகத் தாயுமானவருக்கு உயர்ந்த ஞானத்தை நல்கினார் என்று கருதலாம்.

அக்காலத்தில் தருமையாதீனத்தில் யோகப் பயிற்சி சிறப்புற்று விளங்கியது. இதனை அவ்விடத்தில் யோகம் செய்பவருக்காக, வகுத்திருந்த பதினாறு அறைகளின் அமைப்பால் அறிய முடிகின்றது.

அடிகள் எந்நாட்கண்ணி குருமரபின் வணக்கத்துள், கயிலாய பரம்பரை மெய்கண்டார் சந்தானத்தை விதந்தோதிக், குறித்த பதிகத்தின் பிற்பகுதியில் மௌனகுரு வணக்கத்தை ஆறு கண்ணிகளில் கூறினமையும் திருமூலரைக் குருமரபிற் கூறாமையும் காணலாம். **"மூலன்"** என்ற சொல் இறைவனைக் குறிப்பதற்குத் திருமூலரால் வழங்கப்பெற்றுள்ளது **"மூலனை நாடினோம்"** என்ற வாக்கினால் இவற்றை அறியலாம்.

குருவால் ஆட்கொள்ளப்பட்ட தாயுமானவர் ஆன்ம சாதனங்களில் வெகுவிரைவில் முன்னேற்றம் அடைந்தார். ஆச்சாரியருக்கு பக்திபூர்வமாகப்

பணிவிடைகள் புரிந்தார். குருவிடம் மாறாத பக்தியும் பாசமும் வைத்திருந்தத் தாயுமானவருக்குச் சில காலம் குருவை பிரிய நேரிட்டது. பிரிந்திருக்கும் காலத்தில் மனம் குழம்பித் தவித்தார். தாயுமானவர் குருவோ இதற்கெனக்கவலைப்பட வேண்டாம். எனவும் சீடன் தனது கம்மாக்களின் பெரும்பகுதியைப் பூர்த்தி பண்ண வேண்டியே இப்பிரிவு எனவும் அதன் பின்னர் அமையப்போகும் குரு சீடன் உறவு மிக மிகச்சிறப்பாக அமையும் எனவும் உறுதிமொழி கூறியதோடு அல்லாமல், சீடனுக்குப் பிரியும் வேளையில் சும்மா இரு எனும் மந்திர உபதேசம் செய்துவிட்டுச் சென்றார்.

அன்றிலிருந்து அதையே பீஜ மந்திரமாய்க் கொண்ட தாயுமான சுவாமிகள் தன் அனைத்துப் பாடல்களிலும் இந்த உபதேச மொழியை முக்கியக் கருத்தாக அமைத்திருப்பது தாயுமானவர் பாடல்களைப் பொருளுணர்ந்து பாடுவோர்க்கு நன்கு விளங்கும்.

**தாயுமானவரின் வாழ்க்கையில் திசைதிருப்பம்:**

விசயரங்க சொக்கநாத நாயக்கர் உலக வாழ்வை விட்டுவிட்டார். அவருடைய ஆட்சியுரிமை அவர் துணைவி மீனாட்சியின் பொறுப்பிற்கு வந்தது.

அரசமாதேவி தாயுமானவரை அழைத்துப் பெரிய கணக்கர் வேலையைப் பார்க்க வேண்டும் என்று கூறியிருந்தனர். ஒருவாரமாக வேலை செய்த தாயுமானவரின் கட்டழகினால் ஈர்ப்புற்ற அரசமாதேவி ஒரு நாள் தகாத செயலுக்கு அவரை உட்படுமாறு வற்புறுத்தினர். தாயுமானவர் அதற்கு இணங்காமல் அரசமாதேவிக்கு அறிவுரை பகர்ந்து நல்வழிப்படுத்தினார்.

அரசியார், தம்மை ஆட்படுத்த நினைத்த நிகழ்ச்சி அடிகள்தம் மனத்தில் உருத்திக்கொண்டிருந்தால் அவர் மகளிரை இழித்துப் பேச வாய்ப்பு ஏற்பட்டது போலும் என்று கருத இடமுண்டு.

**“இப்பிறவி என்னும் ஓர் இருள்கடலில் மூழ்கி நான**
**என்னும் ஒரு மகரவாய்ப்பட்டு**
**இருவினை எனும்திரையின் ஏற்றுண்டு புற்புதம்**

**எனக் கொங்கை வரிசை காட்டும்**

**-------------------------------------------அஞ்சியே**

**கண் அருவி காட்டும் எளியேன்''[8]**

என்ற பாடல் அடிகளில் இந்த பிறவியென்னும் கருங்கடலில் மூழ்கி நான் என்னும் ஒரு முதலைவாயில் அகப்பட்டு இருவினைகள் என்கின்ற அலைகளால் எறியப்படுகிறேன். நீர்க்குமிழி போன்ற கொங்கைகள் பவளத்துண்டு போன்ற உதடுகள் வாய்க்கப் பெற்ற மாதர்களின் காம மயக்கமாகிற சுழற்சியையுடைய பெருங்காற்றானது பல காலம் வந்து தாக்குகிறது. குறையாத ஆசையாகிய

காட்டாறு ஆகாய கங்கை பெருகினாற்போல மேலும் மேலும் வந்து மோதுகிறது. பரிசில் ஒட்டுநர் மரக்கலத்தை கைவிட்டு, புத்திமயங்கி திருட்டுக் கப்பலையொத்த எமனைச் சார்ந்தவர் வருவார்கள், அதற்கு அஞ்சிக் கண்ணிலிருந்து அருவியாய்க் கொட்டும் மனவேதனை உள்ள அடியேன் என்று சு.நா சொக்கலிங்கம் மிகவும் தெளிவாக கூறுகின்றார்.

எந்நாட் கண்ணயில், மாதர்மயக்கு அறுத்தல் என்ற தலைப்பிலுள்ள பதினைந்து கண்ணிகளும் இக்காரணத்தால்தான் எழுந்தனவோ என்று கருதவும் இடம் உண்டு.

**''மெய்வீசும் நாற்றம்எலாம் மிக்கமஞ்ச ளால்மறைத்து**
**பொய்வீசும் வாயார் புலைஒழிவது எந்நாளோ''**
**''வீங்கித் தளர்ந்து விழும்முலையார் மேல்விழுந்து**
**தூங்குமதன் சோம்பைத் துடைக்குநாள் எந்நாளோ''[9]**

கண்ணிகளில் இதனை உணரலாம். தாயுமானவர் இனி திரிசிரபுரத்திலிருந்தால் அரசிகளால் இன்னல்கள் அடிக்கடிநேரிடும் என்று கருதிய தாயுமானவர் அன்றிரவே தம் சிறிய தாயார் மகனான அருளையரோடு திரிசிரபுரத்திலிருந்தே வெளியேறினார் தாயுமானவர்.

இருவரும் சேர்ந்து தெற்கு திசையினை நோக்கிச் சென்றனர். இடையில் நல்லூர் என்ற ஒரு ஊரில் தாயுமானவர் அவருடைய சிவபூசைப் பெட்டகத்தை எடுத்துவர தவறிவிட்டார். அந்த சிவபூசைப் பெட்டகத்தை எடுத்து வருமாறு அருளையரை அனுப்பினார்.

பின்னர் தாயுமானவர் அயர்வுற்று அமர்ந்திருந்த பொழுது நல்லூரினர் அவரைப் பால் உட்கொள்ளுமாறு வேண்டினார். அப்போது தாம் பாடிக் கொண்டிருந்த **கருணாகரக் கடவுள்** என்னும் பதிகத்தில் ஐந்து பாடல்கள் நிறைவுற்றிருந்தது.

திரிசிரபுரத்தில் தாயுமானவரைக் காணாமையால் அரசி மிகவும் கவலைப்பட்டு, தம்முடைய காம உணர்ச்சியை அறியாதவர் மீது எவ்வளவு சினம்முற்றிருக்க வேண்டும் என்பதை நாம் ஊகித்துதான் அறிய வேண்டும். மந்திரத் தொழில் செய்பவர் மூலம் தாயுமானவரை நல்லூரில் இருப்பதைக் கண்டாள். தாயுமானவர் காலில் விழுந்து வணங்கித் தன்னை மன்னித்தருளுமாறு வேண்டிக் கொண்டு தான் வந்த வழியே மீண்டாள்.

தாயுமானவர் அருளப்பப் பிள்ளையுடன் இராமேஸ்வரம் சென்றார். இராமநாதனை வணங்கினார்.

**“மாது காதலி பங்கனை அபங்கனை**
**மடமா ளிகை சூழும்**
**சேது மேவிய இராமநா யகன்றனைச்**
**சிந்தைசெய்! மடநெஞ்சே!**[10]

மனைவியாகிய உமாதேவியைத் தன் இடபாகத்தில் உடையவனை அழிவற்றவனை, மாடமளிகை சூழ்ந்திருக்கின்ற இராமேஸ்வரத்தில் எழுந்தருளியிருக்கின்ற இராமநாதனக் கடவுளை மனத்தினுள் வைத்து தியானித்து வணங்குவாயாக என்பதை இப்பாடல் மூலம் அறியலாம்.

இராமேஸ்வரம் வந்த இராமபிரான் சிவன் பூசை செய்ய காசியிலிருந்து ஓர் ிங்கம் கொணருமாறு சிறிய திருவடியை அனுப்பினார். அவர் காலந்தாழ்த்தும் வரவில்லை சிதாப்பிராட்டி மணலைப் பிடித்து லிங்கமாக்க அதை இராமபிரான் வழிபட்டனர்.

இராமேஸ்வரத்தில் அருளும் அழகும் நிறைந்த இறைவியின் மீது பாடிய பதிகம் மலைவளர் காதலி என்பது எட்டுப் பாடல்களைக் கொண்டது. இறைவியின் பெயர் மலைவளர் காதலி பர்வதவர்த்தினி என்பது வடமொழிப்பெயர்.

தாயுமானவர் இராமேஸ்வரத்தில் இருந்தபோது மழை இல்லாதிருந்தது. அடிகள் ஒரு வெண்பாவைப் பாடியருள நல்ல மழை பெய்து அப்பகுதி செழிப்புற்றதாகக் கூறுவர். இவ்வுலகில் பந்த பாசங்களில் அகப்படாமல் எந்நாளும்

இறைவனைப் பிராத்தித்துப் பற்றற்ற வாழ்க்கை வாழ விரும்பிய தாயுமானவரை அவரின் பெற்றோர்கள் திருமணக் கோலத்தில் காணவிரும்பினார்கள்.

தாய் தந்தையரின் விருப்பத்தைக் தட்ட முடியாத தாயுமானவர் மட்டுவார்குழலி என்னும் பெயருடைய பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

**“சித்தம் இப்படி மயங்குமோ?அருளை**
**நம்பி னோர்கள்பெறு பேறிதோ?”**[11]

தாம் மௌனகுருவின்பால் அறிவுரை பெற்ற பின்னரும் இல்லறத்தில் இறைவன் தம்மைச் செலுத்தியது, தமக்கு வெறுப்பு விருப்பு தருவதாகும் என்று கூறுவது இப்பாடற் பகுதி.

இல்லறம் மேற்கொண்ட பின்பு அதற்குரிய கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுவதே தா்மம் என புரிந்த தாயுமானவா் மனைவியோடு அறவழியில் இல்லறத்தை நடத்தி கனகசபாபதி என்னும் பெயருடைய ஆண் மகன் ஒன்றனையும் பெற்றெடுத்தார். ஆனால் குழந்தை பிறந்த சில காலத்திலேயே தாயுமானவரின் மனைவி மட்டுவார் குழலி காலமானார்.

தாயுமானவர் வேறொரு திருமணம் செய்து கொள்ளாத நிலையில் அவரின் மகனை வளர்க்கும் பொறுப்பைத் தாயுமானவரின் தமையனார் சிவசிதம்பரமும் அவரின் மனைவியும் ஏற்றுக்கொண்டார். அத்தோடு ஆத்மசாதனைக்கு தடை என நினைத்த தாயுமானவரின் இல்லற வாழ்க்கையும் ஒரு முடிவுக்கு வந்தது.

தாயுமான அடிகளின் மனம் மோன நிலையை நாடி நின்றது திருவருள் தமக்குப் பல நலங்கள் தந்தது போலவே இடைவிடா மோன நிட்டையுடன் நல்க வேண்டும் என்பார்.

தாயுமான அடிகள் இறைவனுக்கே தம்மை கொடுத்து விட்டாராதலின் தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை என்று மணிவாசகமப் பெருமாள் கூறியது போலவே,

**"தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்கு**
**என்னைக்கொண் டென்னபலன் எந்தாய் பராபரமே"**[12]

என்றும்

**"சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்ற உன்னைத்**
**தந்த உனக் கென்னையும் நான் தந்தேன் பராபரமே"**[13]

என்று அருளிச் செய்தனர்.

மோன நிலையை எய்துமுன் தன்னிலமை எவ்வாறு இருந்ததென்பதை அடிகள்

**"கருத்தினுட் கருத்தாய் இருந்துநீ உணர்த்தும்**
**காரணம் கண்டுசும் மாதான்**
**வருத்தமற் றிருந்த சுகம்பெறா வண்ணம்**
**வருந்தினேன்"**[14]

அறிவின் கண்ணே அறிவு மயமாய் வீற்றிருந்த நீ அறிவிக்கும் காரணத்தை நோக்கினேன். வீணே வருத்தம் இல்லாமல் இருந்தேன் இருப்பினும் இன்பம் அடையா காரணத்துக்காக வருந்தினேன். இறைவன் மெய்யன்பையும் இன்ப நிட்டையும் தராவிடின்

**"நீராய் உருகஉள் ளன்புந்**

**தேசுக நிட்டையைந்**

**தாரா விடில்என் பெருமூச்சுத்**

**தான் அத்தனஞ்சயனே"[15]**

என்று உயிர்துறப்பதாக இப்பாடலில் கூறுவார். அடிகள் துறவு நிலையை ஏற்ற பின்னர் திரிசிரபுரம் மௌனகுரு மடத்தை அடைந்து தமது குரு நாதரை வணங்கிச் சிலகாலம் தங்கியிருந்தார்.

குருநாதரும் தாயுமானவரின் பரிபக்குவ நிலையைக் கண்ட அவருக்கு நிருவான தீட்சை செய்து வைத்து தறவு நிலையை வழங்கினார். அதனால் தாயுமானவர் பெருநிதியும் கிடைத்த வெறுமிடியன் மகிழ்வதைப் போன்று மகிழ்வுற்றார்.

குருவின் அடி நிழலையே இருந்து ஞானநிட்டைப் பயின்று வந்தார். அக்காலத்தில் சிரிகிரிப் பெருமான் திருக்கோயிலில் எழுந்தருளிஇருக்கும் தென்முகக் கடவுள் திருமுன்பும் அவர் ஞானநிட்டை பயிலும் இடமாக்க கொண்டார். தமது குருவிற்குப் பின்னர் 1644 ஆம் ஆண்டு தொடங்கிச் சின்னாள் அவரது திருமடத்து தலைவராவும் திகழ்ந்தார்.

இதனிடையே தாயுமானவரின் தந்தையார் கேடியலிப்பப்பிள்ளையும் மரணமடையவே திருச்சி அரசு மீகாமன் இல்லாத கப்பல் போலத் திண்டாடியது. அரசர் தாயுமானவரே இந்த மாபெரும் பொறுப்பை ஏற்க வல்லவர் என்றுணர்ந்து அவரை அழைத்து தகப்பனாரின் பதவியில் தாயுமானவர் அமர்ந்து அரசருக்கும் அரசாட்சிக்கும் உதவும்படி கேட்டுக்கொண்டார். தந்தை மூலம் இந்த செய்திகளில் ஓரளவு பயிற்சியும் பெற்றிருந்த தாயுமானவரின் அரசரின் சொல்லைத் தட்ட முடியாமல் பொறுப்பை ஏற்றார். வெகுவிரைவில் இதில் திறமை பெற்றவராகித் தன் கடமையைத் திறம்பட நிறைவேற்ற ஆரம்பித்தார். நாளடைவில் மன்னனும் மடிய அவன் மனைவியான ராணி மீனாட்சி பட்டத்தை ஏற்றாள். ராணி மீனாட்சிக்குத் தாயுமானவரின் இளமையை கண்டதும் மனம் பேதலித்தது.

ஆனாலும் வெளிப்படையாகச் சொல்லாமல் தக்க தருணத்திற்குக் காந்திருந்தாள். ஒருநாள் அரசாங்க வேலைகளைப் பனை ஓலைகளில் குறிப்பெடுத்துவைத்துச் சரிபார்த்துக் கொண்டிருந்த தாயுமானவர் திடீரென முக்கியமான குறிப்புகளுள்ள ஒரு ஓலையைக் கையில் வைத்திருந்தவர் அதை கசக்கித் தூர எறிந்தார். இதை கவனித்த ராணி மினாட்சி காரணம் கேட்க அப்போதே தான் செய்த தவறைப் புரிந்துக் கொண்ட தாயுமானவர் திருவானைக்காவலில் உள்ள அகிலாண்டேஸ்வரியின் சேலையில் தீப்பற்றிக் கொண்டதாககவும் அதை நாம் அணைத்தானகவும் கூறினார். இதை நம்பாத ராணி மீனாட்சி கோயிலுக்குச் சென்று உண்ணமையை அறிந்துவரச் செய்தார்.

உண்மையில் அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருப்பது குறித்து தெரிந்ததும் ராணிக்கு இவர் எவ்வளவு பெரிய மகான் என்பது புரிந்தது.

தாயுமானவருக்கும் அரசல புரசலாக ராணியின் தகாத ஆசை தெரிந்திருந்தால் தான் பதவியை விட்டு விலகுவதே சரி என்று தீர்மானித்து விட்டார். உடனே அரசியிடம் தன் மனம் இவ்வுலக வாழ்வை நாடவில்லை என்றும் தன் போக்கில் செல்லத் தன்னை அனுமதிக்கவேண்டிப் பதவியை விட்டு விலகிவிட்டார். வெளியேறி வந்த தாயுமானவருக்கு மீண்டும் தம் குருவின் தரிசனம் கிட்டி அவர் மூலம் சந்நியாசி ஆகி ஆசிரமும் உபதேசமும் கிடைக்கப்பெற்றது.

அன்று முதல் கோவணாண்டியாகவே இருந்து கொண்டு அதே திருச்சியில் வசித்து வந்தார். அவர் இருந்த உத்தியோகத்தின் மேன்மையும் செல்வாக்கையும் செல்வநிலைமையும் பார்த்த அன்பர் ஒருவர் அவருக்குக் குளிர்காலத்திற்கு போர்த்திக்கொள்ளுவற்கென ஒரு அழகான காஸ்மீரப் பட்டுச் சால்வையைப் பரிசளிக்க அவரோ அதை உடுத்த உடை இல்லாதிருந்த ஒரு பிச்சைக்காரிக்குக் கொடுத்துவிட்டார். தாம் கொடுத்த சால்வை எங்கே எனக் கேட்ட அன்பரிடம் அகிலாண்டேஸ்வரிக்கே கொடுத்துவிட்டதாய் பதிலளித்தார்.

இப்படிப் பார்க்கும் பெண்களிடத்தில் எல்லாம் இறையைப் பார்த்த தாயுமானவர் யாத்திரையாகக் கிளம்பி ராமேஸ்வரம் சென்று திரும்பி வரும்

காலையில் ராமநாதபுரத்திற்கு வெளியே லட்சுமிபுரம் என்னும் ஊரில் சமாதி அடைந்தார். இவ்வாறாக தாயுமானவரின் வாழ்க்கை வரலாற்றினை அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 290

2) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 169

3) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 395

4) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா - 82

5) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ - 6

6) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 200

7) மேலது, தி. சம்பந்த முதலியார், பா – 5

8) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 78

9) மேலது, சு.ந. சொக்கலிங்கம், பா – 417

10) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ -15

11) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 186

12) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா - 9

13) மேலது, தி. சம்பந்த முதலியார், பா- 329

14) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 154

15) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 22

# இயல் - 2

## சுப்புரெட்டியாரின் ஆன்மீகப் பார்வை

தாயுமான அடிகளின் பாடல்களைப் படித்து அனுபவித்த சுப்புரெட்டியாரின் சிந்தையில் எங்கும் சைவசித்தாந்தக் கருத்துகள் சிதறிக் கிடப்பதைக் காணலாம். சைவ சித்தாந்தப் பொருள்கள் மூன்று அவை பதி, பசு, பாசம் என்பது ஆன்மா: சீவான்மா எனப்படுவதும் இதுவே பாசம் என்பது தளை: அ∴தாவது உயிரைப் பிணித்துள்ள கட்டு. இந்த மூன்றும் தனித்தனிப் பொருள்களாகும்.

புராணங்களில் கூறப்பெறும் கடவுளின் அருட்செயல்களை அடிகள் அதிகமாகக் கூறலாம். அவரது பொதுவாகிய பெருந்தன்மைகளை அதிகமாக எடுத்து விளக்குவதைக் காணலாம். இந்நிலையில் இவர் இணையற்றவராகத் திகழ்கின்றார்.

உயிர் ஐம்பொறிகட்கும் மனத்திற்கும் புலனாகின்றன. உலகத்தையே அறியக் காணப்படும், உலகமெல்லாம் சடமாகிய தத்துவங்களாலாகியது. தோன்றுகின்ற பொருள்கள் யாவும் அழிவன, ஆதலால் அறிவுடைப் பொருளாகவும் அழியாப் பொருளாகவும் உள்ள இறைவனை உயிர்கள் தம்முடைய மனம், வாக்கு காயங்களால் அறியமுடியாது.

**எங்கும்நிறைந்திருப்பவன்இறைவன**

இக்கருத்திணை வலியுறுத்தும் சில பாடல் பகுதிகள்

**“பார்த்த இடம் எல்லாம் பரவெளியாய்த் தோன்றஒரு**
**வார்த்தைசொல்ல வந்த மனுவே பராபரமே”[1]**

என்பன போன்ற பாடல் பகுதிகளில் இக்கருத்து பொதிந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

**கடவுள் சொல்லிற்கு அடங்காதவர்:**

சுட்டியறியும் அறிவு சுத்த தத்துவங்களில் தொடர்பால் உண்டாவது. அவ்வறிவிற்கு மூலமே சொல்லிற்கு தொடர்பால் உண்டாவது சுட்டியறியப் பெறாத கடவுளைச் சொல்லினால் உணர்த்த முடியாது. சமய நூல்கள் எல்லாம் மக்களுக்கு விளங்கும் அளவில் இறைவனது தன்மையை ஒருவாறு இயம்புவதாலும் நூலறிவு சொல்லாற் பெறப்படுவதாலும் சொல் கடவுளை உணர்த்துவதற்குத் தக்க

கருவி என்பதாலும் அடியிற் கண்ட வாக்குகள் எழுந்தன.

**"சொல்ஆய தொகுதியெல்லாம் கடந்து நின்ற**

**சொருபானந் தச்சுடரே"[2]**

சொற்களால் ஆகிய கட்டம் எல்லாவற்றையும் எல்லைகள் கடந்து நின்ற ஆனந்த வடிவமாகிய சோதியே! பரஞ்சோதியே!

**கடவுள் ஒருவரே: பலர் அல்லர்:**

இறைவனின் தன்மை நமது அறிவிற்கு அப்பாற்பட்டது எனினும் அவருடைய திருவருளினால் ஆட்கொள்ளப் பெற்ற அருட்செல்வர்களின் திருமொழிகளை ஆயுமிடத்து அவர் ஒப்பற்ற ஒரு பொருள் தெரியப்படும். கடவுள் பலராகவும் இருத்தல் முடியாது. பல பொருள்களுள் ஒன்று சிறப்புடையதாகும் உலகத்தை ஒழுங்காகப் படைத்தல்,காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் நடைபெற செய்வதற்கும் ஒரு தலைவனே இருத்தல் வேண்டும். பலர் இருப்பின் அவருள் வேறுபாடு விளைந்து நடைபெறும் தொழில்களும் முரண்பட்டனவாய் அமைத்து விடும்.

**"வேதகசின் மாத்திரமாய் எம்மனோர்கசு**

**வெளியாக வந்தஒன்றே"[3]**

விசாலமான திருக்கைகளுக்கேற்ற எமது தன்மையை வேறுபடுத்தும் இயல்பு அமைந்த சினமுத்திரை காட்டியவர் அவரே எம்மையொத்தவர்களுக்கும் வெளிப்பட வந்த பொருளே என்ற திருவாக்குகள் அமைந்து இது வற்புறுத்தப் பெற்றமை காணலாம்.

**கடவுள் உயிருக்குயிராய் உயிர்தோறும் கலந்து நிற்பவன்**:

இக்கருத்தை அடிகளின் பல பாடல்களில் கண்டு தெளியலாம்.

> **“இகபரம் இரண்டினினும் உயிர்க்கு உயிராக**
> **எங்கும் நிறைகின்ற பொருளே”[4]**

எங்கும் நிறைகின்ற பொருள் என்ற பதிகத்தில் ஒவ்வொரு பாடலும் இருக்கின்றன.

**படைத்தல், காத்தல், அழித்தல் முதலியன செய்தல்:**

இறைவன் ஐந்தொழில்களையும் தன் பொருட்கு செய்பவனல்லன். தன் பொருட்கு செய்பவனாயின் அவன் உலகப் பற்றுடையவனாவன் அஃது அவனது முழுமுதல் தன்மைக்குப் பேரிழுக்கு ஆதலின் அவன் ஐந்தொழில்களையும் இயற்றுவது உயிர்களின் பொருட்டேயாகும். இதனை

> **“பெருவெளியாய்க ஐம்பூதப் பிறப்பு இடமாய்ப்**
> **பேசாத பெரிய மோனம்**
> **வரும் இடமாய்”[5]**

அகண்ட பெரிய ஆகாயமாய் ஐம்பெரும் பூதங்களின் பிறப்புக்குக் காரணமாய் சொல்லுதற்கரிய பெரிதான மௌனத்தின் கண் வெளிப்படும் இடமாய் என்ற திருவாக்குகள் இறைவன் முத்தொழில் இயற்றுவதை விளக்குவோம்**.**

**இறைவனது திருவருள்:**

இறைவனது திருவருளே உயிர்களையும் உலகத்தையும் அவனோடு இயைந்து நிற்பது. அவனது அருள் வெளிக்குள் அகிலாண்ட கோடி எல்லாம் தங்குகின்றன. அவனது அருளினை “வெளி” என்றது உருவகம். ஐம்பூதங்களிலும் மேலாகிய வான் என்பது வெளி எனப்படும்.

இறைவன் திருவருள் சுத்த மாயையின் வடிவான சொல்லிற்கு அப்பாற்பட்டது. ஆதலின் அது சொல்லால் உணர்த்தப் பெறாத வெளி என்பதை “மோனவெளி” என்கிறாா் இறைவனை அவனது திருவருள் வாயிலாகவேதான் உயிர்கள் காணமுடியும். பூதங்கள் முதலான தத்துவங்களால் அவனை அறிய முடியாது.

இறைவனைத் தோற்றுவிக்கும் திருவருளை வடிவம் என்றும் உயிருக்கும் கண் என்றும் கூறுவது மரபு

**“மண்ணோடுவிண் காட்டி மறைந்துமறை யாவருளைக்**
**கண்ணோடுகண் ணாகஎன்று காண்பேன் பராபரமே”**
**“எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு”**[6]

என்றாவது எப்பொருளை நோக்கினாலும் அவற்றிற்கு உள்ளீடாய் அவற்றிற்கு அடிப்படையாய் திருவருள் வெளியை இறைவன் திருவருடியாக நினைத்து வழிப்பட வேண்டும் இதனை

**“கண்டன எலாம்மென உருவெளியது ஆகவும்**
**சுருதிஅஞ் சலியெங்குவோம்”**[7]

என்று கூறுவர்.

**குருவடிவம்:**

தென்முகக் கடவுள் இந்நிலவுலகத்தின்கண் இறைவன் கல்லாலமர நிழலின்கீழ் வீற்றிருந்த நால்வர்க்கு உண்மைப் பொருளாய் விளங்கும் பொருட்டு, கொண்ட திருக்கோலத்தைப் பெரிதும் வியந்து போற்றுகின்றார்.

**“பன்முகத் திரைச்சமயம் பால்படக்கல் ஆல்வடிவாழ்**
**சின்முத் திரைஅரசைச் சேர்ந்தேனோ பைங்கிளியே”**[8]

என்பவற்றில் இவற்றைக் கண்டு மகிழலாம்.

“சின்மயானந்த குரு” என்னும் பதிகம் முழுவதும் தென்முகக் கடவுளைப் பற்றிய வாழ்த்தாகவே அமைந்துள்ளது. அதனுள் உயிர்களை இறைவன் பக்குவப்படுத்தி வைக்கின்ற முறை இரண்டு பாடல்களில் (6,7) தொகுத்துரைக்கப் பெற்றுள்ளது.

**கூத்த வடிவம்:**

இறைவனது குரு வடிவத்தை அடிகள் விதந்து போற்றுவது போல அவனது கூத்த வடிவத்தையும் மிகுந்த ஆர்வத்துடன் ந. சுப்புரெட்டியார் அவர்கள் போற்றுவதைக் காணலாம்.

கூத்தப் பெருமான் உயிர்களை நோக்கி அஞ்சேன் என்று அபயம் காட்டும் திருக்கரம் உடையதால் அவர் காத்தற் கடவுள் என்பது நன்கு விளங்கும். இறைவன் ஒரு திருக்கரத்தில் நெருப்பு வைத்திருப்பதால் எல்லாவற்றையும் ஒடுக்குபவன் அவனே என்பது உணரப்படும்.

**விழையும் வடிவுகள்:**

அன்பர்கள் விழையும் வடிவங்களை மேற்கொள்வான். இதனை

**“ஏதுபா வித்திடினும் அதுவாகி வந்தருள்வாய்**
**எந்தைநீ எங்கும் நீறைகின்ற”**[9]

மேலும்

**“தமருகத்தது எவ்வுருவம் அவ்வுருவத் தானே”**[10]

இக்கருத்தினை பொய்கையாழ்வார் பாசுரங்களில் காணலாம்.

**ஆன்மாவின் அருங்குணங்கள்:**

இறைவனைப் பற்றி அடிகள் கூறியவற்றை ஆராய்ந்த நாம் இறைவன் கண்ணுக்குத் தெரியாதவனவாகவும் எட்டாதவனாகவும் உள்ளதால் இறை மறுப்புக் கொள்கையும் பிறவும் தோன்றவும் ஏதுவாயிற்று என்பதையும் நினைக்கின்றேன் ந. சுப்புரெட்டியர்ர் அவர்கள் ஆன்மாவின் உயிர்கள் பற்று ஆறு குணங்களை மிகவும் தெளிவாக கூறியுள்ளார் அவ்றறைப் பற்றி பார்ப்போம்.

தாயுமான அடிகள் உயிர் பற்றி தம்பாடல்களில் குறிப்பிடும் கருத்துக்களை ஈண்டுக் காண்போம்.

**உயிரின் குறைகள்:**

உயிர்கள் பாசத்தால் பிணிக்கப்படுமாதலின் அவை பல்வேறு குறைகளையுடைய. அருளாசிரியர்கள் குறைவற்றவர்கள். எல்லாக் குறைகளும் தம்மிடம் இருப்பதாகக் கூறுவர். வைணவத்தில் இதனை நைச்சியானந்தம் (தன்னைத் தாழ்த்திக் கூறிக் கொள்ளுதல்) என்று குறிப்பிடுவர்.

உயிர்கள் எப்பொழுதும் தனித்து நின்று விளங்காது எனவும் ஒரு பொருளின் துணை கொண்டே அஃது அறியப்படும் எனவும் தெளிவாகின்றது. சித்தாந்தக் கருத்துப்படி உயிர்கள் பெத்த நிலையில் பாசத்தோடும் மூத்த நிலையில் பதியோடும் வைத்தே அறியப்படுபவனாகும் இக்கருத்து

**“அறியாமை சாரின் அதுவாய் அறிவாம்**
**நெறியான போது ஆதவாய் நிற்கும்”[11]**

என்ற பாடற்பகுதியில் அறியப்படும்

**ஆன்மாவும் ஆணவமும்:**

பதியைப்போல பசு அறிவுடைய பொருளாயின் அஃது ஆணவம் முதலிய கட்டுக்குள் அகப்படாது. மாயைபோல அறிவில்லாப் பொருளாயின் அஃது அறிவுடைய பதியை ஒருக்காலும் அறிய மாட்டாது. ஆதலால் அடிகள்

**“அறிவறி யாமையும் நியல்லை”[12]**

என்கிறார். இறைவன் எக்காலத்தும் ஆணவம் முதலிய கட்டு இல்லாதவர் ஆதலால் உயிர்களை ஆணவத்தோடு பிணத்தவர் இறைவன் அல்லர் என்பது தெளிவாகின்றது.

கடவுளைத் தனக்கு உயிராகப் பெற்ற உயிர்த்தானே நன்மையும் தீமையும் அறியவல்லதாயின் அறியாமையாகிய ஆணவக் கட்டுக்குள் அகப்படாது அறிவுடைப் பொருளாகிய முதல்வனையே பற்றி நிற்கும்.

இதனால் உயிர் முதல்வனை அடைவதற்கு முன்னர் அஃது ஆணவக்கட்டில் கிடப்பதாகும் என்பது அறியப்படும். உயிர்கள் ஐம்பொறிகள் வாயிலாகப்

பொருள்களை அறிகின்றன. உடம்பெடுக்குமுன் உயிர் நின்ற நிலை ஆணவத்தோடு அத்துவிதமாய் அறிவின்றி விளக்கப் பெறாத இருள்நிலை.

**உயிர்கள் பல:**

இறைவன் உயிருக்கு உயிராக உள்ளார் என்பது சித்தாந்த உண்மை இதனை

**"உயிருக்குயிராய் எந்நாளும்**
**ஓங்கா நிற்பர்"[13]**

எனும் அடிகளின் திருவாக்கால் அறியப்படும்.

பதி என்ற கடவுட் பொருள் ஒன்றேயாகும். ஆனால் சித்தாந்தம் உயிர்கள் அளவிறந்தன அதனால் இறையை "ஏகன்" என்றும், உயிரை "அநேகன்" என்றும் வழங்குவர்.

"**ஏதன் அநேகன் இறைவன் அடிவாழ்க"[14]** என்பது மணிவாகசம் கூறியது. ஏன்றும்

**"எண்ணில்பல கோடிஉயிர் எத்தனையோ அத்தனைக்கும்**
**கண்ணிற் கலந்தஅருட் கண்ணே பராபரமே"[15]**

என்றும் அருளிச் செய்தார்.

உயிரின் பல்வகை நிலைகள்:

உலகப் பற்றும் இல்லாது கடவுள் பற்றும் இல்லாத விடத்து மனம் தனிமை நிலையில் வாழவிடும் இதனை அடிகள்

**"பற்றினதைப் பற்றும்எந்நாய் பற்றுவிட்டால் கேவலத்தில்**
**உற்றுவிடும்: நெஞ்சம் உனை ஒன்றிநிற்ப தெப்படியோ"[16]**

என்று குறிப்பிடுவர். இதனால் உயிர் ஏதாவதொன்றை பற்றி நிற்கும் என்பது தெளிவு உலகத்தையாவது கடவுளையாவது உயிர் பற்றாதவிடத்து அ∴து அறியாமை பற்றி நிற்கும்.

இறைவனைத் தாயாகவும், தந்தையாகவும், கருதுவது ஆன்றோர் வழக்கு "தாயும் எனர்" என்ற தொடரிலுள்ள வரலாறு இதனை தெளிவாக்கும் அர்த்த

நாதீஸ்வரன், தையல் பாகன், மங்கை பாங்கன் என்ற இறைவனின் திருப்பெயர்கள் சீரீட்ட உலகன்னை வடிவான எந்தை என்பதற்கு விளக்கமாக அமைகின்றன.

**வாழ்வில் வினையின் பங்கு:**

எல்லா உயிர்களும் இன்பத்தையே விரும்புகின்றன. எனினும் அவை துன்பத்தையும் நுகர நேரிடுகின்றது.

ஒருவருக்கே சில காலம் தொடர்ச்சியாக நல்ல சூழ்நிலைகளே அமைவதையும் பின்பு சிலகாலம் தீமையான சூழ்நிலைகள் அமைவதையும் காண்கிறோம். அவற்றால் இன்ப துன்பங்களுக்குச் சூழ்நிலைதான் காரணமாயின் அச்சூழ்நிலைகளின் அமைப்பிற்குக் காரணம் வேறொன்று உள்ளது.

இந்த காரணத்தைதான் "வினை" அல்லது "கன்மம்" என்று குறிப்பிடப்படுவர் மெய்விளக்கு அறிஞர்கள்.

இன்னும் நம் வாழ்க்கையை கூர்ந்து நோக்கினால் ஒரு பேருண்மை தட்டப்படும். ஒருவரது வாழ்க்கையில் இரண்டு பகுதிகள் உள்ளன.

"அகவாழ்க்கை பகுதி
புறவாழ்க்கைப் பகுதி"

வள்ளுவர் பெருமானும்

**"வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் தெய்வம்**
**ஈண்டும் முயலப் படும்"[17]**

என்று கூறியுள்ளமை சிந்திக்கத்தக்கது.

இதுகாறும் இந்நிலவுலகில் அறிவுடையவராக விரும்பி முயன்றவர் அறிவு பெறாமல் இருந்தில்லை. ஒழுக்கத்தைப் போற்றி வாழ முயன்றவர் விரும்பியவாறு அதனைப் பெற தவறியதும் இல்லை. அவாவை அறுத்தொழிக்க வேண்டும் என்று உண்மையாக முயன்றவர் முயற்சியின் பயனை பெறாததும் இல்லை. இவ்வாறே

மற்ற நற்பண்புகளை விரும்பிப் பாடுபட்டவர்கள் அவற்றை அடைத்து முன்னேறி உள்ளார்.

**மூலவினை:**

இந்த எண்ணங்களின் அடிப்படையில் தாயுமானவர் பாடல்களில் வினைப்பற்றி வரும் பாடல்களை நோக்குவோம் ஆணவமலத்தால் பிணிக்கப்பெற்ற உயிர் உலகத்தோடு தொடர்பு கொள்ளும்பொழுது அதன்கண் பற்று வைக்கின்ற செயலுக்குக் காரணமாயுள்ளதற்கு "மூலவினை" அல்லது "மூலகன்மம்" என்பர் மெய்விளக்கு அறிஞர்கள்.

**"கண்டுகண்டும் தேறாக் கலக்கமெல்லாம் தீவரும்வண்ணம்**
**பண்டைவினை வேரைப் பறிக்கும்நாள் எந்நாளோ?[18]**

என்று அடிகள் கூறுவர்.

இம்மண்ணுலக வாழ்க்கையில் உயிர்கட்கு நிலைத்த ஆதரவு ஒன்றும் இல்லை. அவற்றிற்கு ஆதரவாய் இருப்பது பரம்பொருள் பரம் பொருளை அடைந்த பிறகு ஆதரவு பெற்றதாய் விடுகின்றது.

காயம் என்பது உடல் காயத்தைப் பெற்றிருப்பது சிவனுடைய மற்றொரு கூறு. காயம் வெங்காயம் போன்றது வெங்காயத்தின் சருகை உரிக்க உரிக்க உள்ளிருக்கும் பகுதி சருகாக மாறி அமைகின்றது.

**"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்த் தேவராய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்**
**செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்**
**எல்லா பிறப்பும் பிறந்து இளைத்து"[19]**

என்று மணிவாசகப் பெருமான் கூறுவதும் இக்கருத்தையே இக்குறுகிய உடல்கள் யாவும் அவரவர் செய்யும் வினைக்கு என்ற பாங்கில் வந்து அமைகின்றன.

தாய் செய்யும் வினைகளை எல்லாம் இறைவனுக்கு உரியவை என்று அவனிடம் ஒப்படைத்து விட்டால் பிறப்பு, இறப்பு, வட்டம் நின்று போய்விடுகின்றது. இக்கோட்பாட்டினையே அடிகள் வினைதனக்கு ஈடான காயம் ஏது என்று கூறுகின்றார்.

**வினை பற்றிய மற்றோர் கருத்து:**

பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்ற மூன்றுவித வினைகளில் பிராரத்தம் அனுபவித்தே தீர வேண்டியது.

**"சரணம் ஆகும் தனதான் அடைந் தார்க்கெல்லாம்**

**மரணம் அனால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்"**[20]

என்ற பாசுரத்தால் இப்பிறப்பின் இறுதியில் தான் வீடுபேறு கிடைக்கும் என்பது உறுதியாகின்றது.

**"நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றங்கால்**

**அல்லற் படுவ தெவன்"**[21]

என்ற குறள் நம் சிந்தனைக்கு விருந்தாக அமைகின்றது.

**புனிதமெனும் அத்துவிதம்:**

இறைவனுக்கு உலகத்தோடுள்ள தொடர்பை விளக்குவதற்கு அடிகளார் அத்துவிதம் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். அத்தவிதமாவது இரண்டல்லாமை (அதாவது பிரிவின்மை) என்பது அவர்தம் விளக்கும் அத்துவிதம் என்ற சொல்லே அந்நியநாத்தியை (பிரிப்பின்மையை) உணர்த்துமாயிற்று என்று உணர்த்தியமையினால் இது தெளியப்படும்.

பிரிவின்மை என்று கூறுவதினாலேயே பொருள் இரண்டு என்பதும், இரண்டாயினும் வேறுவேறாய் நில்லாது ஒன்றியே நிற்கும் என்பதும் பெறப்படும்.

உயிர்கள் நிலைபெற்றிருப்பதற்கு நீர்முற்றிலும் இன்றியமையாது **“நீர் இன்று அமையாது உலகம்”**[22] என்பது வள்ளுவர் **“வாய்மொழி வாரி”**[23] என்ற சொல்நீரைக் குறிக்கின்றது நீருடன் ஒப்பிட்டுப் பரம்பொருள் சுகவாரி என்று வழங்கப்படுகிறது.

ஒரு பாடலில் ஒரு மொழியின் பெருமையை விரித்துரைக்கின்றனர்.

**“ஒரு மொழியே பலமொழிக்கும் இடம்கொடுக்கும் அந்த**
**ஒரு மொழியே மலம்ஒழிக்கும் ஒழிக்கும் எனமொழிந்த**
**ஒரு மொழியேமலை இலக்கு மறைமொழி எல்லாம்**
**கோடின்று வட்டாடல் கொள்வதொக்கும் கட்டாய்”**[24]

இதில் ஒரு சொல்லே பொருள் விரிக்கும் பொழுது பல சொல்லாகிய மெய்நூற்கு இடம் கொடுக்கும் அந்த ஒரு மொழியே பாசத்தை நீக்கும் குரு மொழிந்த ஒரு மொழியே மலைபோன்ற எல்லையாகத் திகழ்கின்றன. இந்த ஒரு மொழியை விட்டு மற்ற மொழிகளைக் கையாள்வது கோடு வரையாமல் வட்டாடல் போன்றது.

**சித்தர் பெருமக்கள்:**

சஷகாரமானது ககரமும் சகரமும் சேர்ந்தது. ஆதலால் அதைத் தவிர்த்து எழுத்துக்கள் ஐம்பதாகின்றன.

**“ஐம்பதெழுத்தே அனைத்தும் வேதங்களும்**
**ஐம்பதெழுந்தே அனைத்துஆ கமங்களும்**
**ஐம்பதெழுத்தின் அறிவை அறிந்தபின்**
**ஐம்பதெழுத்தும்போய் ஐந்தெழுத்தாமே”**[25]

என்று திருமூலர் விக்கால் அறியப்பெறும்

**மும்மண்டலங்கள்:**

இவை நெருப்பு மண்டலம், ஞாயிற்று மண்டலம், திங்கள் மண்டலம் என்பவனாகும்.

ஆசாரியனின் அருமை:

சைவ சமயத்தில் குருலிங்கஇ சங்க வழபாடு சிறந்தது உயிராயது ஒரு ஆசாரியா் இலிங்கம் திருக்கோயில்கள் இருக்கும்திருமேனிகள்:சங்கமம் சிவனடியார்கள் இந்த மூன்றையும் அடிகள்.

**"மூர்த்திஎல்லாம் வாழி: எங்கள் மோனகுரு வாழிஅருள்**
**வார்த்தை என்றும் வாழி அன்பர் வாழி பராபரமே"[26]**

என்ற கண்ணியில் வழுத்துகின்றார்.

அஞ்ஞானத்தில் உழன்று கொண்டிருக்கின்ற மனிதனுடைய வாழ்வும், மரம், செடி, கொடி, வாழ்வும் ஒப்புடைய தாய் அமைகின்றன. மரமாக விரிந்து பெருகக் கூடிய ஆற்றல் எல்லாம் வித்து ஒன்றில் அடங்கி ஒடுங்கிக் கிடைக்கின்றது. கம்பன் வாக்கில் சொன்னால் ஆலமர வித்தின் அருங்குறள் என்று அன்னையின் கருப்பத்தில் வாசம் செய்யும் சிசு ஒன்றின் நிலையும் இத்தகையது.

**வழிபாட்டு முறைகள்:**

இறைவழிபாடு என்பது எல்லா சமயங்களுக்கும் உரியது. வள்ளுவப் பெருந்தகையும் வாலறிவன் நற்றான் தொழுதலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளத்தை நினைவு கூறலாம்.

தாயுமானவர் பாடல்களனைத்தும் ஏதோஒரு வகையில் இறைவனைச் சுட்டியிருப்பதால் இறைவழிபாட்டுப் பாடல்களேயாகும். ஈண்டு ஒரு பாடலைக் காண்போம்.

**"அங்கையொடு மலர்தூவி அங்கமது புளகிருப்ப**
**அன்பினால் உருகிவிழிநீர்**
**ஆறாக வாராத முத்தியினது ஆவேச**
**ஆசைக் கடற்குள்மூழ்கிச்**
**சங்கர சுயம்புவே! சும்புவே! எனவும்மொழி**

**தழுதழுத திடவணங்கும்**
**சன்மார்க்க நெறி''**[27]

என்ற பாடற்பகுதி வழிபாட்டு நெறியை அற்புதமாகக் காட்டுவது.

இறையடியார்கள் இறைவனை ஏத்திப் புகழும் முறையே ஒரு பாடலில் காட்டுகின்றது.

**''கடல்மடை திறந்தனைய அன்பர்அன் புக்குளளியை''**[28]

இவ்வாறு நெஞ்சு நெக்குருக இறைவனை ஏத்தும் அன்பர்க்கு இறைவன் எளியவன் **''அழுதால் உன்னைப் பெறலாமே''**[29] என்ற மணிவாசகப் பெருமான் **''அன்பு ஆழியானை அணுகும்''**[30] என்றார் பொய்கை ஆழ்வார். வள்ளுவர் பெருமானும் **''அன்புக்கு உண்டோ அடைக்குந்தாள்''**[31] என்றார் அவன் புக்கு எல்லை கண்டவர் கண்ணப்ப நாயனார் என்பதாகக் கருதுவர் சைவப் பெருமக்கள் அடிகள் ஆண்டவனை

**''அன்பருக்கு ஆன்புஆன மெய்யன்''**[32]

என்று அன்பு ஆகவே குறிப்பர்.

**உருவ வழிபாடு:**

வழிபாட்டுக்கு உருவம் தேசைப்படுவதால் அடிகள் தடத்த நிலை இறைவனையே அதிகமாகக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

**''மூர்த்திதலம் தீர்த்தம் முறையால் தொடங்கிளர்க்குவர்ஓர்**
**வார்த்தைசொலச் சர்க்குருவும் வாய்க்கும் பராபரமே''**[33]

என்பதனால் சிவபெருமானை வடிவத்திலே வழிபடுவதும் சிறந்த திருப்பதிகட்குச் செல்வதும் புனித தீர்த்தில் நீராடுவதும் தவம் என்று அடிகள் கருதுவதாக கொள்ளலாம்.

அருளாளர்களின் அருளிச் செயல்களில் ஆழுங்கால்பட்டு அநுபவித்தலும் ஒரு வித வழிபாடேயாகும், ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி, மணிவாசகர், திருமூலர்,

பட்டினத்தார், பத்திரகிரியார், அருணகிரிநாதர் ஆகியோர்களின் பாடல்களை அநுபவித்து மகிழ்ந்தவர் சுப்புரெட்டியாரின் தாயுமானவர் வழி மிகவும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 12

2) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 332

3) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 4

4) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 51

5) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 9

6) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 82

7) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 353

8) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 64

9) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 12

10) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ-76

11) பொய்கையாழ்வார்இ முதல்திருவந்தாதிஇ பா. எண் - 44

12) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 22

13) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 92

14) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 96

15) திருவாசகம் - 96

16) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 573

17) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 97

18) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 270

19) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 18

20) திருவாசகம் அடி 26 – 32

21) திருவாய்மொழி ந. சுப்புரெட்டியார் ப. எ – 176

22) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 319

23) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 13

24) வைணவ உரை வளம், பாசுரம் - 104

25) பாரதியார் பாடல்கள், பா.எ – 63

26) திருமந்திரம், திருமூலர் பா.எ - 52

27) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 229

28) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 247

29) திருவாசகம் பாடல் எண் - 90

30) முதல் திருவந்ததாதி பா.எ -72

31) திருக்குறள், மணக்குடவர் உரை, குறள் - 71

32) தாயுமானவர், ந. சுப்புரெட்டியார் ப.எ – 249

# இயல் - 3

## சுப்புரெட்டியாரின் தத்துவப் போக்கு

தாயுமான அடிகளின் பாடல்கள் என்னும் நூல் சாத்திர நூல் அல்ல. அது தோத்திர நூல். சாத்திர நூலாயின் தத்துவக் கருத்துக்கள், நன்கு விளக்கம் பெற்றிருக்கும் என்கிறார் சுப்புரெட்டியார். இது தோத்திர நூலாயினும் தத்துவக் கருத்துகள், குறிப்புகள் போல நூலெங்கும் காணப்பெறுகின்றன. இத்தத்துவக் கருத்துகளுக்கு விளக்கம் தெரிந்தாலன்றிப் பாடல்களைத் துய்த்தல் இயலாது. இத்தத்துவக் கருத்துகளை எடுத்துக்காட்டி அவற்றிற்குரிய விளக்கத்தினையும் சுப்புரெட்டியார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இவற்றில்

**“மண்ணாதி ஐந்தொடு புறத்தில்உள கருவியும்**
**வாக்காதி சுரோத்ராதியும்**
**வளர்கின்ற சுத்தாதி மனமாதி கலையொதி**
**மன்னுசுத் தாதியுடனே**

**தொண்ணூற்றோ டாறும் மற்றுள்ளவும் மௌனியாய்ச்**
**சொன்ன ஒரு சொற்கொண்டதே**
**தூவெளிய தாய்அகண் டானந்த சுகவாரி**
**தோற்றும் அதை என்சொல்லுதேன்”[1]**

என்பது முதற்பகுதி இதில் மண் முதலிய ஐம்பூதங்களும், புறக்கருவிகளும், ஐம்பொறிகளும், தர்மயாத்திரைகளும், மூக்கரணங்களும் அசுத்தமான தத்துவங்களும் சுத்ததத்வங்களும் ஆகிய தொண்ணூற்றாறு தத்துவங்கள் மாயையில் நின்று வந்தன என்று குறிப்பாக உணர்த்துவர்.

சைவ சித்தாந்தத்தில் கொள்ளப்படும் பதி, பசு, பாசம் என்ற மூன்றும் ஈண்டு மேற்கூரிய தத்துவங்களில் பாசத்தை பற்றியவை. பாசம் என்பது ஆணவம், கன்மம்,

மாயை என்ற மும்மலங்களைக் கொண்டது. இவற்றுள் மாயையினின்றும் தத்துவங்கள் தோன்றும்.

மாயை, உலகில் பல வகையாகக் காணப்படும் பொருள்களாகப் பரிணமிக்க கூடிய பலவகைச் சக்திகளின் தொகுதி எனப்படும். இவை சுத்தமாயை அசுத்தமாயை என இருவகைப்படும். இந்த இருவகை மாயைகளில் இருந்தே தத்துவங்கள் தோன்றும் தத்துவங்களில் உலகம் தோன்றும்.

தத்துவங்களை குறிப்பிடும் நோக்கில் ஒரு பாடலில் பூதங்கள் ஐந்துவகை. அவற்றைக் கொண்டு உலகம் பிரபஞ்சம் முதலாவனவற்றைப் படைத்து அவற்றுள் அசையும் பொருள் அசையாப்பொருள் ஆகியவற்றையும் படைத்து அவற்றிற்கு நல்ல உணர்வை படைத்து

**“ஐவகை எனும்பூதம் ஆதியை வகுத்து அதனுள்**
**அசரசர பேதம் ஆன**
**யாவையும் வகுத்து நல்அறிவையும் வகுத்து மறை**
**ஆதிநூ லையும் வகுத்துச்”**[2]

என்று சுப்புரெட்டியார் இப்பாடலை குறிப்பிடுகின்றார்.

இப்படைப்பை உண்டு பண்ணிய இறைவனை ஐவகை என்னும் பூதமாதியை வகுத்தவர் எனத் தாயுமானவர் குறிப்பிடுகின்றார். இவற்றுள் வகுத்தல் என்னும் சொல் படைத்தலைக் குறிப்பிடுகின்றது.

அடிகள் தத்துவங்களைக் கூறும் இடங்களாக பூத முதலாகவே நாதபரியந்தமும் மலைவளர் காதலி – 3 என்றும் இரு நில மாதிநாதம் ஈறதாம் இவைகடந்த வம்பனேன் - 3 என்றும் கூறுவதால் முப்பத்தாறு தத்துவமும் தொகுத்துச் சுட்டப்பெறுதலைக் கண்டு தெளியலாம். பிரகிருதி குண தத்துவத்தின் நுட்பமாதலால்

**"முக்குணத்தால் எல்லாம் முளைக்கப் பிரகிருதிக்கு**
**இக்குணத்தை நல்கியதார்? ஏந்நாய் பராபரமே"[3]**

என்று அடிகள் கூறுவர்.

தாயுமானவர் பாடல்களில் தத்தவச் செழுமையும் வாழ்க்கை நோக்கமும், கவித்துவமும் பாரதியாரை முழமையாக ஆட்கொண்டன. தமிழ்ச் சிந்தனை மரபில் இத்தகைய உயர் இடத்தை அவருக்கு பாரதி அளித்திருப்பதற்கு இதுவே காரணம்.

புதுச்சேரி வாசத்தின்போது வெளிப்படையாக அரசியல் சமூக விசயங்களை விவாதித்துக் கொண்டிருந்தாலும் உள்ளுக்குள் வேதாந்த விசாரத்திலும் தத்துவ சிந்தனைகளிலும் மூழ்குவதாக பாரதியாரின் மனப்பாங்கு அமைத்திருந்தது கவிஞா் அரசியல் செயல்பாட்டாளர். வேதாந்தி என்று பல முனைகளிலும் கொத்தளித்துக் கொண்டிருந்த அவர் உள்ளத்திற்குத் தாயுமானவரின் வாழ்க்கை அவரது பாடல்கள் பேசும் தத்துவங்கள் தெளிவையையும் வழிகாட்டுதலையும் தந்திருக்கக்கூடும்.

தாயுமானவரின் தத்துவ நோக்கு ஏற்கனவே தமிழ்நாட்டில் வேரூன்றி தெளிந்திருந்த சைவ சித்தாந்தத்திலிருந்து முளைவிட்டு, அதே சமயம் அதன் வரம்புகளைத் தாண்டியும் வளர்ந்து தனக்கான ஒரு தனித்தத்துவத்துடன் மிளிர்வது, உபநிஷதங்களையும் ஆதிசங்கரரின் பாஷசங்களையும் ஆழ்ந்துகற்று, அத்வைத வேதாந்தத்தின் தத்துவ சாரத்தை அவர் உவப்புடன் உள்வாங்கி இருக்கிறார். தாயுமானவர் பாடல்கள் அனைத்திற்கும் விரிவான உரையெழுதியவர் சுவாமி சித்பவானந்தர் அந்த உரைகளில் பல இடங்களில் உபநிடத மந்திரங்களும் தாயுமானவர் பாடல்களுக்கும் நேரடியாக உள்ள ஒப்புமையை எடுத்துக் காட்டி செல்கிறார்**.**

**"சன்னல் பின்னலான சகலம் எனும் குப்பையிடை**
**முன்னவன் ஞானக் கனலை மூட்டும் நாள் எந்நாளோ?"[4]**

சன்னல் பின்னல் என்றது நினைத்தல் மறத்தல் ஆகும். நினைப்பும் மறப்பும் ஒழித்தலே மனம் இருத்தலாகும். மனம் ஏதோ ஒன்றை அடைதலையே நிட்டை என்பாார் மேலோர்.

ஆன்மா, தத்துவங்களுடனே கூடிக் காரியப்பட்டுப் பின்னிக் கொண்டு கிடைக்கிற சகலாவத்தையெனும் நஞ்சு குப்பையில் மூல காரணமாகிய சிவபெருமான் ஞானக்கினியை மூட்டுவிப்பது எந்த நாளோ? என வினவுகின்றாார்.

உண்மையற்ற தன்மையோடு ஆன்மா கனவு நிலையில் பிணைந்து கொள்கின்றது அவ்வாறு பிணையும் நிலையில் ஆன்மாவின் ஆற்றல் குறைவுபடுகின்றது அல்லது இல்லாமல் போகின்றது. மனதின் ஆற்றலும் அதற்கு ஏற்பக் குறைவுபடலாம். செயலற்றுப் போய் விடலாம். மனதையும் ஆன்மாவையும் அஞ்ஞானம் சூழ்கிறது. அஞ்ஞானம் என்ற இருள் புற இருளை விடக் கொடியது. புற இருள், புறப் பொருள்களைக் காண ஒட்டாது தடுக்கும்; தன் இருப்பைப் புலப்படுத்தும். இந்த ஆணவ மலமானது பிற பொருள்களின் தன்மையை மறைப்பதுடன் தனது இருப்பையும் மறைத்து விடுகின்றன. எனவே இ ்.து இருளினும் கொடியது அஞ்ஞானத்தின் (ஆணவத்தின்) இச்சக்தி ஆவாரக சக்தி அதாவது மறைப்பு சக்தி எனப்படும்.

சகலாவத்தை என்பதில் சகலம் என்பது ஆன்மாவது ஆனவம், கன்மம், மாயை என்றும் மும்மலங்களுடன் செயல்படுவதைக் குறிக்கும் அவத்தை என்பது இந்த ஆன்மா கனவில் உண்மையற்றத் தன்மையில் இருப்பதால் அதன் ஆற்றல் குறைந்தும் இல்லாமலும் உள்ள தன்மையாகும். முன்னவன் ஞான அக்னியை மூட்டினால்தான் சகலாவத்தை நீங்கும் தன்னுடைய ஒழுக்கத்தாலும் மனத்தூய்மையாலும் சகலாவத்தை நீக்குவது எளிதன்று ஆகவே முக்கண்ணனின் ஞான அக்னியால் மட்டுமே அகற்ற இயலும். இதுவே தாயுமானவரின் மையக் கருத்து ஆகும்.

கடவுளும் ஆன்மாவும் ஒரு பொருளாக இருக்குமானால் அவை ஒன்றாக வேண்டியதில்லை. முக்தியில் அவ்விரண்டும் வேறு வேறாக நிற்குமானால்

ஆன்மாவிற்குப் பேரின்பம் உண்டாகாது. எனவே முக்தி நிலையில் அவை இரண்டும் வேறு ஆக அல்ல. இரு பொருளும் அல்ல இரண்டும் அனைத்திலும் ஒன்றாகாது. அந்நியமாயிருக்கும் என்று சிவஞான சித்தியார் கூறுகின்றார்.

மாணிக்கத்தை அடுத்துள்ள பளிங்கு, அதன்வண்ணமாய் நிற்றல் பற்றி மாணிக்கத்துடன் ஒப்புதல் கூறல் பொருந்தும் ஆயின் இதனால் மாணிக்கத்தைப் பளிங்கு ஒப்பு எனல் பொருந்தாது. இவ்வாறே ஆன்மாவை முழு முதலுக்கு ஒப்பு என்று ஒரு வகையில் சொன்னாலும் முழுமுதலை ஆன்மாவுக்கு ஒப்பு என்று கூற முடியாது.

ஆன்மா உலகின் தளையோடு இருக்கும்போது ஆணவத்தின் வயப்பட்டு நிற்றலால் கடவுளின் கலப்பால் பெரும்பயனாகிய முக்தி இன்பத்தை அனுபவிப்பதில்லை.

**“நன்றெனவும் தீதெனவும் எனக்குஇங்கு உண்டோ**
**நானாகி நீயிருந்த நியாயம் சற்றே**
**இன்றெனக்கு வெளியானால் எல்லாம் வல்ல**
**இறவைா நின் அடியருடன் இருந்து வாழ்வேன்”**[5]

நன்மை என்றும் தீமை என்றும் அடியேனுக்கு இவ்வுலகில் உண்டோ? நீ நானாயிருந்த நியாயமானது இப்பொழுது அடியேனுக்குச் சிறிது தெரிந்தால் எல்லாம் செய்யவல்ல இறைவனை தேவரீது அடியாரோடு: இருந்து “சுகஜீவி” ஆவேன்

நான் நீ யாவது என்பது ஏற்றுக் கொள்ள இயலாத கருத்து ஆனால் அதை நியாயப்படுத்தும் வகையில் அத்வைதத்தின் முழுவிளக்கம் என்ன என்பதை வெளிப்படுத்தி நான் ஏற்றுக் கொள்ளுமாறு செய்தால் இன்றே உண் அடியார் கூட்டத்திலே சேர்ந்து விடுவேன்.

தாயுமானவரின் அத்வைதக் கருத்துக்கு உடன்படவில்லை அத்வைதக் கருத்தின்படி ஆன்மாவும் பரமாத்மாவும் கலத்தல் பால் பாலோடு கலத்தலும், நீர் நீரோடு கலத்தலும், எண்ணெய் எண்ணெயொடு கலத்தலும் போன்றதாகும்.

அத்வைதத்தில் ஆன்மா தனது தனித்தன்மையை இழக்கிறது. சித்தாந்த கருத்தின் படி ஆன்மா தன் தனிதன்மையைத் தக்கவைத்துக் கொள்கிறது இது எவ்வாறெனில் நீர் எண்ணெயில் சேர்க்கப்பட்டால் நீரும் எண்ணெயும் தனித்திருக்கும் கலப்பதில்லை. அதுபோல ஆன்மாவும் சிவனும் கட்டு நிலையில் மறந்து தொடர்பை இடையீடின்றி உணர்ந்து தனித்து நிற்றலே இரண்டறக் கலத்தல் என்பதன் உண்மையான பொருளாகும்.

காணும் தன்மையுடைய கண்ணுக்கு உயிர் அதனுடன் கலந்து நின்று உணர்த்துவது போல, உயிருடன் கலந்து காட்டியும் கண்டும் இறைவன் உதவுவதை என்னும் உயிர் மறவாத அன்பினால் இறைவன் திருவடிகளைப் பற்றி நிற்கும் என்பது சிவஞான போதம் பதினொன்றாம் சூத்திரத்தில் கூறப் பெறுகிறது.

இறைவனுக்கு அன்புடைமை அவன் அடியாரிடத்தும், எவ்வுயிரிடத்தும் அன்பாய் இருத்தலுடன் இணைந்து நிற்பது என்பது உளங் கொள்ளத்தக்கதாம். உடல், பொறிகள் முதலியவற்றின் தொடர்பின்றி ஆன்மாக்கள் **அறிவு, செயல், விழைவு** ஆகியவை இன்றி நீண்ட உறக்க நிலையில் இருக்கும் போது ஆணவ மலத்தினால் (அஞ்ஞானத்தினால்) முழுவதும் கவரப் பெறுகின்றன.

ஆன்மா கருவிகளின் தொடர்பின்றித் தனித்திருத்தல் என்பது கேவலாவத்தை எனப்படும். இந்த எதிரியை நான் சொல்லக்கூடிய வல்லமையைத தாங்கள் தருவது எந்நாளோ?

மனிதன் கடவுளால் கலக்கப்பட்ட ஒரு கலவை உடல், உறுப்பு, மனம், அறிவு, முக்குணங்கள் ஆகியவற்றின் சேர்க்கையே ஆவான். சைவ சித்தாந்தத்தில் ஆணவம் மாயை என்பது வேறு வேறு மாயை உயிரின் விழைவு இது அறிவு ஆற்றல்களை எழுப்புவது அன்றி மறைப்பதில்லை. கட்டு நிலையில் உடலில் பொருந்தினால் தான் இவை தொழிற்படுகின்றன. ஆணவம் அறிவை மறைத்தாலும் மாயையினால் உயிர்களுக்கு அறிவு, செயலாற்றல், விழைவு என்பவை உண்டாகும். அவை செம்மையாக வெளிப்படாமல் தடுத்து நிற்பதே. ஆணவம் என்பது சித்தாந்தம் மாயையைக் கொண்டு ஆணவத்தை எப்படி

போக்குவது? சாணம் உவர்மண் ஆகிய அழுக்குப் பொருள்களைக் கொண்டு பிற பொருள்களின் அழுக்கைப் போக்குவதும் போல இறைவன் மாயைக் கொண்டு மூல மலத்தைப் போக்குவான்.

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களை முறையே தவிடு முளை ஆகியவைகளுக்கு ஒப்பாக கூறுவது சித்தாந்த மரபு.

மூவகை ஆன்மாக்கள் உண்டு ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலத்தையும் உடையவர் சகலர் மும்மலங்களுள் ஒன்றாகிய மாயை நீங்கும் ஆணவம், கன்மம், என்னும் இரு மலங்களையுடையவர் பிரளயாகலர் அசுத்தமாயையும், கன்மமும் இன்றி ஆணவமாகிய ஒரு மலம் உடையவர்

விஞ்ஞானகலர், ஆனவ மலச்சத்தின் விஞ்ஞானகலரில் சூக்குமமாகவும் பிரளயாகலரில் தூலமாகவும் சகலரில் தூலதரமாயும் நிற்கின்றன.

**“ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்**
**தாணுவினோடு அத்தவிதஞ் சாருநாள் எந்நாளோ?”**

ஆணவமே ஆகாமலும் ஆணவத்திற்கு அன்னியமாகாமலும் ஆணவத்துடன் இரண்டறக்கலத்தாற்போல இறைவனை ஆகாமலும், இறைவனுக்கு அன்னியமாகாமலும் இறைவனுடன் இரண்டறக் கலக்கும் நாள் எந்நாளோ? இது அத்வைத உண்மையினை நன்கு விளக்கியதாகும்.

ஆணவ உணர்வு உயிரறிவில் பரவியுள்ளதாய் அஞ்ஞானமாகிய இருள் ஒருவரிடம் உள்ளது எனலாம். உண்மையான அறிவுநிலை, அஞ்ஞான இருளற்ற நிலை ஆன்மாவில் ஆழ்ந்துள்ளதால் ஆணவ மலம் ஒருவரிடம் இல்லை எனலாம்.

ஆகவே அஞ்ஞானம் இருப்பதும் இல்லை என்பதும் ஒப்பு நிலையே ஆகும்.

**“வைத்திடும் காலைப்பிடித்துக் கண்ணின் மார்பில்**
**வைத்தணைத்துக் கொண்டு கையால் வளைத்துக்காட்டிச்**

**சித்தமிசைப் புகஇருந்திப் பிடித்துக் கொண்டு**
**தியக்கமற இன்பசுகஞ் சேர்வ தென்றோ?**[7]

என் தலைவி மீது வைக்கும் திருவடிகளைப் பிடித்துக் கண்களிலும் மார்பிலும் வைத்துத் தழுவிக் கொண்டு கைகளால் வளைத்துக்கட்டி நெஞ்சினில் இருத்திப் பற்றி மயக்கமில்லாமல் பேரின்ப சுகத்தை அடைவது எக்காலமோ?

தவங்கிடந்த பெற்ற பிள்ளையைத் தாய் தழுவி ஆலிங்கனம் செய்து, முத்தமிட்டு உச்சிமோந்து இன்பம் அடைவதுபோல பல பிறவிகளில் செய்த புண்ணியத்தால் கிடைத்த அரிய திருவடியை அங்ஙனம் செய்து மகிழ்வது என்றோ? எனக் கேட்பது போல் இன்ப சுகம் சேர்வது என்றோ என்றார்.

**மனதினைப் பற்றிய தத்துவம்:**

இந்த அந்தக்காரணம் தைசதாகங்கராத்தினின்று முதற்கண் தோன்றும். அது புறக்கருவிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளால் கவரப் பெற்று ஊறு, சுவை, உருவம், நாற்றம், ஓசை என்னும் புலன்களை ஆன்மா பற்றுவதற்கும் பின் பத்தி தத்துவத்தால் அறுதியிடப் பெற்றவற்றை நினைவில் வைத்துக்கொள்தவற்குரிய கருவியாகும். முன்பு புத்தி தத்துவத்தால் அறுதியிடப் பெற்ற பொருளின் பெயர் சாதி, குணம், கன்மம் உடைமை என்பவற்றின் நினைவு மனத்தின்கண் தங்கிக் கிடப்பதால் அப்பொருளேயாயினும், அதனொடு ஒருங்கொத்த அவ்வினைப் பொருளாயினும் மீளவும், புறகருவிகட்கும் புலனாகும் பொழுது இ∴து இன்ன பொருள் தானோ? ஆன்றோ? என ஐயவுற்றும் நிற்கும் இ∴து இன்ன பொருள் போலும் எனப் பொதுவாக நினைத்தால் சங்கற்பம் என்றும் அ∴து ஆமோ? ஆன்றோ? என கவர்ந்து நிற்றல் விகற்பம் என்றும் வழங்கப் பெறும்.

உயிர்களில் மனித மனம்தாம் சிறந்தது ஆனால், மனத்தின் தொடக்க நிலையின் அறிகுறிகள் சிற்றுயிர்களிடத்தும் உள்ளன என்கிறார் சுப்புரெட்டியார். மனிதனிடத்து மனம் மிகவும் பக்குவமடைந்த நிலையில் உள்ளது. இந்த மனத்துடன் அவன் எதைப் பற்றிப் பிடிக்கின்றானோ அதன்மயமாகி விடுகின்றாள் உலகப் பொருள்களைப் பற்றினால் உலகமயமாகின்றான் இறைவனுடைய

அருளைப் பற்றினால் இறைவன் மயமாகின்றான். நல்ல மனத்தைப் பெற்றான் பிறகு அதன் துணை கொண்டு அருளைப் பற்றாது அழிந்துபோன பொருள்களைப் பற்றுவானாகில் அவன் சிந்தை பாழாய்கின்றது.

உலகப் பொருள் யாவும் காலக்கிராமத்தில் பாழாய்ப் போய்விடுகின்றன. பாழாகப் போகும் சிந்தையை பாழும் சிந்தை என்று பகரலாமன்றோ பற்றுதல் மயமாகி இருக்கும் சிந்தையைக் கொண்டு இறைவனைப் பற்றுதல் வேண்டும்.

**“பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடத்து”** [8]

ஆனால் பொல்லாத மனம் அவ்வரிய செயலைச் செய்வதில்லை இறைவனிடத்துப் பற்ற வைக்கின்றவர்களுக்கு இறைவனே கிட்டுவான் என்பதைத்

திரும்பத் திரும்பத் கூறிக் கொண்டிருந்தால் இறைவன் பற்று சிறிதாக உண்டாகும். ஆனால் மானிட சிந்தை இதற்கு இடம் தருவதில்லை. பயன்படாத பொருள்களைப் பற்றியே பகர்ந்து கொண்டிருப்பதற்கு அது தூண்டுகின்றது. இக்கருத்துகளைத் தொகுத்து அடிகள்

**“பற்றுவெகு விதமாகி ஒன்றைவிட் டொன்றனைக்**
**பற்றிஉழல் கிருமிபோலப்**
**பாழ்ஞ்சிந்தை பெற்ற நான் வெளியாக நின்னருள்**
**பகர்ந்தும் அறியேன்”**[9]

என்று ந. சுப்புரெட்டியார் கூறுகிறார்.

மேலும் ஐம்புலன்களின் வழிச் செல்வது மனம் உலகொடு கலந்துள்ள முதல்வன்பாற் சென்றால் திருத்தமடையும் எனக் கருதுகின்றனர்.

**“வேட்டைப் புலையர் மேவாத வண்ணம்மனச்**
**காட்டைத் திருத்திக் கரைகாண்ப செந்நாளோ?**[10]

என்ற கண்ணியில் இதனைக் காணலாம். மனம் திருந்தி அதன்கண் திருவருளாகிய மரம் முளைத்து வளருமாயின் அம்மரத்தின் அடியில் இறைவன் குருவாயிருந்து அருள் புரிவார் என்பது அடிகளாரின் நம்பிக்கை இதனை

**“மனதேகல் லால்எனக் கன்றோ – தெய்வ**
**மொன குருவாகிய வந்துகை காட்டி**
**எனதாம் பணியாறு மாற்றி அவன்**
**இன்னருள் வெள்ளத்(து) இருந்திவைத் தாண்டி”[11]**

என்று கூறுவர் புலன்களின் கொடுமையைத் தாங்க முடியாமல்

**“விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பம் செய்ய அந்த**
**அஞ்சுபுலி வேடருக்கும் ஆற்றேன் பராபரமே”[12]**

என்று இறைவனிடம் முனையிடுகின்றார்.

**திருந்தா மனம்:**

திருந்தா மனத்தின் தன்மையை அடிகள் பலவிடங்களில் எடுத்துக் காட்டுகின்றார். ஒரு பாடலில் (எங்கும் நிறைகின்ற பொருள் -4) கூறுவதைக் காண்போம்.

சொன்னபடி இணங்கி வராத பிள்ளையைத் தாய் தொட்டிலில் வைத்து ஆட்டித் தொடையையும் கிள்ளி விடுதல்போல் மனம் ஏதாவது ஒரு பொருளில் நினைப்பை உண்டாக்கிக் கொண்டிருக்கும்.

ஆணவமாயைத் தொடர்புடைய உயிர் மாயையாகிய உலகத்தால் நன்கு அழுந்தாத பொழுது உடம்பாகிய தொட்டிலின் ஊசலாட உலகப் பொருள்களில் உயிரினைக் கிள்ளுவதற்கு உவமித்துள்ளார். மனம் ஒரு பொருளைப் பற்றுவதால்தான் உயிர் அதில் அழுந்துவதாகிய துன்பத்தை அடைகின்றது. மனம் ஒரு பொருளை விட்டு மற்றொரு பொருளைநாடும் போது முன்பற்றிய பொருளை மறக்கின்றது. மேலும் இந்த மனம் கணவனுக்கு அடங்காத பெண்போல் வெளிச்

சென்று அலையும் மனம் அறநெறியில் அடங்கி நில்லாது தான் விரும்பிய வண்ணம் வரம்பு கடந்து செல்லுதலால் கணவனுக்கு அடங்காத பூவைக்கும் உவமையாகின்றன.

திருந்தா மனத்தை அடக்குதல் அருமை என்பதை ஒரு பாடலில் சேசோமயானந்தம் - 8 ஒப்புமை நயம் விளக்க உரைகின்றனர். நம்மிடம் உள்ள மனத்தின் தன்மையை உணர்ந்தால் அது நமக்கு அடங்கிவிடும். சான்றோர் சொன்ன உண்மை இதுதான்.

இது உணர்ந்த தாயுமானவர். உணர்ந்த பின் பாடுகின்றார். கட்டுத் தறிகளை முறித்துவிடும் மத யானையை வசப்படுத்தி நடத்தலாம். கரடி, புலி இவற்றின் வாயையும் கட்டலாம். ஒரு சிங்கத்தின் முதுகில் ஏறி சவாரி செய்யும் அளவிற்கு அதை அடக்கியாளலாம். நச்சுப் பாம்பகளை எடுத்து ஆட்டுதல்கூடும் நீர்மேல் நடக்கலாம். நெருப்பின் மேல் அமர்ந்து இருக்கலாம். வெய்தாகிய நெருப்பில் ஐந்து உலோகங்களையும் இரதகுளிகையிட்டுப் பொன்னாக்கி அதை விற்றுப் பொருள் பெற்று நுகரலாம்; வேறொருவர் காணாமல் இவ்வுலகத்தில் உலாவலாம்; விண்ணவர்களையும் ஏவல் கேட்கச் செய்யலாம்.

வாழ்நாள் முழுவதும் இளமையோடிருக்க வகை செய்யலாம், ஒப்பற்ற அட்டமா சித்திகளையும் பெற்றுவிடலாம், ஆனால் இவற்றையெல்லாம் செய்ய வல்லவர்களாலும் முடியாத ஒன்று அது.

**“சிந்தைய அடக்கியே சும்மா இருக்கின்ற**
**திறம் அரிது……”**[13]

இவண் கூறிய சித்திகளிளெல்லாம் மனம் ஈடுபட்டு அழுந்திய உலகத்தின்கண் உள்ள பொருள்கள் இவை மணிமந்தரம் மருந்து முதலியவற்றைச் செம்மைப்படுத்திக் கொள்வதால் வருவன. உலகப் பற்றை ஒழியாமலே அவற்றை முடிப்பதை விட உலகப் பற்று ஒழித்தல் அரிதானது என்று கூறினார்.

எத்தகைய சித்திகளைப் பெற்றாலும் சினம் அடங்கப் பெற்றாலும் மனத்தை அடக்க முடியாதவர்கட்கு வாய்ப் பேச்சினால் என்ன பயன் என்பதை

**“சினம்இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்**
**மனம்இறக்கக் கல்லார்க்கு வாய்என் பராபரமே”[14]**

என்ற பாடலால் புலப்படுத்துகின்றார்.

சில பாடல்களில் மனத்தினை வானத்திற் பறக்கும் காற்றாடிக்கும் உவமை கூறி விளக்குவர். காற்றாடி சுற்றித் திரிவதுபோல மனமும் உழன்று திரிகின்றது என்பார்.

**“ஆடு கறங்காகி அலமந்து உழன்றுமனம்**
**வாடும் எனைஐயா வாவெனவும் காண்பேனோ”[15]**

என்ற பாடல் விளக்குகிறது. வரலாற்றுப் போனால் காற்றாடி கீழே விழுந்து கிடக்கும். அதுபோல மனம் வலியற்று அடங்கும்படி இறைவனை அருள்புரிய வேண்டுகிறார்.

**“வாலற்ற பட்டமென மாயா மனப்படலம்**
**காலாற்று வீழவும்முக் கண்ணுடையாய் காண்பேனோ”[16]**

பாடல் விளக்குகிறது.

**மனத்தை இழித்துக் கூறுதல்:**

சில இடங்களில் அடிகள் மனத்தை இழித்தும் கூறுகின்றார்

**“கல்லேனும் ஐயஒரு காலத்தில் உருகும் என்**
**கல்நெஞ்சம் உருகஇலையே”[17]**

என்ற பாடற்பகுதியில் தமது நெஞ்சினைக் கல்லிலும் வலியது என்கின்றார். சூரிய காந்தக்கல் ஞாயிற்றின் கதிர்கள் பட்டவுடனும் சந்திரகாந்தக் கல் திங்களில் கதிர்கள் பட்டவுடனும், கருங்கல் ஞாயிறும் திங்களும் கூடுகின்ற

அமாவாசையன்றும் உருவாக்குவதாக கூறும் இலக்கிய மரபு ஒன்று உண்டு. ஆதலால் ஒருகாலும் உருகா நெஞ்சைக் கல்லினும் வலியது என்கிறார்.

ஒரு பாடலில் மனதை வெறுத்துக் கூறுகின்றார். இங்கு மனமே உன்னை மதியேன் என்கிறார்.

**"எனக்கு உனக்கும்உற வில்லை எனத்தேர்ந்து**
**நினக்கஅரி தானஇன்ப நிட்டை – தனைக்கொடுத்தே**
**ஆசான் மவுனி அளித்தான் நெஞ் சேஉனைஓர்**
**காசா மதியேன் நான்"[18]**

என்ற பாடல் இன்ப நிட்டை கைவரப்பெற்ற பிறகு மனதை விளித்துப்பேசும் பேச்சு இது.

**மனதை வென்ற நிலை:**

அடிகள் தாம் இறைவனோடு ஒருமைப்பட்டிருந்த காலத்தில் மனதைத் தாம் வென்ற நிலையையும் எடுத்துக்காட்டுகின்றார். அருளே கோயிலாகக் கொண்டு பேரின்பமாய் இருந்த பரம் பொருளோடு நான் உடனிருந்த பொழுது ஓடிப்போய் ஒளிந்துக் கொண்ட நெஞ்சே நீ முயற்கொம்போ? ஆகாயம் பூவோ? கானல் நீரோ? நீ விளங்க இருந்த இடம் எந்த இடம்? எனக்குத் தெரியவில்லையே என்கிறார். முயற் கொம்பு முதலிய பொருள்களும் இல்பொருளுக்கு உவமையாகக் கூறப் பெறுவனவாகும்.

அடிகள் வென்ற மனதை வினைத்தேவதைகட்குப் பலிகொடுத்து விட்டதாக ஒரு பாடலில் (கருணாகரக் கடவுள் -8) கூறுகின்றார். அன்பு என்பது மன உருக்கத்தால் உண்டாவது இதனால் அதனை இதற்கு உவமையாக்குகின்றன.

முத்தி நிலையில் மனம் இருக்கும் நிலை தெரியாது மறைந்து போவதை அடிகள்

**"அருளேழர் ஆலயமா ஆனந்த மாய்இருந்த**
**பொருளோ டியானிருக்கப் போயொளித்த நெஞ்சே நீ**
**மருள்தீர் முயற்கோடோ? வான்மலரோ? பேய்த்தேரோ?**
**இருளதீர நீஉறைத்த தெவ்விடமோ? காணேனே"[19]**

என்று அற்புதமாய் புலப்படுத்துகின்றார்.

உலகத்தை ஆராய்வதற்குக் கருவியாக உயிர் உள்ளது. எல்லாவிதமான நினைவிற்கும் மனமே இடமாக இருத்தலானும் உலகில் கண்டவற்றை மனம் பதிவு செய்து மீண்டும் உயிர் அவற்றை நினைப்பதற்குக் காரணமாயிருந்தாலும் மனத்தைப் பெரியதோர் மாயா தத்துவமாகக் கருதி அதன் இயல்புகளை அடிகள் பல பாடல்களில் விளம்புகின்றன.

முனதை ஒடுக்காது உலகத்தில் செல்லாவிட்டால் குரங்குப்போல் எங்கும் தாவிச் சென்று அறிவுடைப் பொருளாகிய உயிருக்குப் பல்வகை இன்னல்களை விளைவித்து அதனை சீர் குலைக்கும்.

**"மனம் ஆன வானரக் கைம்மாலை யாகாமல்**
**எனைஆள்அடிகள் அடிஎய்தநாள் எந்நாளோ?[20]**

இதில் தாயுமானவர் தம்மை மனமெனும் குரங்கின் கையிலகபட்ட மாலையாக உருவகித்தார் மேலும்

**"கொள்ளித்தேன் கொத்திக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்**
**கள்ளமனம் துள்ளுவதென் கண்டோ பராபரமே![21]**

மனதை வெல்லுதல் அருமை என்பதைத் தேஜோமயானந்தம் 83 ஆம் செய்யுளில் ஒப்புமை நயம் விளங்க அடிகள் உரைத்துள்ளார்.

கட்டுத்தறிகளை முறிக்கும் மதயானைகளை வசப்படுத்தி நடத்தலாம். கரடியையும், கொடிய புலியின் வாயையும் கட்டலாம் ஒப்பற்ற சிங்கத்தின் முதுகில் ஏறி இறங்கலாம். நச்சுப் பாம்புகளை எடுத்து ஆட்டலாம். வெய்ய நெருப்பிலே

ஐந்து உலோகங்களையும இரச குளிகையிட்டு பொன்னாக்கி அதனை விற்றுப் பொருள் பெற்று நுகரலாம்.

தேவர்களை ஏவல் கேட்கச் செய்யலாம். வாழ்நாள் முழவதும் இளமையுடன் இருக்கலாம். பிறிதொரு உடம்பிலும் புகுதல் கூடும். நீர்மேல் நடக்கலாம் நெருப்பின்மேல் இருக்கலாம். ஒப்பற்ற என் சித்திகளையும் பெறலாம். ஆனால் உள்ளதை அடக்கிச் சும்மா இருக்கின்ற நிலை இவை யாவற்றினும் அரிதாகும்.

**“கந்துக மதகரியை வசமா நடத்தலாம்**
**கரடி வெம்புலி வாயையும்**
**கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம்**
**கட்டசெவி எடுத்து ஆட்டலாம்”**[22]

என்ற பாடலில் விளங்குகின்றார்.

மரம் ஒருநாளும் உருகாத தன்மை உடையது. ஆதலால் மரநெஞ்சே என்றார். செயற்கை முயற்சியால் உருக்கப்படும் இரும்பு போல மிகவும் கடுமையான தவத்தால் மனம் உருகுதல் கூடும் என்பதால் இருப்பும் நெஞ்சே என்றார்.

தாம் எத்தனை விதங்களால் கற்கினும் கேட்கினும் மனதை அடக்குவது என்பது மிகவும் கடினம் எனத் தெரிந்து மனத்தை அடக்கி செல்ல வேண்டும் என்று சுப்புரெட்டியார் தாயுமானவரின் வழி மிகவும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

**சான்றெண் விளக்கம்**

1) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 2

2) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 17

3) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 120

4) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 427

5) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 5

6) மேலது தி. சம்பந்த முதலியார், பா – 28

7) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 309

8) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 12

9) திருக்குறள் மணக்குடவர் உரைஇ குறள் எண் - 350

10) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 10

11) மேலது தி. சம்பந்த முதலியார், பா – 6

12) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 145

13) மேலது ந.சுப்புரெட்டியார் ப.எ - 145

14) மேலது ந.சுப்புரெட்டியார் ப.எ – 150

15) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 169

16) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 152

17) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 152

18) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 264

19) தாயுமானவர் ந. சுப்புரெட்டியார் ப.எ – 159

20) தாயுமானவர் மூலமும் உரையும், தி. சம்பந்த முதலியார், பா – 5

21) மேலது தி. சம்பந்த முதலியார், பா – 172

22) தாயுமானவர், சு.ந. சொக்கலிங்கம், பா – 83

# முடிவுரை

தாயுமானவர் வாழ்க்கை வரலாற்றினைத் தோற்றம் முதல் சமாதிநிலை அடைந்த வரை முதல் இயலில் கூறப்பட்டுள்ளது தத்துவக்குறிப்புகள் என்ற இயலில் சைவ சித்தாந்தத்தின் முடிவாகக் கொள்ளப்படும் பதி, பசு, பாசம் பற்றியும் மனதின் பண்புகள் தத்துவங்கள் பற்றியும் தெளிவான சான்றுகளுடன் சுப்புரெட்டியார் விளக்கிக் குறிப்பிட்டார்.

ஆன்மீகப் பார்வை என்னும் இயலில் இறைவனைப் பற்றியும்இ இறைவன் பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ளான் என்பதையும் உயிர்கள் பாசத்தால் பிணிக்கப்பட்டுள்ளதையும் சித்தி பெற்றவர் சித்தர் என்றும் சுப்புரெட்டியார் கூறுகின்றார். இறைவனுக்கு உலகத்தோடு: உள்ள தொடர்பை விளக்குவதற்கு தாயுமானவ அடிகளார் அத்துவிதம் என்ற சொல்லை எடுத்தாண்டுள்ளார். தாயுமானவர் பாடல்களில் இறைவனது திருகுணங்கள் மற்றும் அருட்செயல்கள் புரிந்துள்ளமை பற்றியும் சுப்புரெட்டியாரின் வாயிலாக விளக்கமாக குறிப்பிடப்பட்டுள்ளது.

# துணைநூற் பட்டியல்

## முதன்மை ஆதாரம்:


ந.சுப்புரெட்டியார் - தாயுமானவர்
முதற்பதிப்பு - 2001
கலைஞன் பதிப்பகம்
19 கண்ணதாசன் சாலை
தியாகராஜன் சாலை
சென்னை 600 017


## துணைமை ஆதாரங்கள்


சு.ந.சொக்கலிங்கம் - தாயுமானவர்
பழனியப்பா பிரதர்ஸ்
கோனார் மாளிகை
25 பீட்டர்ஸ் சாலை
சென்னை 600 014

தி.சம்பந்த முதலியார் - தாயுமானவர்
உமா பதிப்பகம்
10/171 பவளக்காரத் தெரு

மணக்குடவர் உரை - திருக்குறள்
சாரதா பதிப்பகம்
சென்னை 600 014

முனைவர் கதிர்முருகு - திருவாசகம் (உரை)
சாரதா பதிப்பகம்
மார்ச் 2015
ஜீ-4 சாந்தி அடுக்கம்

3 -ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை
சென்னை -14

திருமந்திரம் - திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிம்டொ் 522, டி டி கே சாலை
ஆழ்வார் பேட்டை
சென்னை

முனைவர் த.கோவேந்தன - நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்
முனைவர் த.கோவேந்தன்
சாரதா பதிப்பகம்
சென்னை 600 014

பாரதியார் பாடல்கள் - பூம்புகார் பிரசுரம்
15 மண்ணார் சாமி
கோயில் தெரு
முதற்பதிப்பு – 1976
சென்னை – 600 013



# விட்டுசித்தன் விரித்த தமிழ்

பேராசிரியர் முனைவர்

## ந சுப்பு ரெட்டியார்



1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

# ந.சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முதுகலைத் தமிழ்

இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

**உ.பிரியங்கா**

**பதிவு எண் : P18100420**

**நெறியாளர்**

**முனைவர் ந.சுபா, எம்.எ., பி.எட்., எம்.பில்., பி.எச்.டி., ஸ்லெட்.,**

**இணைப்பேராசிரியர்**

**தமிழாய்வுத்துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**






**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் (மூன்றாம் சுற்று)**

**A தகுதி (CGPA 3.41/4) பெற்றது**

**திருச்சிராப்பள்ளி – 620 018**


**மார்ச் - 2020**

# நன்றியுரை

**‘ந.சுப்புரெட்டியார் காட்டும் விட்டு சித்தன் விரித்த தமிழ்’** என்ற தலைப்பில் இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி ரெட்டி கல்வி அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர்களுக்கும் எங்களை வழி நடத்திச் செல்லும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ.சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் என் தமிழாய்வுத்துறைத் தலைவரும் துணை முதல்வருமான முனைவர் ச.இராமலட்சுமி அவர்களுக்கும் இவ்ஆய்வுக் கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வு தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழிநடத்திச் சென்று கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர், முனைவர். ந.சுபா அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

காமாட்சி அம்மாள் உதவித்தொகை நல்கி ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த ந.சுப்புரெட்டியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கு எம் நெஞ்சார்ந்த நன்றியை சமர்பிக்கின்றேன்.

ஆய்வு தொடர்பாக பல உதவிகளைச் செய்து, எனக்கு ஊக்கமளித்த எம்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு உதவி எனக்குத் தந்தையாக இருந்து என்னை வழிநடத்தும் எனது அண்ணன் உ.விக்னே‘வரன் அவர்களுக்கும் என் தாயார்

உ.சித்ரா அவர்களுக்கும் மற்றும் என் சகோதர, சகோதரிகளுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான பல நூல்களை வழங்கி உதவிய எம் கல்லூரி நூலகத்திற்கும் எம்துறை நூலகத்திற்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குத் துணை நின்று பல உதவிகளைச் செய்த என் தோழிகள் அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையாக கணினி தட்டச்சு செய்து கொடுத்த திரு.கா.இராமலிங்கம் அவர்களுக்கும், செல்வி.ஜெ.கௌசல்யா அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்

உ.பிரியங்கா

# பொருளடக்கம்


| இயல் எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1. | சுப்புரெட்டியார் பார்வையில் பெரியாழ்வார் | 5 |
| 2. | சுப்புரெட்டியார் காட்டும் பெரியாழ்வாரின் கண்ணன் | 21 |
| 3. | சுப்புரெட்டியாரின் ஆய்வுப் போக்கு | 57 |
| | முடிவுரை | 75 |
| | துணைநூற்பட்டியல் | 77 |

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ | - | உரையாசிரியர் |
| குறள்.எண் | - | குறள் எண் |
| தெ.ஆ | - | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ.எண் | - | நூற்பா எண் |
| நூற் | - | நூற்றாண்டு |
| பா.அ | - | பாடல் அடி |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| ப.எ | - | பக்க எண் |
| பா.எண் | - | பாடல் எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

# முன்னுரை

தமிழ்நாடு, திருச்சி மாவட்டம், பெரகம்பி என்ற ஊரில் எளிய வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தவர். டாக்டர் ந.சுப்புரெட்டியார் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளங்கலைப்பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர்.

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-ல் தமிழ்த் துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார். தமிழறிஞர், எழுத்தாளர், பேராசிரியர் எனும் பன்முகம் கொண்ட இவரது 135 நூல்களையும் தமிழக அரசு, தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் 2008-2009ம் ஆண்டில் நாட்டுடைமையாக்கியது.

சுப்புரெட்டியார் அவர்கள் திரு.வி.க.விருது, திருக்குறள் விருது, டாக்டர். இராதாகிரு‘ணன் விருது, கலைமாமணி விருது போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார். சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய நூல்களுள் பன்னிரண்டு நூல்கள் வைணவ சமய தத்துவங்களைப் பற்றியவை ஆகும். மேலும் இவரது கவிப்புலமையையும் ஆய்வுத் திறனையும் வைணவத் திருத்தொண்டினையுட் பாராட்டும் விதமாக மார்ச் 1987ஆம் ஆண்டு பண்ணுருட்டி ஸ்ரீமத் ஏ.வே.வி இராமநுச நாவலர் சபை தமது 62-வது ஸ்ரீ வைணவ மாநாட்டில் இவருக்கு ‘ஸ்ரீ சடகோபன் பொன்னடி’ என்னும் விருதை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

இவர் இயற்றிய நூல்களுள் ஒன்றுதான் விட்டு சித்தன் விரித்த தமிழ். அதாவது, பன்னிரண்டு ஆழ்வார்களைப் பற்றியும், அவர்களது அருட்செயல்களைப் பற்றியும், எளிய நடையில் நூல்கள் எழுதி பொதுமக்களுக்கு விருந்தளிக்க வேண்டும் என்கிற பேரன்பு அவர் மனதைப் பல ஆண்டுகளாகவே நெருடிக்கொண்டு இருந்தது.

அந்த அவா நிறைவேறும் பாங்கில் முதன் முதலாக 'விட்டு சித்தன் விரித்த தமிழ் என்கிற தலைப்பில் பெரியாழ்வார் பற்றியும் அவருடைய அருட்செயல்களை விளக்கும் பாங்கிலும் முதல் நூலைப் படைத்தருளினார்.

பெரியாழ்வார் கண்ணன் மீது கொண்டிருந்த பக்தியைப் போலவே சுப்புரெட்டியார் பெரியாழ்வாரையும் கண்ணனையும் ஒருசேர அனுபவித்து பல நிகழ்வுகளையும் கோர்த்து சுவைபடப் படைத்துள்ளார். விட்டுசித்தன் விரித்ததமிழ் எனும் நூலில் அமைந்துள்ள நயங்களைக் காண்பதே இவ்வாய்வு.

**ஆய்வுத் தலைப்பு :**

ந.சுப்புரெட்டியார் காட்டும் விட்டுசித்தன் விரித்த தமிழ் என்பதே இவ்ஆய்வேட்டின் தலைப்பாக அமைகின்றது.

**ஆய்வு நோக்கம் :**

விட்டு சித்தன் விரித்த தமிழின் வாயிலாக பெரியாழ்வாரின் வாழ்க்கை வரலாறு பெரியாழ்வார் கண்ணன் மீது கொண்ட ஈடுபாடு மற்றும் இவற்றை ஆராய்ந்த சுப்புரெட்டியாரின் ஆய்வுப் போக்கு போன்றவற்றை ஆராய்வதே இந்த ஆய்வேட்டின் நோக்கமாகும்.

**ஆய்வுக் கருதுகோள் :**

பெரியாழ்வார் கிருஷ்ணாவதாரத்தின் பெருமையினைப் பிறப்பு முதல் ஆழமாக அனுபவித்துப் பாடியுள்ளமையை சுப்புரெட்டியார் எளிமையாக விரித்துரைத்துள்ளார்.

**ஆய்வு எல்லை :**

சுப்புரெட்டியார் எழுதியுள்ள பல நூல்களுள் விட்டு சித்தன் விரித்த தமிழ் என்னும் நூலில் உள்ள கருத்துக்களே இவ்ஆய்வேட்டின் எல்லையாக அமைகிறது.

**ஆய்வு முறை :**

விட்டு சித்தன் விரித்த தமிழில் காணப்படும் செய்திகளைப் பகுப்பாய்வு செய்து காணும் பகுப்பாய்வு முறையும் அதனை விளக்கிக் காட்டப்பெறும் விளக்கமுறை ஆய்வும் ஈண்டு பயன்படுத்தப்படுகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு :**

இந்த ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயலாகப் பகுக்கப்பட்டுள்ளது.

அவை :

இயல் 1 : சுப்புரெட்டியார் பார்வையில் பெரியாழ்வார்.

இயல் 2 : சுப்புரெட்டியார் காட்டும் பெரியாழ்வாரின் கண்ணன்.

இயல் 3 : சுப்புரெட்டியாரின் ஆய்வுப் போக்கு

**இயல் ஒன்று :**

பெரியாழ்வாரின் பிறப்பு முதல் அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்வுகள், அவருடைய பக்தித்திறம் போன்றவற்றை சுப்புரெட்டியார் எடுத்துரைத்துள்ள பாங்கு இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் இரண்டு :**

கண்ணனது பிறப்பு, அவனது வளர்ச்சி நிலைகள் அவன் விளைவித்த சிறுசிறு குறும்புகள், அவனுடைய வீரதீரச் செயல்கள், பிருந்தாவனத்தில் வேணுகோபாலன் போன்ற கண்ணனது அனைத்து செயல்களையும் யசோதையின் வாயிலாக பெரியாழ்வார் அனுபவித்ததை சுப்புரெட்டியார் விரித்துரைக்கும் முறை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**இயல் மூன்று :**

விட்டு சித்தன் விரித்த தமிழ் எனும் நூலை சுப்புரெட்டியார் ஆழங்காற்பட்டு ஆய்வு செய்த திறம் பற்றி இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**முதன்மை ஆதாரம் :**

இவ்ஆய்விற்கு விட்டுசித்தன் விரித்த தமிழ் முதன்மை ஆதாரமாக அமைகிறது.

**துணைமை ஆதாரம் :**

விஷ்ணு சித்தரான பெரியாழ்வார் பற்றிய நூல்களும் பிற நூல்களும் துணைமை ஆதாரமாக பயன்படுத்தப்பட்டுள்ளது.

**முடிவுரை :**

ஆய்வேட்டின் இறுதியில் முக்கியமான முடிவுகள் முடிவுரை என்ற தலைப்பின் கீழ் தரப்பெற்றுள்ளது. ஆய்வுக்குத் துணை செய்த துணை நின்ற நூல்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுத்து ஆய்வேட்டின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

# சுப்புரெட்டியாரின் பார்வையில் பெரியாழ்வார்

**பெரியாழ்வாரின் பிறப்பு :**

தென் தமிழ் நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ஸ்ரீவில்லிபுத்தூர் என்ற ஊர் வரலாற்றுச் சிறப்பும் புராணச் சிறப்பும் மிக்கது. வைணவர்களின் 108 திவ்ய தேசங்களில் இதுவும் ஒன்று.

ஒரு காலத்தில் இந்த வில்லிபுத்தூர்ப் பகுதி செண்பகக் காடாக மண்டிக் கிடந்தது. இப்பகுதியை ஆண்ட வேடப்பெண்ணரசி மல்லி. இவளுக்கு இரண்டு புதல்வர்கள் மூத்தவன் பெயர் வில்லி : இளையவன் பெயர் கண்டன.

ஒரு நாள் இளையவன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் ஒரு புலியால் கொல்லப்பட, அதனால் மனமுடைந்து வாழ்ந்த வில்லியின் கனவில் பாற்கடல் பரந்தாமன் தோன்றி 'அன்பனே, நீ இந்தக் காட்டை அழித்து இதனை ஒரு நகரமாகச் செய்வாயாக, பாண்டி, சோழ நாடுகளிலுள்ள அந்தணர்களைக் குடியேற்றுவாயாக' என்று சொல்கிறார்.

அதன்படியே வில்லி, 'காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்ட' நகரமே வில்லிப்புத்தூர். வில்லியால் நிறுவப் பெற்றதால் இவ்வூர் வில்லிப்புத்தூர் என்று வழங்கப்படுகிறது. இந்த ஊர் வில்லிப்புத்தூர் என்ற பெயராலும் அல்லது சுருக்கமாகப் 'புத்தூர்' என்னும் 'புதுவை' என்றும் வழங்குவதைப் பெரியாழ்வார் மற்றும் ஆண்டாள் திருமொழிகளின் வாயிலாக அறியலாம்.

இந்தப் புதுவை நகரில் வேயர் குலத்தில் முகுந்தப் பட்டர் என்ற வைதிக அந்தணருக்கும் பதுமவல்லி அம்மையாருக்கும் ஆனி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர் தான் பெரியாழ்வார். இவரைக் கருடாம்சமாக அவதரித்தவர் என்று வைணவ உலகம் கருதுகின்றது.

சிறுவயதிலேயே விஷ்ணுவைத் தம் சித்தத்தில் கொண்டிருக்க வேண்டும் என்று கருதிய பெற்றோர் இவருக்கு விஷ்ணு சித்தர் என்ற திருநாமம் இட்டு அழைத்தனர்.

**பெரியாழ்வரின் அருட்செயல்கள் :**

எம்பெருமான் திருவுளத்திற்கு எத்தகைய செயல் ஏற்புடையதோ அதுவே தாம் செய்யத்தக்கது என்று உறுதிகொண்டவர். ஆகையால் எத்தகைய கைங்கரியத்தை மேற்கொள்ளலாம் என்று ஆரா்ய்ந்து பார்க்கையில், அவருக்கு கிருஷ்ணாவதாரத்தில் கம்சனுடைய அரண்மனையில் பணிசெய்த மாலாகாரர் நினைவுக்கு வருகின்றார். மாலாகாரர் மாலை கட்டுபவர் ஆவார். கண்ணன் இவரது திருமாளிகைக்கு எழுந்தருளிப் பூமாலையை இரந்து பெற்று அணிந்து கொண்ட

நிகழ்வை நினைந்து, 'மலர் தொடுத்து அளித்தலே எம்பெருமானுக்கு உகப்பு' என்று எண்ணி வேதம் ஒதுவதுடன் நந்தவன கைங்கரியத்தையும் மேற்கொண்டார். இவர் வடபத்திரசாயி பெருமாளுக்கு அன்றலர்ந்த பூக்களைப் பறித்துப் பூமாலையாக சாற்றுவதையே கைங்கர்யமாகக் கொண்டிருந்தார். பூமாலைக் கட்டுவது போல் பாமாலை கட்டுவதிலும் இவர் வல்லவர்.

கண்ணனைப் பச்சைப் பசும்குழவிப் பருவத்தில் இருந்து உருவகப்படுத்தி உலகிற்கு விட்ட பெருமை இப்பெரியாருக்கே உரியது. விஷ்ணு சித்தருக்குக் கண்ணன் மீது ஈடுபாடு அதிகம். கண்ணன் மீது பக்தி செலுத்திக் கொண்டே இவருள்ளம் எத்தனையோ பகற்கனவுகளில் ஆழ்ந்து கிடக்கும், என்று சுப்புரெட்டியார் பெரியாழ்வாரின் ஆழ்ந்த பக்தியை அவர்தம் பாடல்கள் வழி சுட்டுகின்றார்.

இவர் இயற்றிய பிரபந்தங்கள் திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி ஆகிய இரண்டும் ஆகும். பெரியாழ்வார் செய்த இந்நூல்கள்

இரண்டும் திவ்யப்பிரபந்தத்தின் தொடக்கத்தில் (பகற்கனவு) தோரண வாயில்போல் அமைந்துள்ளன.

**பகற்கனவு :**

விஷ்ணு சித்தருக்குக் கண்ணன் மீது ஈடுபாடு அதிகம். கண்ணன் மீது பக்தி செலுத்திக்கொண்டே இவருள்ளம் எத்தனையோ பதற்கனவுகளில் ஆழ்ந்து கிடக்கும். இத்தகைய கனவுகளில் இவர்தம் உள்ளத்தையே ஒரு பெண்ணாகக் கற்பனை செய்துக்கொள்வார். இத்தகைய உள்ளத்தில் உள்மனம் பரமார்த்திகப் பொருள்களில் மூழ்கிப்போய் எம்பெருமானுடைய காதலி என்று தன்னை நினைத்துக் கொள்ளும், உலகப் பற்றில் ஈடுபட்டுக் கிடக்கும் புறமனமோ தாயாக அமைந்து உள்மனத்தைத் தன் அருமை மகளாகக் கருதி அதற்கு அறிவுரை கூறத் தொடங்கும்.

இந்த நிலையில் ஒரு சமயம் ஏதோ ஒரு நாடகம் நிகழ்வதுபோல இவருக்கும் சில பக்தியனுபவங்கள் ஏற்படுகின்றன. அதனை அறிந்த ஆசிரியர் அதைப் பற்றி குறிப்பிடுகிறார். தன் மகளின் காதலைக் கண்டு தாய் திடுக்கிடுகின்றாள். 'இளம் பெண்ணானாலும் இவள் எனக்குக் குழந்தைதானே' என நினைத்து, ஏ! பெண்டிர்காள்! நீங்கள் எல்லாம் உங்கள் தாய்யாருக்கு அடங்கிப் போவதில்லையா?" என்று மற்ற இளம் பெண்களை பார்த்து வினவுகின்றாள். ஏனென்றால் தன் மகள் தன் காதலனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். ஆதனை நினைத்து தாயின் இதயம் பலவாறாகப் பரிதவிக்கின்றது. ஐயோ! ஒரே மகள் அல்லவா என்று எண்ணாததெல்லாம் எண்ணி,

**"ஒருமகள் தன்னை உடையேன்**
**உலகம் நிறைந்த புகழால்**
**திருமகள் போல வளர்த்தேன்:**
**செங்கண்மால் தான்கொண்டு போனான்"! (1)**

என்று பலபடியாக உருகித் திடீரென்று கனவு நிலை கலைந்து விழித்துக் கொள்கின்றார் விஷ்ணுசித்தர். உண்மையில் அன்னை வேறு யாரும் இல்லை விஷ்ணு சித்தரின் புறமனமே இவ்வாறு பேசுகிறது. அந்த ஒரே மகள் பக்திப் பெருங் காதலில் ஆழ்ந்து போன அவரது உள்ளம்தான் என்கிறார் சுப்புரெட்டியார்.

போராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். பெரியாழ்வார் மீது கொண்டிருந்த அளவு கடந்த அன்பும், மரியாதையும் மற்றும் அவர்மீது கொண்ட ஈடுபாடும், பேரார்வமுமே இந்த 'விட்டு சித்தன் விரித்த தமிழ்' என்னும் நூல் வெளிவருவதற்குக் காரணமாகும். அவர் பெரியாழ்வார்.

மீது கொண்டிருக்கும் பக்தி நெறிக்கு இந்நூல் சான்றாக அமைகின்றது. கண்ணனின் பக்தி வெள்ளத்தில் மூழ்கி தீளைத்தவர் பெரியாழ்வார். ஆழ்வார் காட்டிய பக்தி நெறியிலே இவரும் மூழ்கி திளைத்துள்ளார் என்பதை இந்நூலில் உள்ள செய்திகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**பரத்துவ நிர்ணயம் :**

விஷ்ணு சித்தர் வாழ்ந்த காலத்தில் மதுரையை ஆண்ட அரசன் ஸ்ரீவல்லபதேவன். இவன் பல இரவு வேலைகளில் மாறுவேடம் பூண்டு நகர்வலம் வந்து குடிமக்களின் சுக துக்கங்களை நேரில் அளித்து வந்தான்.

வழக்கமாக இங்ஙனம் சுற்றி வந்து கொண்டிருந்த போது அவன் ஒரு திண்ணையில் யாரோ ஒருவன் உறங்கிக் கொண்டிருப்பதைக் காண்கின்றான். அவனை எழுப்பி, தாங்கள் யார்? இங்கே ஏன் இப்படி கிடக்கின்றீர்கள்? உங்கள் நோக்கம் என்ன? என்று கேட்க, அவனோ, 'ஐயா, நான் ஒரு திருத்தலப் பயணி கங்கையாடித்திரும்புகின்றேன்' என்றான்,

திருத்தலப் பயணியின் முகப் பொலிவினால் கவரப்பெற்ற அரசன், அவரிடம், “பெரியீர் ஆன்ம வாழ்க்கைப் பயணத்திற்கு வழி கண்டிருப்பின், அதனை அடியேனுக்குக் காட்டியருள வேண்டும் என்று கேட்க, அப்பயணி மனமுவந்து, மழைக்காலத்துக்கு வேண்டியவற்றுக்கு மற்றைய எட்டுத் திங்களிலும் இரவுக்கு வேண்டியதைப் பகலிலும், முதுமைக்கு வேண்டியதை இளமையிலும், மறுமைக்கு வேண்டியதை இம்மையிலும் ஒருவன் பெற முயல வேண்டும்” என்னும் கருத்துள்ள ஒரு பாடலைக் கூறினான்.

அதைக்கேட்ட அரசன் முதல் மூன்றுக்கு நம்மிடம் குறைவொன்றும் இல்லை. மறுமைக்குத் தான் முயல வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று தன் குருவாகிய செல்வநம்பியிடம் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு வித உறுதிப் பொருள்களையும் தரவல்ல பரம்பொருள் இன்னதென்று உணர்வதற்கு வழி என்ன, என்று கேட்டான்.

அவர் வித்துவான்களைக் கூட்டிப் பரத்துவ நிர்ணயம் செய்து, அதன் அடிப்படையில் வீடு பேறு அடைய முயல வேண்டும் என்கிறார்.

இறுதியில் பொன்னும் மணியுமாக அளவற்ற பொருளை ஒரு சீலையில் முடிந்துக் கட்டி அந்தப் பொறிகிழியை அரசவையின் தோரண வாயிலில் கட்டித் தாங்க விடுகின்றனர்.

ஸ்ரீவில்லிப்புத்தூர் பெருமான் பெரியாழ்வாரின் (விஷ்ணுசித்தரின்) கனவில் தோன்றி “விஷ்ணு சித்தரே, மதுரை சென்று பரத்துவத்தை நிலை நிறுத்திப் பொற்கிழியை அறுத்து வாரும்” எனப் பணிப்ப அவரும் இறைவன் மீது பாரத்தைப் போட்டு மதுரை சென்று வாதத்தில் வெல்கிறார்.

இறுதியில் அவர், “எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் உண்டாகின்றனவோ, எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் நிறைவு

பெறுகின்றனவோ, எந்தஒரு பொருளில் எல்லாப் பொருள்களும் இறுதியில் சேர்ந்து விடுகின்றனவோ அந்தப் பரம்பொருளே தியானத்திற்கு உரிய இறைவன் என்றும், அந்தப் பரம்பொருளே நாராயணன் என்றும் அவனைச் சரணடைவதே வீடுபேறு அடைவதற்குரிய வழியென்றும் விரிவாக விளக்குகின்றார்.

இறைவன் மீது கொண்டிருக்கும் பக்திநெறியே முக்தியில் கொண்டு சேர்க்கும் பெருநெறி என்றும் மெய்ப்பிக்கின்றார். இறுதியாக "ஞானபக்தியே இம்மைக்கும் மறுமைக்கும் உறுபெருஞ் செல்வம்" என்று சொல்லி முடிக்கிறார் விஷ்ணு சித்தர் அவர்கள். உடனே வாசலில் கட்டியிருந்த பொற்கிழியும் தானே தாழ அதனை அறுத்துக் கொண்டு வந்து விஷ்ணுசித்தரின் திருவடிகளில் வைத்து வணங்குகிறான். அரசன்.

இவ்வாறாகப் பெரியாழ்வார், தமது வாதத்திறமையினால் பல வேத விற்பன்னர்களையும், நுண்ணறிவும் அறிவுக் கூர்மையும் உள்ள புலவர்களை வென்ற திறத்தை, சுப்புரெட்டியார் அவர்கள் தாமே நேரில் கண்டாற்போல் மிகவும் அழகாகக் காட்சிபடுத்தி உள்ளார். மேலும் இறைவன் மீது வைத்திருக்கம் பக்தி நெறியே சிறந்தது என்று கூறி ஆழ்வார் அவர்கள் கிழியறுத்த செய்தியையும் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.

இந்த வரலாற்றைப் பிற்கால ஆசிரியர்களில் ஒருவரான பாண்டிய பட்டர் என்பார்,

**"பாண்டியன் கொண்டாடப் பட்டபிரான் வந்தானென்(று)**
**ஈண்டிய சங்கம் எடுத்தூத – வேண்டிய**
**வேதங்கள் ஓதி விரைந்து கீழியறுத்தான்**
**பாதங்கள் யாமுடைய பற்று"**(2)

என்று குறிப்பிடுகிறார்.

**திருப்பல்லாண்டு பாடிய பட்டர் பிரான் :**

விஷ்ணு சித்தரின் பரத்துவ நிர்ணயம் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. பின்னர் விஷ்ணுசித்தரைப் பட்டத்து யானையின் மீது ஏற்றி நகர்வலம் செய்விக்கின்றான் வல்லபதேவ மன்னன். மதுரை மக்களுக்கு அந்நாள் ஒரு பெரு விழாவாக அமைகின்றது. ஊர்வலத்தில் திருச்சின்னமும், சங்கமும் கம்பீரமாக ஒலிகளை எழுப்புகின்றது. மங்கள வாத்தியங்கள் அதிர்கின்றன.

ஆகாய வீதிகளிலும் தேவர்கள் கூட்டம் கூட்டமாக வந்து வாழ்த்துகின்றனர். இந்திரன், நான்முகன், சிவன் முதலானோரும் அக்கூட்டத்தில் காட்சியளிக்க அக்கூட்டத்தின் நடுவே ஆயிரம் சூரியர்கள் ஒரே காலத்தில் கூடியிருப்பது போல் ஒரு பெரும் சோதி சுடர் விட்டுத் தோன்றுகிறது.

மகனுடைய விழாவைக் காண வரும் பெற்றோர்போல திருமால், பிராட்டிமாருடன் பெரிய திருவடிமீது திருவாழி திருச்சங்குடன் தோன்றியதே அச்சோதி வெள்ளத்திற்குக் காரணமாகும்.

இத்தகைய அருள் வெள்ளத்தைக் கண்ட விஷ்ணு சித்தரின் பரமபக்தி பாட்டாக வெளிப்படுகின்றது. "திருமால், திருமகளோடு கருட வாகனத்தில் எழுந்தருளியிருக்கக் கண்டு இறைவனின் வடிவழகில் மயங்கி எங்கே இறைவனுக்கு கண்ணெச்சில் (கண்ணேறு) பட்டுத்தீங்கு வருமோ!" என்று அஞ்சியவர்போல் யானைக் கழுத்தின் மேல் கிடக்கும் மணியையே கைத்தாளமாகக் கொண்டு பல்லாண்டு பாடத் தொடங்கினார்.

**“பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு**

**(பல்லாயிரத்தாண்டு)**

**பலகோடி நூறாயிரம்**

**மல்லாண்ட திண்தோள் மணிவண்ணாஉன்**

**சேவடி செவ்வி திருக்காப்பு” (3)**

என்று ஆனந்தக் கண்ணீர் பெருக பாடல் வெளிப்படுகின்றது. இறைவனுக்கே கண்ணேறு கழிக்க முயன்றதால் இவரை ஆழ்வார்களில் பெரியவர் எனும் பொருள்பட “பெரியாழ்வார்” எனவும், ஆழ்வாரை அவ்வாறே அரங்கன் அழைக்க பின்னர் இதுவே இவர் பெயராகிப்போனது. என்று நம் விஷ்ணு சித்தருக்குப்

பெரியாழ்வார் என்னும் பெயர் வந்த காரணத்தை சுப்புரெட்டியார் கூறியிருப்பது அவரது ஆய்வுத் தன்மையைப் பறைசாற்றுகின்றது.

**திருப்பல்லாண்டின் மேன்மை :**

இறைவனுக்கே கண்ணேறு கழிக்க முயன்ற இவரது பக்தி மேன்மையைக் கண்ட பின் வந்த வைணவப் பெரியோர்கள் ஆழ்வார்கள் வரிசைக்கிரமத்தில் ஏழாமவராக வரும் பெரியாழ்வாரின் பாடல்களை நாலாயிரத்திவ்யப் பிரபந்ததத்தில் முதற்பாடலாகத் தொகுத்தனர் என்கிறார் சுப்புரெட்டியார்.

மேலும், சாற்றுமறை எனும் வைணவ தினசரி வழிபாட்டின் தொடக்கம் மற்றும் முடிவின் போதும், வைணவ கோயில்களின் திருவிழாக்களில் சுவாமி புறப்பாடு மற்றும் புறப்பாடு முடிந்து திருக்கோயில் திரும்பும் போதும் இன்றளவும் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு பாடப்பட்டபின்னரே சுவாமியை திருக்கோயிலுக்குள் எழுந்தருளச் செய்கின்றனர்.

இவ்வழக்கம் தமிழ்நாட்டில் மட்டும் அல்லாது இராமானுசர் கடைபிடிக்கப்பட்டு கொள்கைகளை பின்பற்றும் பிறபகுதி வைணவ கோயில்களிலும் வருகின்றது. என்று சுப்புரெட்டியார் உலகம் முழுவதும் பெரியாழ்வார் போற்றப்படுவதை சான்றுடன் சுட்டுகின்றார்.

எப்படி வேதத்துக்கு ‘ஓம்’ என்பது முதல் ஒலியாக அமைந்து வேதத்தின் தொடக்கத்தை அறிவிக்கின்றதோ, அதுபோல் தமிழ் வேதத்திற்கு இத்திருப்பல்லாண்டு அமைகின்றது என்பதை,

**“கோதிலவாம் ஆழ்வார்கள் கூறு கலைக்கெல்லாம்**
**ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும் - வேதத்துக்கு**
**ஓமென் னுமதுபோல் உள்ளதுக்கெல் லாம் சுருக்களமாய்த்**
**தான்மங் கலமாத லால்”(4)**

என்னும் வரிகளின் வாயிலாக (3)

மணவாள மாமுனிகளும் உபதேசரத்தின மாலையில் தெளிவுபடுத்தியுள்ளார். இப்படிப் பலருடைய புகழுரைகளை எடுத்துரைத்து பெரியாழ்வாரின் பண்பு நலன்களுக்குப் பட்டை தீட்டுகின்றனார். சுப்புரெட்டியார் அவர்கள்.

பல்லாண்டு பாடுதலை “மங்களாசாசனம்” எனக் கூறுதல் வைணவ மரபு, மங்களம் - நன்மை, ஆசாசனம் - விரும்புதல், அதாவது, மங்களாசாசனம் என்பதற்கு நன்மைகளை விரும்புதல் என்று பொருள்.

உலகில் உள்ள மக்களைப் பெரியாழ்வார்,

1. செல்வத்தை விரும்புபவர்கள்
2. ஆன்மாநுபவமாகிய கைவல்யத்தை விரும்புபவர்கள்
3. எம்பெருமானுடைய அனுபவத்தை மட்டிலும் விரும்புபவர்கள் என்று மூவகைப் படுத்துவதுடன், இவர்களையும் அழைத்துத் தம்முடன் சேர்த்துக் கொண்டு பல்லாண்டு பாடியுள்ளார்.

மக்களின் உள்ளுணர்வை வைத்து அவர்களை தரம் பிரிப்பது என்பது மிகவும் கடினம். அப்படியிருக்க பெரியார்வார் உலக மக்களை மூன்று வகையாகப் பிரித்து வைத்து உள்ளார் என்பதை சுப்புரெட்டியார் இங்கு விளக்குவதில் இருந்து, அவர் பெரியாழ்வாரைப் பற்றி எந்தளவுக்கு ஆழமாக ஆராய்ந்துள்ளார் என்பது புலனாகின்றது.

இக்கருத்தைப் பொய்கையாழ்வாரின்,

**“எழுவாள் விடைகொள்வார் ஈன்துழா யானை**
**வழுவா வகைநினைத்து வைகல் - தொழுவர்” (5)**

**(முதல் திருவந்-27)**

எனும் பாசுரத்தின் வாயிலாகவும் காண முடிகிறது. மேலும், ஆக்கியோரான பெரியாழ்வார் பெயரை முன்னிட்டு அவரது பிரபந்தம் ஒன்றுக்குப் “பெரியாழ்வார் திருமொழி” என்றே பெயர் வழங்குகிறது.

**பக்திநெறிக் கவிஞர் :**

எம்பெருமான் தன் அடியார்களுக்கு வழங்கும் வீட்டுலகம் பற்றியும் பெரியாழ்வார் குறிப்பிடுகிறார். பெரியாழ்வார் திருமொழியில் பக்திநெறியின் சிறப்பினை விளக்கும் பாங்கில்,

**“நாடும் நகரமும் நன்கறிய நமோராநாயணாய வென்று**
**பாடும் மனமுடைப் பத்தருள்ளீர்! வந்து பல்லாண்டு கூறுமினே”(6)**

எனும் ஒரு திருமொழி அமைந்துள்ளது. இதில் பக்தராய் இறந்தார் பெறும் பேற்றை ஆழ்வார் பல்வேறு பாங்கில் விளக்குகின்றார். இறைவனின் பன்னிரு திருநாமங்களான, கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விட்டுணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமணன், சரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் எனும் பெயர்களை வாய்விட்டு சொன்னாலே பல நன்மைகளை அடையலாம் என்கிறார் பெரியாழ்வார் அவர்கள்,

பக்தியின் பெருமையைப் பற்றிப் பாரதியார்,

**பக்தியினாலே - இந்தப்**
**பாரினி லெய்திடும்**
**மேன்மைகள் கேளடீ!**
**சித்தந் தெளியும் - இங்கு**
**செய்கை அனைத்திலும்**
**செம்மை பிறந்திடும் (7)**

என்று கூறுகிறார்.

"தீண்டாவழும்பும் செந்நீரும் சீயுநரம்புஞ் செறி தசையும், வேண்டா நாற்றமிகும் உலை" என்று திவ்ய கவியின் பாசுரப்படி பற்பல நிலைகட்டுக் காரணமாக இருக்கும் இந்த உடம்பின் வேதனைக் கனத்தினால் மயக்கமுற்று மரணமடைவதற்கு முன் வாயினால் எட்டெழுத்து மந்திரத்தை அறுசந்தித்துக் கொண்டு தலைமேல் கைகூப்பித் தொழுபவர்கள் பரமபதம் போய்ச் சேர்வார்கள் என்பதில் ஐயமில்லை என்கிறார்.

மேலும் பெரியாழ்வார், நாராயண நாமத்தைச் சொல்லாத நாளே எனக்குப் பட்டினி நாள் என்றும் கூறுகிறார். இவ்வாறு பல தத்துவக் கருத்துக்களைப் பாடியுள்ள ஆழ்வார், ஒரு பக்தராக, பக்தி நெறிக்

கவிஞராகவே உயர்ந்து நிற்கிறார் என்று சுப்புரெட்டியார் அவர்கள் உள்ளம் மகிழ குறிப்பிடுகின்றார்.

**ஸ்ரீ ஆண்டாள் :**

விஷ்ணு சித்தருக்கு மக்கட்பேறு ஏற்படவில்லை, அதைப்பற்றி அவர் கவலை கொண்டதாகவும் தெரியவில்லை. ஒரு நாள் பூக் கொய்வதற்காக அதிகாலையில் நந்தவனத்திற்கு வருகின்றார். பச்சைப் பசேலென்று துளசி செழித்துக் காடாக வளர்ந்திருக்கின்றது. இலைகள் தளதளவென்று பொங்கி தெய்வமணம் வீசுகின்றன.

பச்சைக் கம்பளம் விரித்தாற் போல் இருந்த புல்தரையைத் தாண்டி அவர் செறிந்து வளர்ந்து இருக்கும் துளசிச் செடி அருகில் ஓர் இளங்குழவி தென்படுகின்றது.

"இயற்கை அழகுகளுக்கிடையே இயற்கைத் தாய் இப்படி வடிவங்கொண்டாளோ?" என்றும் 'பெரிய பிராட்டியாரே தம் செந்தாமரைக் கோயிலிருந்து வெளியிடப்பட்டு இப்படி நாம் பார்க்கும் ஒரு குழந்தை வடிவம் கொண்டாரோ? என்றும் பெரியாழ்வார் வியப்பெய்துகிறார்.

மேலும் என் சிறு குடிலுக்கு எம்பெருமான் அனுப்பிய அருளின் சோதி இது என்று, குழந்தையை எடுத்து, மார்போடு அணைத்து முத்தமிடுகின்றார்.

"எம்பெருமானுக்கு இன்று நந்தவனத்தில் கிடைத்த தெய்வமலர் இது,!" என்று தனக்குள்ளே கூறி கொண்டு இல்லத்தை அடைகிறார்.

குழந்தை கிடைத்த விதத்தை பெரியாழ்வார் தம் மனைவி விரஜையிடம் சொல்லச் சொல்ல அவளுடைய பக்தியும் அதிகரிக்கின்றது. இருவரும் அந்தக் குழந்தைக்குக் "கோதை" என்று திருநாமம் சூட்டி வளர்த்தனர்.

இறுதியாக ஆண்டாளை இறைவனுக்கே மணம் முடித்து வைத்து பெருமாளுக்கே மாமனார் ஆகும் பாக்கியத்தைப் பெரியாழ்வார் பெற்றார். வேறு யாருக்கும் கிடைக்காத பெருமைக்குரியவரும் இவரே, என்று சுப்புரெட்டியார்,

பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள் மற்றும் இறைவன் அளித்த வரப்பிரசாதமான ஆண்டாளைப் பற்றியும் அக்கோதையினால் ஆழ்வார் அவர்கள் பெற்றபேறு பற்றியும் தெளிவாக குறிப்பிடுகின்றார்.

**ஆழ்வார் வாக்கு அருள்வாக்கு :**

இறைவனைச் சரணடைய நினைத்தார் ஆழ்வார் அவர்களுக்கு ஒருவேளை ஐந்து பொறிகளும் புலன் உணர்வுகளும் செயலற்றுப் போகும்போது இறைவனை நினைக்க முடியாமல் போய்விட்டால் என்ன செய்வது என்கிற சிந்தனை வருகின்றது. அப்போது வாய்மொழிக்குத் தூய்மை இல்லாமையால் உன்னைத் துதிக்க அருகதை இல்லாதவனாக உள்ளேன். இருப்பினும் என் நாக்கு உன்னையன்றி வேறு ஒருவரை அறியாது என்கிறார். அதனை,

**"வாக்குத் தூய்மை இலாமையினாலே**
**மாதவா! உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்**
**நாக்கு நின்னையல்லால் அறியாது**
**நானது அஞ்சுவன் என்வசம் அன்று" (8)**

எனும் பாடல் வரிகளில் பெரியாழ்வார் குறிப்பிட்டு அஞ்சுகின்றார். மேலும்

திருமாலிஞ்சோலை, திருப்பதி, திருவரங்கம் ஆகிய இடங்களில் இறைவனை பாடிப்பரவசம் அடைந்தவர் பெரியாழ்வார் அவர்கள்.

இவ்வாறாக பெரியாழ்வார் மனமோ அஞ்சி இறைவனை சரணடைய சுப்புரெட்டியாரோ பல்லாண்டு பாடிய பட்டர் பிரானின் அருள்வாக்கினை எண்ணி வியக்கிறார்.

தீமையைவென்று உலகை காட்டுபவன் எவனோ அவனே பல்லாண்டு நின்று உலகை காத்தருள வேண்டும் எனவே ஒன்றின் முடிவில் ஒன்றின் தொடக்கம் இருக்கிறது. அழிவு – அதர்மத்துக்கு, தொடக்கம் - தர்மத்துக்குத் திவ்ய பிரபந்தத்தின் முதல் கருத்தே இப்படி அமைந்து பிரபந்தம் முழுவதற்குமான ஆழ்பொருளை அறிவிக்கிறது.

**“உண்டோ திருப்பல்லாண்டுக்(கு)**
**ஒப்பதோர் கலைதான்?**
**உண்டோ பெரியாழ்வார்க்(கு)**
**ஒப்ப ஒருவர்?” (9)**

என்று வைணவ உலகம் இன்றும் பல்லாண்டு பாடிய பட்டர் பிரானை வியந்து பாராட்டுகின்றது போன்றுகின்றது.

மேலும், விஷ்ணு சித்தர் அவர்கள், அவர்தம் கவிப்புலத்தாலும் பக்தி நெறியின் காரணமாகவும்

**பெரியாழ்வார்**
**பட்டர் பிரான்**
**ஸ்ரீவில்லிப்புத்தூர்கோன்**
**கிழியறுத்தான்**
**புதுவைக்கோன்**

எனும் பல பட்டப் பெயர்களையும் பெற்றுத் திகழ்கிறார்.

இறைவனுக்கே கண்ணேறு கழித்த உன்னதர் பெரியாழ்வார். ஆண்டாளின் தந்தையாகப் போற்றப்பட்டுவர் பெரியாழ்வார், பல்லாண்டு பாடிய பட்டர்பிரான், இத்தகைய அரும்பெரும் செயல்களைச் செய்த பெரியாழ்வாரைப் பற்றித் தேசிகர், பெரியவச்சான் பிள்ளை, போன்ற பல உரையாசிரியர்கள் கூறியிருப்பினும் முனைவர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பெரியாழ்வாரைப் பற்றி மிகவும், அழகாகவும், துல்லியமாகவும் தெளிவாகவும், சிறப்பித்து எடுத்துரைத்து உலகோர் பலரையும் பெரியாழ்வாரின் பக்கம் திரும்பிப்பார்க்க வைத்துள்ளார்.

இத்தகைய அரும்பெருஞ்செயல்களைச் செய்த விஷ்ணு சித்தர், எண்பத்தைந்து திருநட்சத்திரங்கள் வாழ்ந்தவர் என்பதைக் குருபரம்பரைகளைக் கொண்டு நிறுவுகிறார்.

இத்தகைய செய்திகளின் வாயிலாக டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எங்ஙனம் பெரியாழ்வாரின் வாழ்வையும், அவரின் சிறப்புகளையும் பற்றி எடுத்தியம்பியுள்ளார் என்பதை இவ்வியலின் மூலம் அறிய முடிகின்றது.

**சான்றெண் விளக்கம் :**


1. முனை.இரா.வ.கமலக்கண்ணன் - பெரியாழ்வார் திருமொழி - பா.எண் :300

2. பேரா.டாக்டர் ந.சுப்புரெட்டியார் - விட்டு சித்தன் விரித்த தமிழ் - ப.எண் : 17

3. முனைவர் இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பா.எண்.1

4. மணவாள மாமுனிகள் - உபதேச ரத்தினமாலை - பா.எண் : 19

5. முனைவர் இரா.வ.கமலக்கண்ணன்- நாலாயிர திவ்வியப் பிரபந்தம்- பா.எண் : 27

6. முனைவர் இரா.கமலக்கண்ணன் -நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பா.எண்.4(3.4)

7. பாரதியார் - பாரதியார் கவிதைகள் - ப.எண் : 190

8. ஆழ்வார்கள் விழாமலர் - ப.எண் : 190

9. பேரா.டாக்டர் ந.சுப்புரெட்டியார் - விட்டு சித்தன் விரித்த தமிழ் - ப.எண் : 40

## சுப்புரெட்டியார் காட்டும் பெரியாழ்வாரின் கண்ணன்.

சுப்புரெட்டியார் பெரியாழ்வார் மீது பற்றுக்கொண்டமைக்கும் 'கண்ணன் துதி' என்னும் நூல் இயற்றவும் உறுதுணையாக நின்றவர் ராய.சொக்கலிங்கம் அவர்கள் காரைக்குடியில் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சுப்புரெட்டியார் அவர்கள் பணியாற்றிய காலத்தில் (1950-1960) 'சிவமணி' 'சிவம் பெருக்கும் சீலர்' தமிழ்க்கடல் ராய.சொக்கலிங்கம் அவர்களிடம் நெருங்கிய நட்புக் கொண்டிருந்தார்.

சொக்கலிங்கம் அவர்களின் தோழமையால் சுப்புரெட்டியாரின் தமிழறிவு மெருகு ஏறப்பெற்றது. காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் சனிக்கிழமை தோறும் சில ஆண்டுகள் பாரதத்தை விரித்து விளக்கம் செய்தனர். அதில் திரு.திருநாவுக்கரசு அவர்கள் பாடல்களை இசையுடன் படிக்க ராய.சொக்கலிங்கம் அவர்களின் விளக்கம் தொடர்ந்து நடைபெற்றது.

கண்ணன் துதியாக வரும் பாடல்களை இசையுடன் படிக்கும் போதும் விளக்கம் பெறும்போதும் கேட்போர் கரம் குவித்துச் சிரந்தாழ்த்தி ஆனந்தக் கண்ணீர் பொங்க நெஞ்சுருகி நிற்பதைக் கண்டார் சுப்புரெட்டியார் அவர்கள் சில பாடல்கள் ஆழ்வார் பாசுரங்களையும் விஞ்சி நிற்பதையும் கண்டார்.

கண்ணன் துதியாக வரும் பாடல்களைத் தொகுத்து உரைக்குறிப்பு வெளியிட்டால் பக்தர்களுக்குப் பெருவிருந்தாக அமையும் என்ற அவருடைய கருத்தை சொக்கலிங்கம் அவர்களிடம் சொல்ல அவரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றார்.

அவ்வாறாக அவரால் வெளிவந்ததே "கண்ணன் துதி" என்னும் நூலாகும் இதன் மூலம் சுப்புரெட்டியாருக்கும் கண்ணன் மீது இருந்த அன்பையும் ஈடுபாட்டையும் நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது.

திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்று தான் இந்தக் கண்ணன் எனும் கிரு்‘ணாவதாரம். இக்கண்ணன் மீது அளவு கடந்த அன்பு கொண்ட பக்தராக விளங்கியவர் ‘பெரியாழ்வார்’ அன்பும், பாசமும், பரிவும், கவிதைத்திறமும், காதலும் கொண்டு கண்ணனை குழந்தையாகப் பாவித்து அனுபவித்து பாடல்கள் பல பாடியுள்ளார். அவ்வகையில் பெரியாழ்வார் கண்ணனை எந்தெந்த வகையில் அனுபவித்து மகிழ்ந்துள்ளார் என்பதை சுப்புரெட்டியாரின் வாயிலாக இவ்வியலில் அறியலாம்.

**பிள்ளைப் பெருமாள் அவதாரம் :**

ஸ்ரீவல்லப பாண்டியனின் குருவாகவும் அமைச்சராகவும் இருந்தவர் செல்வநம்பி. இவர் பெரியாழ்வாரின் நெருங்கிய தோழர். செல்வநம்பியின் ஊர் திருக்கோட்டியூர்.

ஒரு நாள் செல்வநம்பியை பார்ப்பதற்கு திருக்கோட்டியூர் வருகிறார் வி‘ணு சித்தர். இங்கு கோயில் கொண்டிருக்கும் சௌமிய நாராயண மூர்த்தியை தரிசித்துக் கொண்டிருக்கும் போது, அந்த திவ்ய மங்கள விக்கிரகம் கிரு்‘ணாவதாரத்தை நினைவூட்டுவதாகத் தோன்றுகிறது வி‘ணு சித்தருக்கு.

இவர் மனக்கண்ணுக்கு அந்தத் திருக்கோயில் நந்தகோபன் மாளிகையாகவும் அவ்வூர் ஆயர்பாடியாகவும் மாறிவிடுகின்றன. பெரியாழ்வாரின் திருஉள்ளத்தில் நின்றும், இருந்தும், நடந்தும், கூத்தாடியும் கோலம் காட்டும் சௌமிய நாராயணன் ஆயர்கட்கும் ஆய்ச்சியர்களுக்கும் இடையே குழந்தைக் கண்ணனாக நேர் காட்சி தருகின்றான். இதைப் பெரியாழ்வர் கண்ணனின் பிறந்தநாள் காட்சிகளாகக் கண்டு நமக்குக் காட்டுகின்றார்.

எம்பெருமான் தன் அடியார்களிடத்துக் காட்டும் பரிவினுக்குத் தாயின் அன்பை உவமை கூறுவர். இம்மரபுக்கு மாறாகப் பக்தன் தன்னைப் பரிவுடையதாகவும் இறைவனைத் - தன் அன்பினைச் சொரிந்து வளர்க்கும் சேயாகவும் காண்பது புதுமை ஆகும். அவ்வகையில் பாவனையினால் காலத்தால் பிற்பட்டவரான அவர், அவன் பிறந்து வளர்ந்த அந்தக் காலத்திற்கே சென்றார்.

சௌமிய நாராயணன் நந்தகோபன் திருமாளிகையில் கிரு்‘ணனாக அவதரிக்கின்றான். இது திருவாய்ப்பாடியில் உள்ளவருக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. அம்மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடுகின்றது. இதனால் அவர்கள் ஓடுகின்றார். ஓடும் போதே விழுகின்றனர். ஒரே அவசரம்! ஆனந்தம்! ஆரவாரம்..! சிலர் பல்வேறு இசைக்கருவிகளை இயக்கி தங்களது மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர்.

இவ்வாறாக ஆனந்தம் அதிகரித்து அவர்களது அறிவையும் தடுமாறச் செய்கின்றது. எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் ஒருவர் மேல் ஒருவர் தூவிக் கொள்ளவே, அவை கீழே விழுந்து ஒன்று சேர்ந்து அந்தத் திருமாளிகை முற்றும் முழுவதையும் சேறுமயமாக மாற்றிவிடுகிறது என்பதை

**எண்ணெய் சுண்ணம்**

**எதிர் எதிர் தூவிட**

**கண்ணன் முற்றம்**

**கலந்து அளறும் ஆயிற்றே”(1)**

எனும் பாடல்வரி மூலமாகவும், சிலர் நெய்யையும் பாலையும் தயிரையும் உறிகளோடு அறுத்துக் கொண்டுவந்து, வருகின்றவர்கள் போகின்றவர்களுக்கெல்லாம் வாரிவாரி வழங்கி அந்த அடுக்குச் சட்டிகளை உருட்டி நின்று தலைகால் தெரியாமல் நடனம் ஆடுகின்றனர். என்பதை,

**“உறியை முற்றத்து உருட்டிநின்(று) ஆடுவார்**

**நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்**

**செறிமென் கூந்தல் அவிழத் திளைத்(து) எங்கும்**

**அறிவ ழிந்தனர் ஆயப்பாடி ஆயரே”(2)**

எனும் பாடல் மூலமாகவும் அறியலாம். இப்படி ஆயப்பாடி ஏதோ ஒரு சிறப்பாக அன்புச் சூழலில் அகப்பட்டது போல் கிறுகிறுத்துப் போய்விடுகின்றது. குழந்தை பிறந்ததற்கு வாழ்த்துச் சொல்ல வேண்டும் என்ற ஆர்வத்தால் புகுவாரும். வெளியில் வருவாருமாகப் பெருங்கூட்டம் நந்தகோபர் திருமாளிகையில் திரளுகின்றதை பெரியாழ்வார் மூலமாக சுப்புரெட்டியார் அனைவருக்கும் காட்சிப்படுத்துகின்றார்.

ஒரு நாள் கண்ணனுடைய தயார் யசோதை பிராட்டி கண்ணனை நீராட்டும் போது வழக்கப்படியே, குழந்தையின் கையையும், காலையும் மெல்ல நீட்டி நிமிர்த்து, சிறு மஞ்சளைப் பூசினாள். பச்சிலைகளையும், வாசனைப் பொருள்களையும் சேர்த்துக் காய்ச்சின நீரைக் கொண்டு நீராட்டினாள். அப்போது அக்குழந்தையின் திறந்த வாயிலே உலகம் ஏழினையும் கண்டாள். இதனை,

**“ஐயநா வழித்தாளுக்கு அங்காந்திட**

**வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே”(3)**

எனும் பாடல் வரிகளின் மூலம் அறியலாம். பின்னர், பிறந்த குழந்தைக்கு 10 நாளிலோ அல்லது 12 நாளிலோ பெயரிட வேண்டும் என்பது மரபு. குழந்தை பிறந்த 12-ம் நாள் அக்குழந்தைக்குக் ‘கிரு‘ணன்’ என்று திருநாமம் சூட்டப்பட்டது. ஆனந்தம் பொங்கி வழியும் அவ்விடத்தில் யசோதை தம் தோழிமாரிடம் ஒரு குற்றப்பத்திரிக்கை படிக்கின்றாள்.

**“கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்**
**எடுத்துக் கொள்ளில், மருங்கை யிறுத்திடும்**
**ஒடுக்கிப் புல்கில், உதரத்தைப் பாய்ந்திடும்**
**மிடுக்கி லாமையில் நான்மெலிந்தேன். நங்காய்! (4)**

அதாவது, இப்பிள்ளையை தொட்டிலில் கிடத்தினால் அத்தொட்டில் கிழிந்து விடும்படி உதைக்கிறான். அக்கால்களுக்கு வலிக்குமே என்று எண்ணி இவனை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டால், அந்த இடுப்பை நழுவி முறித்து விடுகின்றான். இதனால் இக்குழந்தைக்கு நோவுண்டாகுமே என்று மார்பிலே தழுவிக் கொண்டால் கால்களால் வயிற்றை உதைக்கிறான். இப்படி இவன் தன்னுடைய பருவத்திற்குத் தகாத செயல்களைச் செய்வதை நினைத்து, நினைத்து நான் மிகவும் இளைத்து விட்டேன் என்கிறாள்.

பிறகு கிரு'ணாநுபவத்தில் ஈடுபடும் பெரியாழ்வார், அந்தக் குழந்தையின் திருமேனியழகைத் திருவடி முதல் திருமுடி வரை அனுபவிக்கின்றார், யசோதை பிராட்டியின் கண்களாலேயே அவ்வழகை சுப்புரெட்டியாரும் பலவிதமாக அனுபவித்து மகிழ்கின்றார். மற்றப் பெண்களுக்கும் அந்தக் குழந்தையை காட்ட விரும்பிய யசோதை போலவே, பெரியாழ்வாரும் தாம் கண்ட அழியா அழகு என்னும் தத்துவத்தை பிறருக்கும் “காணீர்! காணீர்” என்று காட்ட விரும்புகின்றார்.

யசோதை தானே சொல்லுமாறு பாசுரங்களை அருளிச் செய்தாலும் இடையில் ஆழ்வார் தமது தன்மையும் தோன்றுமாறும் அருளிச் செய்கின்றார்.

**பாதாதி கேசம் :**

ஆழ்வார்கள் அனைவருக்குமே எம்பெருமானின் திருவடி “தேனே மலரும் திருப்பாதம்” ஆகும். இப்படிப்பட்ட தனது திருவடியிலுள்ள தேனைப் பருகுவதற்காகவும், தனது திருவயிற்றில் கிடக்கும் உலகங்களெல்லாம்

உய்ய வேண்டும் என்பதற்காகவும் கண்ணன் தனது திருவடிகளில் ஒன்றை எடுத்து வாயிலே வைத்து சுவை பார்த்துக் கொண்டிருந்தான். இதைக் காணும் யசோதை,

**“பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்**

**பாதக் கமலங்கள் காணீரே!**

**பவள வாயீா் காணீரே!” (5)**

என இக்குழந்தை சுவைத்துண்ணும் இப்பாத கமலங்களைப் பாருங்கள் என்று மற்றவா்களுக்கு காட்டுகின்றாள்.

பின், கால் விரல்களையும், கால்களில் அணிந்து இருக்கும் தண்டையையும்

**“பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்டு**

**உறங்குவான் போலே கிடந்த இப்பிள்ளை**

**மறங்கொள் இரணியன் மாா்பை முன்கண்டான்**

**குறங்கு களைவந்து காணீரே, குவிமுலையீா்! வந்துகாணீரே!” (6)**

முற்காலத்தில் கொடிய இரணியனுடைய மாா்பைப் பிளந்தவன். பூதனையினுடைய முலையைச் சுவைத்துப் பாலுண்பவன்போல் அவளுடைய உயிரையும் உண்டவன். இப்போது இங்கு ஒன்றுமரியாதவன் போல் உறங்குகின்ற இவனுடைய திருத்துடைகளை வந்து பாருங்கள் என்கின்றாள்.

பின் யசோதை பிராட்டியின் கவனம் இடையழகுக்கும் இடையிலுள்ள ஆபரணங்களின் அழகுக்கும் செல்லுகின்றது.

**“இருங்கை மதகளிறு ஈா்க்கின்றவனை**

**பருங்கிப் பறித்துக் கொண்டோடுபர மன்தன்”(7)**

இவன் குவலயாபீடம் என்ற யானையின் கொம்புகளைப் பறித்து யானையினையும், பாகனையும் கொன்று, கம்சன் இருக்கும் இடத்தைத் தேடிக்கொண்டு ஓடின பரமபுருடன். பவளவடமும் அழகிய அரை நாணும் முத்துவடமும் சேர்ந்த இவனுடைய இடை அழகை காணுங்கள் என்று கூறி அழைக்கின்றாள்.

அடுத்துத் திருவுந்தியின் மீது கவனம் சென்று. அதனைச் சிறப்பித்துப் பின் திருத்தோள்களின் மீது கவனம் சென்று, திருக்கைத் தலங்களுக்கு கவனம் செல்கிறது.

**"மைத்தடங் கன்னி அசோதை வளர்க்கின்ற**
**செய்தலை நீல நிறத்துச் சிறுபிள்ளை**
**நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய**
**கைத்தலங் கள்வந்து காணீரே!**
**கனங்குழை யீர்! வந்து காணீரே! (8)**

கருத்திருக்கின்ற பெரிய கண்களை உடைய யசோதை, பிறரிடம் கொடுக்காமல் தானே வளர்க்கிற, கருநெய்தல் பூப்போன்ற நிறத்தை உடைய சிறுபிள்ளையாகிய இவனது சக்கரமும், சங்கும், பொருந்தி விளங்குகின்ற திருக்கைகளினுடைய அழகை வந்து பாருங்கள் பெண்களே! என்று அழைக்கின்றாள்.

அடுத்தது, கைத்தலங்களிலிருந்து கண்டத்திற்கு வருகின்றாள்.

**'அண்டர் அண்டபகிர் அண்டத்தொரு மாநிலம்**
**எழுமால் வரை முற்றும்**
**உண்ட கண்டங்கண் டீரடியேனை யுய்யக்கொண்டதே"**(9)

என்று அமலனாதிபிரானில் திருப்பாணாழ்வார் மங்களாசாசனம் செய்த கண்டம் அல்லவா? என்று சுப்புரெட்டியார் மிக அழகாக எடுத்தியம்பியுள்ளார்.

**“அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய**

**கண்டம் இருந்தவா காணீரே!”**(10)

பிரயை காலத்தில் அண்டங்களையெல்லாம் ஒரு சேர விழுங்கிய கண்டத்தை வந்து காணுங்கள் என்கிறார் யசோதை கண்டத்திலிருந்து திருவாய்க்குச் சென்று, அவனுடைய குரல், திருக்கண்கள், திருப்பவளம் துடித்தல், புன்முறுவல், மூக்கு இவற்றின் மீது கவனம் செல்லுகின்றது.

**“கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து**

**செவ்வரி, யோடி நீண்டவளப்**

**பெரிய வாய கண்கள் என்னைப் பேதைமை**

**செய்தனவே”**(11)

என்று திருப்பாணாழ்வாரும் திருக்கண்களை மங்களாசாசனம் செய்து உள்ளார்.

கண்களிலிருந்து புருவத்திற்கும், புருவத்திலிருந்து செவியிலுள்ள மகர குண்டலங்களுக்கும், பின்னர் யசோதையின் கவனம் திருநெற்றிக்கும் தாவுகின்றது.

இறுதியாக யசோதையின் ஈடுபாடு திருக்குழலின் மீது செல்லுகின்றது.

**“அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு**

**கழல்கள் சதங்கை கலந்தெங்கும் ஆர்ப்ப**

**மழகன்று இனங்கள் மறித்துத் திரிவான்**

**குழல்கள் இருந்தவா காணீரே!”** (12)

அவன் தலையில் உள்ள திருக்குழல்கள் அசைந்து அலைந்து விளங்கும். இவற்றின் அழகினை வந்து கண்டு அனுபவியுங்கள் என்கிறாள் யசோதை பிராட்டி இவ்வாறாகப் பெரியாழ்வார் நம் கண்ண பிரானைப் பாதாதி கேசமாக

யசோதையின் வாயிலாக தம் கண்ணாறக் கண்டு அனுபவித்த திறத்தை, சுப்புரெட்டியார் அவர்கள் தம் மனதாறக் கண்டு அனுபவித்துள்ளார் என்பதை அவருடைய அழகிய வரிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**அழகு :**

அழகு என்பது ஒரு தத்துவம். உலகில் அழகுக்கு ஒரு வரையறை காண்பது என்பது முடியாத காரியம். இந்த அழகு, காதலர்களை ஒருவர்பால் மற்றொரு வரை ஈர்க்கும் தன்மையது என்பதை நாம் அறிவோம்.

ஆனால், பக்தர்கள் இறைவன் மீது கொண்டிருக்கும் இவ்வழகினை சொல்லும் தரமன்று. அழகிய மணவாளனின் ஒவ்வொரு உறுப்பின் அழகிலும் ஈடுபட்டுப் பேசும் திருப்பாணழ்வார்,

**"அண்டர்கோன் அணியரங்**
**கன்என் அமுதினைக்**
**கண்ட கண்கள்**
**மற்றொன்றினைக் காணாவே"(**13)

என்று சிறப்பித்துள்ளார். நம்மாழ்வார் திருமாலிருஞ் சோலைமலை அழகரின் மீது திருமேனி அழகில் ஈடுபட்ட திறம் தனிச்சிறப்பு வாய்ந்தது. கற்பகத்தரு கப்பும் கிளையுமாகப் பணைத்துப் பூத்தாற்போலே நிற்கின்றான் எம்பெருமான் அவனது அழகு வெள்ளம் அலைமோதி ஆழ்வார்மீது பாய்கின்றது. எம்பெருமானை நோக்கி வினவுகின்றார்.

**'முடிச்சோதி யாய்உனது**
**முகச்சோதி மலர்ந்ததுவோ?**
**அடிச்சோதி நீ நின்ற**
**தாமரையாய் அலர்ந்ததுவோ?'**(14)

பிள்ளைப் பெருமாளின் பிறப்பை பாரதியாரும்,

> **'கண்ணன் பிறந்தான் - எங்கள்**
> **கண்ணன் பிறந்தான் - இந்தக்**
> **காற்றதை யெட்டுத் திசையிலுங் கூறிடும்**
> **திண்ண முடையான் - மணி**
> **வண்ண முடையான்'**(15)

என்று குதூகலத்துடன் பேசி மகிழ்கின்றார்.

**பிள்ளைப் பெருமானின் வளர்ச்சி நிலைகள் :**

பிள்ளைப் பெருமாள் உண்மையிலேயே இந்தியாவின் செல்வக்களஞ்சியம் - இவ்வுலகின் கலி தீர்த்து ஏற்றம் புரியவந்த பிள்ளைக் கனியமுது. அவனை ஊரார் மெச்சிப் புகழும்போது எல்லாம் மேனி சிலிர்ப்பதாக உள்ளது என்று ஆசிரியர் பிள்ளைப் பெருமானின் வளர்ச்சி நிலைகளைப் பற்றிக் கூறுகிறார்.

அன்பு தருவதில் அவனுக்கு நேர் அவனே. இப்படிப் பல்வேறு விதமாக யசோதைக்கு இன்பம் தந்து வந்தவன் பிள்ளை பெருமாள். இவனது வளர்ச்சி நிலைகளில் பல்வேறு நிகழ்ச்சிகளை அனுபவித்து மகிழ்ந்தவள் யசோதைப் பிராட்டி இவற்றைப் பெரியாழ்வார் கண்டு அனுபவித்ததை நாமும் அனுசந்தித்து மகிழ்வோம்.

**தொட்டில் பருவம் :**

குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி, சில சமயம் தூளியிலும் போட்டு, தாலாட்டினமையை அவளைப் போலவே ஆழ்வார் தாமும் அனுபவித்துப் பேசுகின்றார். இதனைத் தாலாட்டு எனவும் அழைப்பர். இதனை குழந்தை பிறந்து 8 மாதத்தில் பாடுவது இலக்கணமாகும். தால் - நாக்கு, நாவை அசைத்துப் பாடுவதால் தாலாட்டு எனப்பட்டது.

**‘மாணிக்கம் கட்டி வயிரம் இடைக்கட்டி**
**ஆணிப்பொன் னால்செய்த வண்ணச் சிறுதொட்டில்**
**பேணி உனக்குப் பிரமன்விடுதந்தான்**
**மாணிக் குறளனே! தாலேலோ!**
**வையம் அளந்தானே தாலேலோ!’’** (16)

என்று யசோதை நிலையில் தன்னைப் பாவித்துக் கொண்டு தாலாட்டுகிறார் ஆழ்வார்.

**தவழும் பருவம் :**

தொட்டில் பருவம் கழிந்து, தவழ்ந்து விளையாடும் பருவம் வந்தது கண்ணனுக்கு. ஒரு நாள் அவன் வீட்டின் முன்புறத்தில் தவிழ்ந்து வ்நது புழுதியில் விளையாடினான். அப்போது சந்திரனை அழைத்தான். இதைக்கண்ட யசோதை கண்ணனின் மகிழ்ச்சிக்காகத் தானும் சந்திரனைப் பலமுறை அழைத்தமையை இவ்வாழ்வார் தாமும் தம்மை யசோதை பிராட்டியாக நினைத்து தன் எதிரே நடப்பது போலவே அனுபவித்துப் பாடுகின்றார். என்பதை,

**‘‘என் சிறுக்குட்டன் எனக்கோர் இன்னமுது எம்பிரான்**
**தன் சிறுக்சைகளால் காட்டிக் காட்டி யழைக்கின்றான்**
**அஞ்சன வண்ணனோ பாடல் ஆட வுறுதியேல்**
**மஞ்சில் மறையாதே மாமதீ! முகிழ்ந்தோடிவா’’** (17)

எனும் பாடல் வரிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. அதாவது, குளிர்ச்சி, அழகு ஆகிய இவற்றால் பெரியவனான சந்திரனே! என் சிறிய மகனும், எனக்கு இனிய அமுதம் போல இனிப்பவனும், எங்களுக்கு உதவி செய்பவனுமான இவன், தன்னுடைய சிறிய கைகளால் பலமுறை உன்னையே சுட்டிக்காட்டி அழைக்கிறான். இவனோடு விளையாட

விரும்பினால் மேகத்தில் மறையாமல் வந்து குழந்தையின் கண்ணில் தென்படுவாயாக என்று யசோதை பிராட்டி அழைக்கின்றாள். இப்பருவம் 'அம்புலிப் பருவம்' என வழங்கப் பெறும்.

"நிலா நிலா ஓடிவா! நில்லாமல் ஓடிவா" என்று கையால் சந்திரனை அழைத்தும், வரக் காணாமையால் 'அழகில் தன்னோடு ஒப்பான் எவரும் இல்லை' என்ற செருக்கினால் வாராதிருக்கிறான் எனக் கருதி அவன் செருக்கு அடங்கப் பேசுகிறாள்.

சந்திரா, நீ இப்போது தேய்வதும், வளர்வதுமாக உள்ளாய், களங்கமும் உன்னில் உண்டு, இப்படியில்லாமல் நீ எப்போதும் முழுமதியாக திகழ்ந்தாலும் என் சிறிய, கண்ணனுடைய அழகிற்கு ஒப்பாகமாட்டாய். அவன் உன்னை அழைப்பதை பெரும்பேறாக நினைத்து ஓடி வா என்கிறாள் யசோதை.

**செங்கீரைப் பருவம் :**

இளமைப் பருவத்து விளையாடல்களில் செங்கீரையாடுவது என்பதும் ஒன்று அதாவது குழந்தை தமது இரண்டு கைகளையும் முழந்தாளையும் ஊன்றித் தலையை நிமிர்த்திக் கொண்டு ஆடுவது செங்கீரை ஆகும். இவ்விளையாட்டைக் காண வேண்டுமென்று யசோதை 'எனக்கொருகால் ஆடுக செங்கீரை' ஆடுக! ஆடுக! என்று வேண்டி அதனை அனுபவித்ததுப் போல் பெரியாழ்வார் தாமும் அனுபவித்துப் பேசி மகிழ்கிறார்.

**சப்பாணிக் கொட்டுதல் :**

ஒரு கையோடு மற்றொரு கையையும் சேர்த்துக் கொட்டுதலாகிய விளையாட்டு. சப்பாணி கொட்டுதல் - சகபாணி கொட்டுதல் என்றும், பாணி – கை என்றும் பொருள்படும். அதாவது ஒரு கையோடு மற்றொரு கையைச் சேர்த்து தட்டுதல்.

இவ்விளையாட்டை விளையாண்டக் கண்ணனை கண்டு யாசோதை ஆனந்தமடைகிறாள். அவ்வாறே பெரியாழ்வாரும் இத்திருமொழியில் அனுபவித்து மகிழ்கிறார். இது பிள்ளைத்தமிழில் ‘சப்பாணிப் பருவம்’ என அழைக்கப்படுகிறது.

**தளர்நடை பருவம் :**

தட்டுத்தடுமாறி நடக்குமாறு யசோதை கண்ணனை வேண்டுதல் இப்பருவச் செயல்கள். கண்ணன் தளர்நடை நடக்கும் போது யானை மெல்ல நடந்து வருவதுபோல் இருக்கும். யானை மதத்தின் மிகுதியால் கட்டுத்தறியை முறித்து விட்டுகாலிலிட்ட இரும்புச் சங்கிலியை இழுத்துக் கொண்டு நடக்கும்போது அந்தச் சங்கலித்தொடர் ‘சலார் பிலார்’ என்று ஒலிக்கும். பொன் கயிற்றினால் கட்டித் தனது இருபுறங்களிலும் தொங்க விடப்பெற்ற மணிகள் ஒலிக்கவும் மதநீர் பெருகவும் மெல்ல நடக்கும்.

அதுபோல, பிள்ளைப் பெருமாள் தளர்நடை நடக்கும் போது காலிலணிந்துள்ள சதங்கைகள் கிண்கிணிக்கும், இடையில் கட்டிய சிறுமணிகள் பறைமேல் ஒலிக்கும், நடக்கின்ற ஆயாசத்தினால் உடலில் வேர்வை நீர் பெருகும் என்கிறார்.

இதனை இலக்கியத்தில் ‘வருகைப் பருவம்’ என்றழைப்பர். இவ்வாறாக ஒவ்வொரு பருவம் வாயிலாகவும் பெரியாழ்வாருடன் சுப்புரெட்டியாரும் கண்ணனைக் கண்டு மகிழ்கின்றார்.

**அச்சோ அச்சோ!**

கண்ணன் குழந்தைப் பருவத்துக்குத் தகுதியாக ஓடிவந்து தன்னை அணைத்துக்கொள்ள வேண்டுமென்று யசோதை பிராட்டியிடம் வேண்டுவது. இதனை பெரியாழ்வாரும் அனுபவித்து மகிழ்கிறார் இத்திருமொழியில் அச்சோ

அச்சோ என்பது குழந்தைகள் அன்னையர் இடுப்பில் ஏறுவதற்காக ஓடிவந்து அவர்களைத் தழுவி அனைத்துக் கொள்ளும் இயல்பை வேண்டுவது இது.

அச்சோ என்பது முற்காலத்தில் 'அணைத்துக் கொள்' என்று வேண்டுவதற்கு வழங்கிய குறிப்புச் சொல்லாகும்.

கண்ணன் தன்னை அணைத்துக் கொள்வதை நினைக்கும் போது தோன்றும் பரமானந்தத்தில் மூழ்கி நெஞ்சுருகிச் சொல் இழந்து வாய்விட்டுச் சொல்ல மாட்டாமல் ஒருமுறைக்கு இருமுறை அச்சோ, அச்சோ என்கிறாள் என்றும் கூறலாம்.

நமுசி திரிவிக்ரமனோடு நீண்ட நேரம் வழக்காடி எம்பெருமான் சொன்ன சமாதானங்களைக் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல் உறுதியாக இருக்க, எம்பெருமான் வளர்ந்து திருவடியினால் அவனை ஆகாயத்தில் சுழன்று விழும் படிச் செய்தான் என்ற வரலாற்றை,

**'என்னிது மாயம்? என் அப்பன் அறிந்திலன்**
**முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என்ன**
**மன்னு நமுசியை வானில் சுழற்றிய**
**மின்னு முடியனே! அச்சோ! அச்சோ!**
**வேங்கட வாணனே அச்சோ!'** (18)

எனும் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. இத்தகைய பிரானே! என்னை வந்து அணைக என்கிறார்.

**புறம் புல்குதல் :**

கண்ணன் ஓடிவந்து தன்னை முதுகில் கட்டிக் கொள்வதை யசோதை அக்காலத்தில் விரும்பிக்கூறியது போல, பெரியாழ்வார் தாமும் தம்மை அந்த யசோதையாகவே பாவித்து, தம்முடைய முதுகில் கண்ணன் கட்டிக்

கொள்வதாக மனதில் நினைத்து அனுபவித்து இனியர் ஆகிறார் இத்திருமொழியில்,

**‘விட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க**
**மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தேபோல்**
**சொட்டுச் சொட் டென்னத் துளிக்கத் துளிக்க என்**
**குட்டன்வந் தென்னைப் புறம்புல் குவான்**
**கோவிந்தன் என்னைப் புறம் புல்குவான்’** (19)

எனும் பாடல் வாயிலாக ஆழ்வார், யசோதை பிராட்டி வாயிலாக மகிழ்கின்றார்.

**பிள்ளைத் தமிழ் இலக்கியம் :**

‘பிள்ளைத்தமிழ்’ என்பது பிற்காலத்தே பெருகி எழுந்த ஓர் இலக்கிய வகையாகும்.

**‘குழவி மருங்கினும் கிழவதாகும்’** (20)

என்று இதற்கான அடிக்கூறுகளைத் தொல்காப்பியத்திலேயே காணலாம். பிறப்பு, திருமேனி அழகு, தாலாட்டு, அம்புலி, செங்கீரை, சப்பாணி, தளர்நடை, புறம் புல்கல், அப்பூச்சிக் காட்டல், அம்ம உண்ண வருதல், காதுகுத்தல், நீராட்டல், குழல்வாரல், பூச்சூட்டல், காப்பிடல் என்பன இவர் கொண்ட பிள்ளைப் பருவங்கள் ஆகும்.

இவற்றுள் முதலில் குறித்த பிள்ளைப் பருவக் கூறுகளுள் செங்கீரை, தால், சப்பாணி, அம்புலி ஆகிய சிலவே பிற்காலப் பிள்ளைத் தமிழ் நூல்களில் பருவப் பெயர்களாக அமைந்தன.

**“முன்வந்து நின்று முத்தம் தரும் என்முகில் வண்ணன்”** (21)

என்று பாடும் ஆழ்வார் ‘முத்தம் தா’ என்று ஒரு பாடலை முடித்திருப்பதும் இங்கு கருதத் தக்கது. இது முத்தப் பருவத்துக்குத் தோற்றுவாய் எனலாம். ‘சிற்றில் சிதைத்து எங்கும் தீமை செய்து’ என்னும் வரிகள் சிற்றில் பருவத்துக்கு வித்து எனலாம்.

எவ்வாறாயிருப்பினும், பிற்காலத்தில் எழுந்த இந்த வகை இலக்கியத்திற்கு வித்திட்டவர் வி‘ணு சித்தரே என்பதை நாம் காணும்போது எல்லையற்ற மகிழ்ச்சியை அடைகிறோம். பிள்ளைப் பாட்டின் இலக்கணத்தைப் ‘பன்னிரு பாட்டியல்’

**‘பிள்ளைப் பாட்டே தெள்ளி கிளப்பின்**
**மூன்று முதலா மூவேழ் அளவும்**
**ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே’’** (22)

என்று கூறுகின்றது. பிள்ளைப் பெருமாளின் வளர்ச்சி நிலைகளைப் பல பாசுரங்களைக் கொண்டு பிற்காலப் பிள்ளைத் தமிழ்க் கூறுகளைச் சுவைபட விளக்கிப் பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டவர் வி‘ணுசித்தரே என்று சுப்புரெட்டியார் அறுதியிட்டு உறுதியாகக் கூறுவதிலிருந்து இவர் தம் ஆராய்ச்சித் திறனை அறிய முடிகின்றது.

**கண்ணன் விளைத்த சிறு குறும்புகள் :**

குழந்தைகளின் மழலை மொழி பெற்றோருக்கு இன்பம் தருதல் போல அவர்கள் செய்யும் சிறு குறும்புகளும் இன்பந்தரும். நம் சிறுவர்கள் செய்யும் சிறுகுறும்புகள் பெற்றோருக்கும் மற்றோருக்கும் சிறிது கோபத்தை விளைவித்தாலும் கண்ணன் செய்த சிறுகுறும்புகளை யசோதைப் பிராட்டி அனுபவித்து மகிழ்கின்றாள். பிராட்டியின் வாயிலாக பெரியாழ்வாரும், ஆழ்வாரின் வாயிலாக சுப்புரெட்டியாரும் கண்ணனை அணுவணுவாக ரசித்து மகிழ்கின்றனர்.

கண்ணன் செய்யும் குறும்புகள் பல நிகழ்ச்சிகளைக் கொண்டவை. அவற்றுள் ஒரு நிகழ்ச்சி.

திருவாய்ப்பாடியிலுள்ளார் தம் தயிர், வெண்ணெய், பால் முதலியவற்றைக் கண்ணனுக்கு எட்டாதபடி உயரத்தில் உள்ள உறிகளின் மீது சேமித்து வைப்பர். இதைக் கண்டு கண்ணன் ஒரு பொத்த உரலைத் தேடிக் கண்டுபிடித்து உருட்டிக் கொண்டு வந்து தலைகீழாகக் கவிழ்த்துப் போட்டு அதன் மேலேறி உறியை எட்டி அதிலுள்ளவற்றை விழுங்குவான். இந்நிகழ்ச்சியை வி'ணு சித்தர்.

**“பொத்த வுரலைக் கவிழ்த்து அதன் மேலேறி**
**நித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்**
**மெத்த திருவயி ரார விழுங்கிய**
**அத்தன்”** (23)

என்றும்,

வெண்ணெய்களை எல்லாம் களவு செய்து உண்டு விட்டு பொய்யுறக்கம் கொள்ளும் கண்ணனை,

**‘திண்ணக் கலத்துத் திரையுறிமேல் வைத்த**
**வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும்**
**அண்ணல்”** (24)

என்றும் பெரியாழ்வார் யசோதையின் வாயிலாக, கண்ணன் செய்யும் இச்சிறுக்குறும்புகளில் ஈடுபட்டு அகமகிழ்கின்றார்.

ஓர் ஆய்ச்சியின் குற்றப்பத்திரிக்கை : “அசோதாய் உன் மகன் வீட்டில் வயிறு வளர்ப்பதற்கு ஒன்று மில்லாமல் இவ்வாறு தீம்பு செய்கிறானோ, இங்ஙனம் செய்தால் நம்முடைய ஐசுவரியத்திற்கும் பிறப்புக்கும் தகுமோ? இவன் இப்படி தீம்பு செய்வதே தனக்கும் புகழ் என்று நினைக்கின்றானோ!

இவன் என் வீட்டில் வந்து, உருக்குவதற்காக வைத்திருந்த வெண்ணெயைச் சிறிதும் மிச்சமில்லாமல் புசித்து விட்டு இறுதியில் வெறுங்கலத்தை கீழே போட்டு உருட்டி அதன் ஓசையைக் கேட்டு மகிழ்கிறான். இவன் செய்யும் திருட்டுத் தொழிலையும் தீம்புகளையும் எங்களால் தடுக்க முடியவில்லை. ஆகையால் உம் பிள்ளையை கூவியழைத்து இத்தகைய செயல்களை செய்யாமல் இருக்கச் சொல்லி உன்பக்கத்திலே வைத்துக் கொள்" என்கின்றாள்.

ஆய்ச்சியின் முறையீட்டைக் கேட்ட யசோதை பிராட்டி கண்ணனுடைய நற்குண செயல்களை எடுத்துரைத்து கண்ணா, இங்கே வா என்றழைக்க, ஆய்ச்சி 'நீ இப்படி இவனைப் புகழ்ந்து அழைக்கலாமா? அச்சுறுத்தியன்றோ அழைக்க வேண்டும்'? என்று சொல்ல யசோதை பிராட்டி. அதற்கு 'இவன் எனக்குச் செல்லப்பிள்ளை ஆயிற்றே' என்று கூறி,

**"அரியன் இவனெனக் கின்று. நங்காய்**
**அஞ்சன வண்ணா! அசல கத்தார்**
**பரிபவம் பேசத் தரிக்க கில்லேன்,**
**பாவியேனுக்கு இங்கே போதராயே"** (25)

இவ்வாறு அழைக்கின்றாள். பெரியாழ்வார் கூட இத்தனை அழகாக கூறியிருக்க மாட்டார் என்று எண்ணத்தக்க வகையில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இச்செய்திகளை டாக்டர். சுப்புரெட்டியாரும் கண்ணன் துதியிலும் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய குறும்புகள் மட்டுமல்லாது அவன் செய்த வேறு சில குறும்புகளையும் ஆசிரியர் எடுத்தியம்பியுள்ளார்.

**பாரதியின் கண்ணன் :**

கண்ணன் சிறுவனாக இருந்தபோது சில கட்டெறும்புகளைப் பிடித்துக் கன்றுகளின் காதில் விடுவான். அதனால் அக்கன்றுகள் வெருண்டு சிதறிப்

போய்க் கண்டுபிடிக்க முடியாதபடி ஓடிப்போய் விடும். இதைக் கண்டு கண்ணன் மகிழ்வான்.

இதனைப் பாரதியார் வேறுவிதமாகக் கூறுவார். அதாவது அவர் கண்ணன் ஆறேழு கட்டேறும்புகளை அங்காந்திருக்கும் பெண்களின் வாயில் விட்டு வேடிக்கைப் பார்ப்பான் என்பதை,

**"அங்காந் திருக்கும்வாய் தனிலே – கண்ணன்**
**ஆறேழு கட்டெறும் பைப்போட்டு – விடுவான்!**
**எங்காகிலும் பார்த்த துண்டோ? கண்ணன்**
**எங்களைச் செய்கின்ற வேடிக்கை யொன்றோ"** (26)

எனும் பாடலின் வாயிலாக கூறி மகிழ்கிறார். மேலும் தீராத விளையாட்டுப் பிள்ளையின் தெவிட்டாத விளையாட்டுகளைப் பாரதியார் பட்டியலிட்டும் காட்டுகிறார்.

சில சமயம் எண்ணெய்க் குடத்தை உருட்டி விடுவான். அவர்கள் சிந்திப்போன எண்ணெயை (வழித்துக் கொண்டிருக்கையில்) வழிப்பதற்குள் தொட்டிலில் படுத்து உறங்கும் குழந்தையைத் தேள் கொட்டினாற் போல வீரிட்டுக் கதறியழும் படி வெடுக்கெனக் கிள்ளி விடுவான்.

அவனைச் சூழ்ந்து வரும் பிள்ளைகட்கு அப்பூச்சி காட்டி பயமுறுத்துவான். கண்ணன் கன்றுகளின் வாலில் பனையோலையை கட்டி விட்டு, அப்பனை ஓலையிலிருந்து வரும் ஓசையினால் கன்றுகள் வெருண்டோடுவதைக் கண்டு இன்புறுவான்.

சிறுப்பெண்கள் சிற்றில் அமைத்தும் சிறுசோறு சமைத்தும் மணலில் விளையாடுவார்கள். அவற்றைக் கண்ணன் அழித்துவிட்டு அவர்களை வலுச்சண்டைக்கு இழுப்பான். மேலும் சிறுபெண்கள் கண் திறந்து மணலில்

விளையாட முடியாதபடி அவர்கள் கண்களில் மண்ணைத் தூவுவான். ‘ஏன் தூவுகின்றாய்” என்று அவர்கள் கேட்டால் உடனே அவர்களைக் காலால் உதைப்பான்.

**மகளிர் கூட்டத்தின் முறையீடு :**

நாங்கள் எங்கள் ஆடைகளைக் கரையில் களைந்து வைத்துவிட்டு ஆற்றில் நீராடிக் கொண்டிருந்தோம். அப்போது உங்கள் கண்ணன் அவற்றை வாரி எடுத்துக் கொண்டு வந்து விண்ணை முட்டும் குருந்தமரத்தின் மீது ஏறிக் கொண்டான். நாங்கள் எவ்வளவோ வேண்டியும் அவற்றை எங்களிடம் தந்தருள மறுக்கின்றான்’ என்கின்றனர். அதனை

**‘எல்லே! ஈதுஎன்னை இளமை? எம்மனை மார்காணில் ஒட்டார்**
**பொல்லாங்குஈ தென்று கருதாய் பூங்குருந் தேறி யிருந்து**
**வில்லால் இலங்கை அழித்தாய்! நீ வேண்டியது எல்லாம் தருவோம்**
**பல்லாரும் காணாமே போவோம் பட்டைப் பணிந்தரு ளாயே’’** (27)

எனும் இப்பாடலின் வாயிலாக அறியலாம்.

மேலும் கண்ணன் ஆயப்பாடியில் உள்ள மகளிர் வீடுகளுக்குள் சென்று, அவர்களின் கையில் இருக்கும் வளையல்களைப் பறித்துக் கொண்டு போய், காட்டிலிருந்து நாவற்பழங்களைக் கொணர்ந்து விற்கும் பெண் பிள்ளைகளிடம் வளையல்களைத் தந்து அதற்குப் பதிலாக நல்ல நாவல்ப்பழங்களை பெற்றுக் கொள்வான். இத்தகைய குறும்புகளை எல்லாம் செய்து “குறும்புகளுக்குப் பெயர் போனவன் கண்ணன்” என்றாகிவிட்டான் என்று சுப்புரெட்டியார் குறிப்பிடுகின்றார்.

**கண்ணனின் தீரச் செயல்கள் :**

கிரு‘ண பக்தியில் சிறந்தவராக விளங்கியவர், பெரியாழ்வார். குறிப்பாக கண்ணன் சிறுவனாக இருந்தபொழுது அவன் ஆற்றிய தீரச் செயல்களில்

ஆழங்காற்பட்டு மகிழ்ந்தவர். இத்தகைய தீரச் செயல்கள் சிலவற்றில் நாமும் ஆழங்கால் படுவோம். இத்தீரச் செயல்களை “அதிமாநு‘ய சே‘டிதங்கள்” என்று குறிப்பிடுவர் வைணவப் பெருமக்கள். தமிழர்கள் இதைச் சிறு சேவகங்கள் என்று குறிப்பிடுவர். கண்ணன் செய்த வீரதீரச் செயல்களை எல்லாம் தொகுத்து சுப்புரெட்டியார் அனைவருக்கும் விருந்தளிக்கின்றார்.

**பூதனை மற்றும் சகடாசுரன் வரலாறு :**

கம்சன் ஆகாயவாணி சொன்தைக் கேட்டது முதல் தேவகியின் கருப்பம் பிறந்ததும் அப்போதைக்கப்போது அழித்து வருகின்றான். எம்பெருமானது யோக நித்திரையால் பிறந்த குழந்தையைக் கொல்ல முயன்றபோது, “உன்னைக் கொல்லப் போகிறவன் ஒளித்து வளர்கின்றான்” என்று தேவகி சொல்லியதைக் கேட்டது முதல் கண்ணன் மேல் சினம்கொண்டு அவன் பால் மணம் மாறாத பாலகனாக இருக்கும் போதே அவனைக் கொல்ல பூதனை என்னும் பேய்மகளை (அரக்கியை) ஏவுகின்றான் கம்சன். கண்ணனோ பாலுண்ணும் பாவனையில் அவள் உயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி. உடம்பு நரம்புக் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தான். இதனை,

**‘கள்ளத்தி னால்வந்த**
**பேய்ச்சி முலைஉயிர்**
**தள்ளச் சுவைத்ததனால்’** (28)

என்ற பாசுரத்தினால் அறியலாம்.

இதேபோல், திருவாய்ப்பாடியில் நந்தகோபன் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்தில் கண்ணனை தொட்டிலிட்டுக் கண்வளர்த்தி விட்டு யசோதை யமுனைக்கு நீராடச் சென்றாள். கம்சனால் ஏவப்பெற்ற அசுரன் ஒருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசமாக குழந்தை கண்ணன் மீது விழுந்து

கொல்ல முயன்றதை அறிந்த பகவான் பாலுக்கு அழுகின்ற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டு கீழே விழுந்து அசுரன் உயிர் அழிந்தான், எனும் இந்நிகழ்ச்சியை,

**"கஞ்சன் தன்னால் புணர்க்கப்பட்ட**

**கள்ளச்சகடு கலக்கு அழிய**

**பஞ்சி யன்ன மெல்லடியால்**

**பாய்ந்தபோது நொந்திடும் என்று**

**அஞ்சினேன் காண்!"** (29)

எனும் பாசுரத்தின் வழி குறிப்பிடுகின்றார்.

**மல்லர்களை மாய்த்தது :**

குவலயாபீடம் எனும் யானையையும் பாகனையும்யினுள் கொன்ற கண்ணன் மற்றும் பலராமன் கம்சனின் அரண்மனைக்குள் நுழையும் பொழுது அவர்களை எதிர்த்துக் கொல்லும்படி கம்சனால் ஏவப்பெற்றிருந்த 'சாணூரன், மு்'டிகன்' என்ற மலைபோன்ற இருபெரு மல்லர்கள், சிறுவர்களை உக்கிரமாக எதிர்த்து மலைந்தனர். இச்சிறுவர்கள் இருவரையும் மறப்போரிலே வென்று கொன்றனர் எனும் இந்நிகழ்ச்சியை,

**'இருமலைபோல் எதிர்ந்த மல்லர்**

**இருவர் அங்கம் எரிசெய்தாய்'** (30)

எனும் வரிகளின் வழி அறியலாம்.

**கம்ச வதம் :**

கண்ணனும் பலராமனும் மல்லர்களை முடித்து விட்டு உள்ளே போகும் போது கம்சன் சிறுவர்களை சினங்கொண்டு எதிர்க்கின்றான். சிம்மாதனத்தின் மீது இருவரும் பாய்ந்து அவனது திருமுடியை வீழ்க்கின்றனர். பின்னர்

அவனைத் தரையில் தள்ளி அடித்து நொறுக்கிக் கொன்று விடுகின்றனர். இதனை ஆழ்வார்

**‘கறுத்திட் டெதிர்நின்ற**

**கஞ்சனைக் கொன்றான்’** (31)

எனும் வரியின் மூலம் குறிப்பிடுகின்றார்.

**மருதம் இறுத்தது :**

குழந்தைப் பருவத்தில் கண்ணன் துன்பத்திற்குள்ளாக்கும் பல திருவிளையாடல்களை புரியக் கண்டு சினம்கொண்ட யசோதை, அவனைத் திருவயிற்றிற் கயிற்றினால் கட்டி ஓர் உரலில் பிணித்துவிட்டாள். கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அவன் இருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருள, அவ்வுரல் குறுக்காக நின்று இழுக்கப்பெற்றதனால் அம்மரங்கள் இரண்டும் முறிந்து விழுந்தன. உடனே முன்னொரு காலத்தில் நாரத முனிவரின் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த ‘நளகூபரன், மணிக்கிரீவன்’ எனும் குபேரபுத்திரர்கள் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர் என்பதை வி‘ணுசித்தர்.

**‘பேயின் முலையுண்ட பிள்ளை இவன்முன்னம்**

**மாயச் சகடும் மருதும் இறுத்தவன்’** (32)

எனும் பாசுரத்தில் குறிப்பிடுகின்றார்.

**பகாசுரன் வரலாறு :**

பகாசுரன் என்பவன் கிரு‘ணனைக் கொல்லுமாறு கம்சனால் ஏவப்பெற்ற அசுரர்களில் ஒருவன், இவன் பெரியதொரு கொக்கின் வடிவம் கொண்டு வழக்கமாக கண்ணனும், அவன் தோழர்களும் மாலையில் கன்று காலிகளை ஓட்டிக் கொண்டு வீடு திரும்பும் ஓர் ஒற்றையடிப் பாதையருகில் காத்திருந்தான். அவ்வழியாக வரிசையாக வரும் கன்றுகளை ஒவ்வொன்றாக

விழுங்கிவிட்டான். கண்ணனின் தோழர்களையும் ஒவ்வொருவராகக் கபளீகரம் பண்ணிவிட்டான். இறுதியாக வந்த கண்ணனையும் தம் அலகால் கொத்தி விழுங்கினான். கண்ணன் அசுரன் வயிற்றில் நெருப்பு போல் எரிந்தான். அசுரன் அதனைப் பொறுக்க முடியாமல் கண்ணனை வெளியே உமிழவே அவன் வெளியில் வரும்போது தமது இரு கைகளால் இரு அலகுகளையும் பிடித்துக்கொண்டு வெளியே குதித்துக் கொக்கினை இருகூறாகக் கிழித்து அனைவரையும் விடுவித்தான். இச்செயலை திருமஙகை ஆழ்வார், **'புள்வாய்ப் பிளந்த புனிதா'** என்று அகமகிழ்கின்றனர்.

ஆண்டாளோ திருப்பாவையில்,

**'புள்ளின் வாய்க் கீண்டானைப்**

**பொல்லா அரக்கனை'** (33)

என்று கூறுகின்றாள். **'இகல் கொள் புள்ளைப் பிளந்ததும்'** என்று திருவாய்மொழியில் அனுபவித்தும் மகிழ்கின்றார் நம்மாழ்வார் அவர்கள்

**'பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு**

**கள்க அசுரன் வருவானைத் தான்கண்டு**

**'புள்இது' என்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட**

**பிள்ளை'** (34)

என்று பெரியாழ்வார் இந்நிகழ்வை விரிவாகக் காட்டுகின்றார்.

**வையம் ஏழும் உண்ட வரலாறு :**

ஒரு நாள் கண்ணன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தபோது, கண்ணன் மண்ணைத் தின்றதாக பலராமன் யசோதையிடம் தெரிவிக்கிறான். யசோதைப் பிராட்டி ஓடிப்போய்க் கண்ணனை வாய்க்கொண்டு ஏன் மண்ணைத் தின்றாய்? என்று அச்சுறுத்தினாள். கண்ணனோ "அம்மா நான் மண்ணைத்

தின்னவில்லை, அண்ணன் வேண்டுமென்றே கோள் சொல்லுகின்றான், வேண்டுமென்றால் என்வாயைப் பார்!" என்று வாயைத் திறந்து காட்டினான் கண்ணன். யசோதை அந்த வாய் வழியாகக் கண்ணனின் திருவயிற்றில் வையம் ஏழினையும் கண்டு வியப்புற்றாள். இவன் ஆயர் மகன் அல்லன், கருந்தெய்வம் என்று அறுதியிட்டாள் யசோதை பிராட்டி இந்நிகழ்ச்சியை வி'ணுசித்தர். "ஐய நாவழித் தாளுக்கு அங்காந்தி, வையம் ஏழு கண்டாள் வாயுளே" எனும் பாசுரத்தின் வழி எடுத்துரைக்கின்றார்.

**கன்றினால் விளவெறிந்தது :**

கம்சனால் ஏவப்பெற்ற கவித்தாசுரன் விளாமரத்தின் வடிவாய்க் கன்று மேய்க்கும் கண்ணன் தன் கீழ்வரும் போது அவன்மேல் விழுந்து, கொல்லுவதற்காக வந்து நிற்கின்றான். அவ்வாறே வத்சாசுரன் என்பான் கண்ணனை முட்டிக் கொல்லும் பொருட்டு கன்றின் வடிவமாக வந்து காத்திருக்கின்றான். இதனை நன்கு அறிந்த கண்ணன் அக்கன்றின் கால்களைப் பற்றிச் சுழற்றி விளாமரத்தின் மீது எறிந்து தாக்குகின்றான். இருவரும் சிதைந்து தமது அசுர வடிவத்துடன் விழுந்து மடிகின்றனர். இந்நிகழ்ச்சியினைப் பெரியாழ்வார்,

**'கானக வல்விளவின் காய்உதி ரக்கருதி**

**கன்றது கொண்டெறியும் கருநிற கன்கன்றே!"** (35)

என்று அகமகிழ்கின்றார். மேலும், இச்செய்தியை ஆண்டாளும்,

**'கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி'** (36)

என்று திருப்பாவையில் குறிப்பிட்டள்ளார்.

**சீமாலிகள் வரலாறு :**

மாலிகன் என்பான் கண்ணபிரானின் உயிர்த்தோழனான ஓர் இடையன். மேன்மைப் பொருளைத் தரும் (ஸ்ரீ) என்ற பெயரோடு பொருந்தி நிற்கின்றது.

இவன் கண்ணபிரானிடம் பலவிதமான ஆயுதப் பயிற்சிகளைப் பெற்றவன் ஒருவருக்கும் அஞ்சாமல் தன்முனைப்புக் கொண்டு சாதுசனங்களை இம்சித்திக் கொண்டிருந்தான். இதைக் கேள்வியுற்ற கண்ணன் மிகவும் வருந்தி "நண்பனாகிய இவனைக் கொல்வது தகாது, ஏதாவது செய்தேயாக வேண்டும்" என்றெண்ணி ஒரு நாள் 'நீ இப்படி செய்வது தகாது' என்று அறிவுரை வழங்க, அசுர இயல்புள்ள அந்த மாலிகனும் தன் வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எனக்கு எல்லா ஆயுதங்களையும் கையாளும் முறையைக் கற்பித்தாய், திருவாழிப் பயிற்சியை மட்டிலும் கற்பிக்க வில்லை' என்று கண்ணன் மீது குறை கூற, கண்ணனும் 'இதில் பழகுவது முடியாது, எனக்கே அசாதாரணமானது" என்று சொல்ல, அவனும், என்னால் முடியாததும் ஒன்று உண்டோ? நீ உறுதியாக அப்பயிற்சியை கற்பித்தே ஆக வேண்டும்' என்று கூற கண்ணனும் அவனை அழிக்க இதுதான் சமயம் என்று, தன் சக்கரப்படையை எடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்றிக் காட்டினான்.

மாலிகன் 'இ∴து எனக்கு அரிதாமோ?" என்று அத்திருவாழியை வாங்கி சுழற்றி எறிந்து பிடிப்பதாக நினைத்துக் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்துக்கொண்டு நிற்க, அப்போது அத்திருவாழி சுழல்வதற்கு இடம் போதாமையால் அதன் வீச்சு அவன் கையில் பிடிபடாமல் அவன் தலையை அரிந்து விட்டது என்பது வரலாறு இந்த வரலாற்றை வி'ணு சித்தர்,

**‘சிமாலிகன் அவனோடு**

**தோழமை கொள்ளவும் வல்லாய்**

**சாமா றவனை எண்ணிச்**

**சக்கரத் தால்தலை கொண்டாய்**

**ஆமா றியம் பிரானே’** (37)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**காளியன் உச்சியில் நட்டம் புரிந்தவன் :**

கண்ணன் ஒரு நாள் கன்றுகளை ஓட்டிக்கொண்டு போகும்போது, ஒருவரும் சென்றுவராத வழியில் போகத் தொடங்கினான். ஆயச்சிறுவர்கள் அவ்வழியில் போக வேண்டாம் என்றனர். அவ்வழியில் யமுனை நதி மடுஒன்றின் காளியன் என்னும் ஐந்தலை பாம்பு என்று தன் குடும்பத்துடன் வசித்து வருவதாகவும், அவ்வழியில் செல்வோர்களை கொன்று விடுவதாகவும் எடுத்துக்கூறி எச்சரித்தனர்.

உடனே அந்த ஐந்தலை அரவைத் தண்டிக்க எண்ணி கண்ணன், அவ்விடத்திற்கு சென்று அம்மடுவிற்கு அருகிலுள்ள கடம்பமரத்திலேறி அம்மடுவிற்குதித்து அந்நாகத்தின் படத்தின் மேலேறி நடனம் ஆடி அதன் வலிமையை அடக்கினான். மாங்கல்ய பிச்சை கோரித் தன்னை வணங்கின நாக கன்னிகையின் வேண்டுகோளின் படி அந்தக் காளியனைக் கடலில் சென்று வாழும்படி உயிரோடு விட்டருளினாள் என்பதை வி‘ஷுசித்தர்,

**‘நஞ்சுமிழ் நாகம் கிடந்த**

**நற்பொய்கை புக்கு**

**அஞ்சப் பணத்தின்மேல்**

**பாய்ந்திட்டு அருள்செய்த**

**அஞ்சன வண்ணனே!’** (38)

என்றும்,

> **‘காயும்நீர் புக்குக் கடம்புஏறி, காளியன்**
>
> **தீய பணத்தின் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி**
>
> **வேயின் குழலூதி வித்தக னாய்நின்ற**
>
> **ஆயன்’’** (39)

என்றும் குறிப்பிட்டு மகிழ்கின்றார்.

**கோவர்த்தனத்தைக் குடையாக எடுத்தவன் :**

கண்ணனுடைய தீரச் செயல்களைக் கண்டு ஆயர்கள் அனைவரும் “இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப் படியே ஒழுக வேண்டும்’ என்று அறுதியிட்டனர். இங்ஙனம் இருக்கையில், இடையர்கள் ஆண்டுதோறும் இந்திரப் பூசை செய்வது வழக்கம், இந்த வருடமும் அதற்கான ஏற்பாடுகள் நடப்பதைக் கண்டு கண்ணன், “பெரியோர்களே, நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் சீவிக்கின்றோமோ அதற்கே பூசை செய்வது பொருத்தம், இக்கோவர்த்தன மலையே பசுக்களுக்குப் புல்லும் நீரும் நல்கி காப்பாற்றுகின்றது. ஆகவே பூசையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்’ என்று கூற, இடையர்களும் அங்ஙனமே செய்கின்றனர்.

இதனால் சினம்கொண்ட இந்திரன் ஏழு மேகங்களை ஏவிக் கல்மாரி பெய்வித்தான். ஏழு நாட்கள் விடாத மழை. எங்கும் வெள்ளம். ஆகையால் இடையர்கள் கண்ணனிடம் முறையிட, கண்ணன் கோவர்த்தன மலையைத் தம் ஒற்றை விரலால் தூக்கிக் குட்டையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லா உயிர்களையும் காத்தருளினான் எனும் இந்நிகழ்ச்சியை வி‘ணுசித்தர் அவர்கள்,

**“மலையை எடுத்து மகிழ்ந்துகல் மாரி**

**காத்துப் பசுநிரை மேய்த்தாய்”** (40)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**பஞ்சவர்க்குத் தூதன் :**

பாண்டவர்களின் தூதனாகக் கண்ணன் துரியோதனனிடம் சென்று, அறம் வழுவிய உறவினர்களை வருந்திப் பலத்தாலே வாழ வேண்டும் என்று எண்ணியிருப்பது தகாது, ஆகையால் இருவருக்கும் உள்ள பாகங்களைப் பிரித்துக் கொண்டு ஒத்து வாழுங்கள்’ என்று முதலில் சொல்ல அதற்குத் துரியோதனன் சிறிதும் இசையாமையால், பத்து ஊர்களையாவது கொடு’ என்று கண்ணன் மீண்டும் வேண்ட, அதற்கும் அவன் இணங்காமல் நான் ஊசி குத்தும் நிலமும் கொடேன் பாண்டவர்களுக்கு தருமம் உண்டு, அவற்றின் பலன் சுவர்க்கும் உண்டு, அவர்கள் அவற்றை அனுபவிக்கலாம், இந்த அரசு எங்களுடையதே என்று மறுத்து விட,

இதனால் சினம் கொண்ட கண்ணன் போரைத் தொடங்குவித்துப் பார்த்தனுக்குத் தேர்ப்பாகனாகிப் போரில் வெற்றியும் கண்டான். இந்த நிகழ்ச்சியில் உள்ளத்தைப் பறிகொடுத்த ஆழ்வார்.

**“சீரொன்று தூதாய்த் துரியோ தனன்பக்கல்**

**ஊரொன்று வேண்டிப் பெறாத உரோடத்தால்**

**பாரொன்றிப் பாரதம் கைசெய்து பார்த்தற்குத்**

**தேர்ஒன்றை ஊர்ந்தாற்கு”** (41)

என்றும்,

**“பஞ்சவர் தூதனாய்**

**பாரதம் கைசெய்து”** (42)

என்றும் ஒன்று அல்ல இரண்டு பாசுரங்களில் குறிப்பிட்டு ஆழ்வார் அவர்கள் கண்ணனின் தீரச் செயல்களில் ஆழங்கால் பட்டு மகிழ்வது போல சுப்புரெட்டியாரும் எண்ணி எண்ணி மகிழ்கின்றார்.

**மற்றும் பிற விர செயல்கள் :**

பிரகலாதனுக்காக, நரன் பாதி சிங்கம் பாதியாக நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியனைக் கொன்று அச்சிறுபாலகனைக் காத்தது.

துரியோதனன் மற்றும் துச்சாதனனால் திரௌபதி மானபங்கம் செய்யப்பட்டு அவளின் துகிலுரித்த போது கண்ணன் அவளது மானத்தை காத்தத் திறனும், வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்ததும், சிசுபாலனைச் சிரமறுத்ததும் போன்ற ஏராளமான செய்திகளைப் பெரியாழ்வா தொகுத்துக் குறிப்பிட்டுள்ளார்.

பெரியாழ்வாரையும் விஞ்சும் வகையில் சுப்புரெட்டியாரின் கருத்துக்கள் அமைந்துள்ளன. கண்ணனைப் பற்றித் துல்லியமாக அறிந்து கொள்வதற்கும், அவன் மீது பக்தி கொள்வதற்கும் இந்நூலில் உள்ள செய்திகள் அனைத்தும் தக்க சான்றுகளாக உள்ளன.

**பிருந்தாவனத்தில் வேணுகோபாலன் :**

கண்ணன் வளர்ந்த இடமான ஆயர்பாடியிலுள்ள நந்தகோபன் முதலான ஆயர்கள் கண்ணனுக்கு அங்கு அடிக்கடி நேரிட்ட பேரிடர்களை உற்பாதங்கள் எனக் கருதி அவ்விடத்தை விட்டுக் கன்றுகாலி முதலிய எல்லாப் பொருள்களுடனும் பிருந்தாவனம் சென்று அங்குக் குடியேறினர்.

பிருந்தாவனம் என்பதற்கு நெருஞ்சிக்காடு என்பது பொருள். கண்ணன் அவதரித்ததும் இவ்விடம் அந்நிலை மாறி வளம் கொழிக்கும் மெய்ச்சல் நிலமாக (விரஜபூமி) யாக மாறிவிட்டது. விரஜபூமியில் கண்ணன் திருவடிபடாத இடமே இல்லை எனலாம். திருவாய்ப்பாடி (நந்த கோகுலம்),

வடமதுரை (மதுரா), கோவர்த்தனம், இராதை அவதரித்த இராதாபர்காம் என்ற ஊர், கண்ணன் திருவிளையாடல்கள் புரிந்த பிருந்தாவனம் ஆகிய புனிதமான இடங்கள் யாவும் இந்த விரஜபூமியில் அடங்கியுள்ளன.

பிருந்தாவனம் கண்ணன் குழலூதிக் கோபியருடன் இராசக்கிரீடை (குரவைக்கூத்து) நிகழ்த்திய இடமாகும். இங்கு காளியன் மடு, கோபியரின் துகிலுரித்த கட்டம், கேசி என்ற அசுரனைக் கொண்ட இடம் (கேசிக்கட்டம், கோபியரின் பக்திப் பரவசத்தைக் கண்ட அக்ரூரர் கண்ணீர் மல்க விழுந்து புரண்ட இடம், குழலூதிக் கோபியரின் உள்ளத்தைக் கவர்ந்த வனம் (பான்சி வனம்) மற்றும் சேவாகுஞ்சம், பக்தவிலோசனம் முதலானவைகள் உள்ளன.

சிலநாட்களில் நள்ளிரவில் இன்றும் கண்ணனின் குழலோசையைக் கேட்பதாக அங்குள்ளோர் கூறுகின்றனர். பெரும்பாலான கண்ணனின் தீரச் செயல்கள், திருவிளையாடல்கள் முதலியன ஆயர்பாடியிலும், பிருந்தாவனத்திலும், கோவர்த்தனத்திலும் நடைபெற்றன.

பிருந்தாவனத்திலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் கண்ணனின் பல திருக்கோயில்கள் உள்ளன. இதயத்தில் ஆன்மா இருப்பதுபோல் ‘விரஜபூமி’ யின் இதயமான பிருந்தாவனத்தில் கண்ணன் என்றும் மகிழ்ந்து இனிது மருவியுள்ளான் என்று கூறுவர் பெரியோர்.

**பாரதியின் கண்ணன் :**

பரமாத்மாவாகிய கண்ணனை ஒரு ஜீவாத்மா எந்தெந்த கோணங்களில் எல்லாம் நின்று, பார்த்து, ரசித்து, அனுபவித்து அடையலாம் என்பதையும் அனுபவ வாயிலாக உணர்ந்த கவிஞர் பாரதியார்.

எப்படி ஆழ்வார் உள்ளத்திலே அற்புதமான அகக் காட்சிகளைத் தோற்றுவித்தானோ, அப்படியே உள்ளொளி பெற்ற பாரதியின் உள்ளத்திலும்

கண்ணன் அற்புறதமான அகக் காட்சிகளைத் தோற்றுவித்தான். அவையனைத்தும் கண்ணன் பாடல்களாக உருவெடுத்தன.

**‘எங்கிருந்து வருகுவதோ – ஒலி**

**யாவர் செய்குவதோ அடிதோழி’** (43)

என்று பல சமயங்களில் கண்ணனின் திருவிளையாடல்களில் மனதைப் பறிகொடுத்த அவர் கண்ணனைப் பல்வேறு நிலைகளில் கண்டு பரவசமடைந்துள்ளார். இவர், கண்ணனைத் தோழனாகவும், தாயாகவும், தந்தையாகவும், சேவகனாகவும், அரசனாகவும், சீடனாகவும், சற்குருவாகவும், விளையாட்டுப் பிள்ளையாகவும், காதலனாகவும், காதலியாகவும் எனப் பலநிலைகளில் அனுபவித்துப் பரவசமடைந்துள்ளார்.

இவ்வாறாக பாரதியார் அவர்கள் தாம் பெற்ற பேரின்பத்தை அற்பதக் காட்சிகளாக, உணர்ச்சியின் உருவங்களாகப் பாடல்கள் மூலம் நமக்குக் காட்டுகிறார்.

கண்ணன் காட்சியளிக்கும் கோலங்களில் மூன்று, பக்தர்களின் உள்ளங்களைச் சிறப்பாகக் கவருகின்றன.

1. ஆயர்பாடிச் சிறுவனாக வருவது,
2. பசுக்களுக்கும் இடைப் பெண்களுக்கும் தோழனாகத் தோன்றுவது,
3. வேணுகோபாலனாகத் தோற்றமளிப்பது.

இன்று மூன்று கோலங்களையும் நேர்க்காட்சிகளாக அனுபவித்து மகிழ்பவர் பெரியாழ்வார் அவர்கள், ஆயினும் இசையுலகின் அதிசயமான தத்துவங்களோடு வேதாந்தத்தின் பெரிய பெரிய தத்துவங்களும், சரித்திர முடிவுகளான சித்தாத்தங்களோடு பல்வேறு கலைகளில் பொருளும், கவிஞர்களின் புதிய புதிய கனவுகளும், வேணுகோபாலனின் குழலிசையிலே,

விதையில் அடங்கிய ஆலமரம் போல, அடங்கியுள்ளன என்பது கண்ணன் அடியார்களின் கொள்கைகளாக மலர்ந்துள்ளது.

பெரியாழ்வார் கண்ணனை எந்தெந்த நிலைகளில் எல்லாம் நினைத்து, அனுபவித்து மகிழ்ந்தாரோ, அதேபோல் சுப்புரெட்டியாரும் ஆழ்வார் அவர்களின் வாயிலாக கண்ணனை அணு அணுவாக அனுபவித்து மகிழ்ந்த திறம் நூல் வழி வெளிப்படுகின்றது. இந்நூற் கருத்துக்கள் எளிமையாக கற்போருக்கு பக்தி விருந்தாக அமைகின்றன. கதைகளைத் தெளிவுப்பட விளக்கியுள்ளமையால் கண்முன் காட்சியாய் விரிந்து மனதில் பதிகின்றது. ஆழ்வாரைப் பற்றியும் கண்ணனைப் பற்றியும் அறிந்து கொள்வதற்கு இன்றியமையாத, வேறு எதுவும் ஈடு இணையில்லாத ஒரு பெட்டகம் இந்நூல்.

**சான்றெண் விளக்கம் :**

1. இரா.வ.கமலக்கண்ணன் - பெரியாழ்வார் திருமொழி – வண்ணமாடங்கள் - பா.எண் : 1(3-4)
2. மேலது - பா.எண் : 4
3. மேலது - பா.எண் : 6
4. மேலது - பா.எண் : 9
5. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - சீதக்கடல் - பா.எண் : 23. (3-4)
6. மேலது - பா.எண் : 27
7. மேலது - பா.எண் : 29 (1-2)
8. மேலது - பா.எண் : 34
9. திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான் - பா.எண் : 6
10. கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பா.எண்.35 (3-4)
11. திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான் - பா.எண் : 8
12. இரா.வ.கமலக்கண்ணன் - பெரியாழ்வார் திருமொழி – சீதக்கடல் - பா.எண் : 42
13. திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான் - பா.எண் : 10
14. நம்மாழ்வார் – திருவாய் மொழி – 3-ம் பத்து –பா.எண் : 1
15. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - பா.எண் : 146

16. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - முதல் பத்து - பா.எண்: 44

17. மேலது: அம்புலிப்பருவம் - பா.எண்.55

18. மேலது : அச்சோப் பருவம் - பா.எண்.104

19. மேலது: புறம் புல்குதல் - பா.எண்.108

20. ச.வே.சுப்பிரமணியன் - தொல்காப்பியம் - நூ.எண் : 1030

21. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - ப.எண் : 58

22. பன்னிரு பாட்டியல் - பா.எண் : 101

23. இரா.வ.கமலக்கண்ணன் - பெரியாழ்வார் திருமொழி – வட்டு நடுவே - பா.எண் : 114

24. மேலது : பா.எண் : 164 (1-2)

25. மேலது : பாலக்கிரீடை : பா.எண் : 203

26. பாரதியார் - பாரதியார் பாடல்கள் - ப.எண் : 293

27. ஆண்டாள் - நாச்சியார் திருமொழி – பா.எண். 526

28. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - 2-ம் பத்து - பா.எண் : 218 (3-4)

29. மேலது : பா.எண் : 131 (1-3)

30. மேலது : பா.எண் : 135 :1

31. மேலது : பாடல் எண் : 174 : 1

32. மேலது : பா.எண் : 163 (1-2)

33. ஆண்டாள் - திருப்பாவை : பா.எண் : 13:1

34. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பா.எண் : 165

35. மேலது : உய்ய உலகு : பா.எண்: 67(3-4)

36. ஆண்டாள் - திருப்பாவை –பா.எண் : 24:4

37. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பா.எண் : 89(1-3)

38. மேலது : பா.எண் : 99, 311 (2-4)

39. மேலது : பா.எண் : 120 (1-3)

40. மேலது : போய்ப்பாடு : பா.எண் : 145-2

41. மேலது : பா.எண் : 99, 311 :1

42. முனைவர் தி.முத்துக்கண்ணப்பன் - பாரதியும் சமயமும் - ப.எண் : 128

# சுப்புரெட்டியாரின் ஆய்வுப் போக்கு

பன்னிரண்டு ஆழ்வார்களைப் பற்றியும் அவர்களின் அருட்செயல்களைப் பற்றியும் எளிய நடையில் நூல்கள் எழுதி பொது மக்களுக்கு விருந்தளிக்க வேண்டும் என்கிற சுப்புரெட்டியாரின் பேராசையானது முதன்முதலாக விட்டு சித்தன் விரித்த தமிழ் என்னும் தலைப்பில் பெரியாழ்வார் பற்றியும் அவரது அருட்செயல்கள் முதலானவற்றைப் பற்றியும் விளக்கும் பாங்கில் முதலாவது நூலாக வெளிவந்துள்ளது.

பெரியாழ்வாரைப் பற்றி சுப்புரெட்டியார் ஆய்வு செய்திருக்கும் இந்நூலுக்கு விட்டுசித்தன் எனும் அவருடைய பெயரையே வழங்கி இருக்கின்றார். இந்நூல் பதினான்கு இயல்களாக அமைந்துள்ளது. முதல் இயலில் ஆழ்வாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உரைத்து. அதனைத் தொடர்ந்து வரும் பதின்மூன்று இயல்களிலும் அவருடைய அருட்செயல்களைப் பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்து சுப்புரெட்டியார் விளக்கியுள்ளார்.

இந்நூலாசிரியர் பி.எஸ்.சி, எல்.டி, வித்துவான், பி.ஏ., எம்.ஏ,பி.எச்.டி, போன்ற பட்டங்களையும் பல்வேறு விருதுகளையும் பெற்றவர். இவர் ஒன்பது ஆண்டுகள் (1941-1950) துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராகவும், பத்து ஆண்டுகள் (1950-1960) காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் பதினேழு ஆண்டுகள் (1960-1977) திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978-ல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (1978 பிப்ரவரி -1979 ஜுன்) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றினார். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ‘நம்மாழ்வார்’

தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். தமிமிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார். இவர் இலக்கியம், சமயம், திறனாய்வு, அறிவியல் ஆராய்ச்சி வாழ்க்கை வரலாறு என்று பல கோணங்களில் ஆய்வு செய்து நூல்களை வெளியிட்டுள்ளார்.

சுப்புரெட்டியார் அவர்கள் திருப்பதியிலிருந்து ஓய்வு பெற்று 1978-ம் ஆண்டு சனவரி 14-ம் நாள் சென்னையில் குடியேறியதில் இருந்து 'தேனாய் கன்னலாய் அமுதாய்' தித்திக்கும் ஆழ்வார் பாசுரங்களை வாசித்தும், கேட்டும், வணங்கி வழிபட்டும் காலத்தைக் கழித்துள்ளார். அப்போது அவர் நூல்கள் எழுத ஆராய்ச்சி மேற்கொண்ட போது ஆழங்கள்பட்ட பாசுரங்களை மீண்டும் மனத்தில் இருத்தி அசை போடுவதற்குப் பெற்ற வாய்ப்பின் காரணமாகவே இந்நூல் பிறந்துள்ளது.

சுப்புரெட்டியாரின் 'விட்டுசித்தன் விரித்த தமிழ்' எனும் இந்நூலில் உள்ள பதினான்கு இயல்களுள் முதல் இயலில் பெரியாழ்வரின் பிறப்பு மற்றும் அவர் செய்த திருத்தொண்டுகளைப் பற்றியும் சிறப்பாக கூறியுள்ளார். இப்பகுதி பெரியாழ்வாரைப் பற்றி அறியாதோர்க்கும், அறிந்து கொள்ள விரும்புவோருக்கும் மிகவும் இன்றியமையாததாக உள்ளது. இரண்டாவது இயலான பரத்துவ நிர்ணயத்தில் பெரியாழ்வரின் வாதத் திறமையை செம்மையுற விளக்கி, மதுரை மன்னான ஸ்ரீவல்லபனின் மனக்குழப்பத்தை நீக்கித் தெளிவு பெறச் செய்து பெரியாழ்வார் கிழியறுத்த நிகழ்வைப் பற்றி மிகவும் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

அடுத்த இயலில் 'பல்லாண்டு பாடிய பட்டர்பிரான்' என்பதில், வி'ணு சித்தரின் பரத்துவ நிர்ணயம் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெருமகிழ்ச்சியைத் தர. பாண்டிய மன்னன் வி'ணு சித்தருக்குப் 'பட்டர்பிரான்' எனும் விருதை வழங்கி பட்டத்துயானையின் மீது ஏற்றி நகர்வலம் செய்விக்கிறான்.

இந்நிகழ்வு மக்களுக்கு மகிழ்ச்சி அளித்து பெருவிழாவாக நிகழ, அதனைக் காண எம்பெருமானான திருமால், பிராட்டிமாருடன் கருடவாகனத்தில் காட்சியளிக்கின்றார். இதனைக் கண்ட வி'ஹுசித்தர், பாவிகளின் கண்ணெச்சில் பட்டு எம்பெருமானுக்கு என்ன தீங்கு வருமோ? என்று அஞ்சி யானைக் கழுத்தில் கிடந்த மணியையே கைத்தாளமாகக் கொண்டு,

**"பல்லாண்டு பல்லாண்டு**

**பல்லாயி ரத்தாண்டு**

**பலகோடி நூறாயிரம்"** (1)

என்று பல்லாண்டு பாடுகிறார்.

**பல்லாண்டின் சிறப்பை உணர்ந்த வைணவ உலகம்,**

**"உண்டோ திருப்பல்லாண்டுக்(கு)**

**ஒப்பதோர் கலைதான்?**

**உண்டோ பெரியாழ்வார்க்(கு)**

**ஒப்ப ஒருவர்?"**(2)

என்று பட்டர்பிரானை வியந்து இன்றும் பாராட்டிப் போற்றுகின்றது. சுப்புரெட்டியார் திருப்பல்லாண்டின் சிறப்பையும், அதனைப் பாடிய பட்டர்பிரானையும் மனதால் அனுபவித்து வியந்து பாராட்டி உரைக்கின்றார்.

மூன்றாவது இயலில், திருப்பல்லாண்டின் சிறப்பையும் பெருமையையும் உணர்த்திய சுப்புரெட்டியார் அவர்கள் அடுத்ததான நான்காவது இயலில் "திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமா?" என்ற ஐயத்தையும் எழுப்பி, அதற்கும் தக்க விளக்கங்களை அளித்துள்ளார்.

பெரியாழ்வார், அருளிச் செய்த பாசுரங்கள் அனைத்தையும் தொகுத்து 'பெரியாழ்வார் திருமொழி' என்ற பெயரில் முதலாயிரத்தில் முதலாவதாக இடம் பெறச் செய்தவர் நாதமுனிகள் ஆவார். அண்ணங்கராசாரிய

சுவாமிகளின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பதிப்பில் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமாகவும், முதற்பத்தில் 'வண்ணமாடங்கள்' தொடங்கி வட்டு நடுவே முடிய ஒன்பது

திருமொழிகளை மட்டிலும் ஒரு பத்தாகக் கொண்டு வெளியிடப் பெற்றுள்ளது. மற்ற பத்துகளில் மாற்றம் இல்லை இம்முறை தென்கலையாரின் சம்பிரதாயமாக அமைந்து விடுகின்றது.

மகாவித்துவான் வேங்கடசாமி ரெட்டியார் அவர்களின் பதிப்பில் 'திருப்பல்லாண்டு' முதற்பத்தில் முதற்பதிகமாக அடங்கி அவற்றுள் பத்துத் திருமொழிகள் அடங்கி உள்ளன. இரண்டாம் பத்து செச்சூது என்ற திருமொழியாக தொடங்குகின்றது. இம்முறை வடகலையார் (வடகலையார்) சம்பிரதாயமாக அமைந்துவிடுகின்றது.

இந்த இரண்டு பதிப்புகளிலும் திருப்பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகக் கொண்டவர்கள் தென்கலையார் என்றும், திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தம் அன்று, அது பெரியாழ்வார் திருமொழியில் முதல் பத்திலே அடங்கி விடுகின்றது என்பது வடகலையார் கருத்து என்றும் நாம் கொள்ள வேண்டி உள்ளது என்று கூறும் சுப்புரெட்டியார் பலபெரிய உரையாசிரியர்களின் கருத்துக் கொள்கைகளைக் கொண்டு நமக்குத் தெளிவுப்படுத்துகின்றார்.

திவ்யப் பிரபந்தங்களின் எண்ணிக்கையும், பாசுரங்களின் எண்ணிக்கையும் வேதாந்த தேசிகர் காலத்தில் வரையறுத்துக் கூறப் பெற்றவை. தேசிகர் திருமல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கொள்ளவில்லை. அது பெரியாழ்வார் திருமொழியுடன் சேர்ந்தது என்று ஒப்புக் கொள்கிறார். மேலும்,

"ஏரணிபல் லாண்டு முதல் பாட்டு நானூற்று
எழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு வாயே"(3)

என்ற பகுதியில் வகை எதுவும் இன்றித் தொகை மட்டிலும் நானூற்று எழுபத்து இரண்டு என்று கூறியுள்ளதை நோக்கும் போது தேசிகரின் திருவுள்ளத்தில் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தம் அன்று என்று இருந்தமையை தெளிவாக அறிய முடிகின்றது சுப்புரெட்டியார் என்று தேசிகரின் கருத்தை தெளிவாக விளக்குகிறார்.

பெரியவாச்சான் பிள்ளை போன்ற உரை மன்னர்களும் திருப்பல்லாண்டுடன் சேர்த்து பெரியாழ்வார் திருமொழி ஒரே பிரபந்தம் என்ற திருவுள்ளம் கொண்டவர்கள். பெரியாழ்வார் திருமொழியின் இறுதிப் பாசுரமாகிய ‘வேயர் தங்குலத்து’ என்பதில் ‘கோயில் கொண்ட கோவலன்’ என்ற சொற்றொடருக்கு வியாக்கியானம் செய்யுமிடத்தில்,

**‘திருப்பல்லாண்டு தொடங்கி இன்றளவும் இவர்**
**மனத்தில் இருக்கின்ற கிரு‘ணன் தான் பிறந்த படியையும்**
**வளர்ந்த படியையும் கேட்டான்’**

என்று பெரியவச்சான் பிள்ளை கூறியிருப்பதனாலும் இவர் கருத்துப்படி ‘திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமன்று’ என்பது உறுதிப்படுகின்றது. இது ஒருபுறம் இருக்க,

மணவாள மாமுனிகள் அருளிய ‘உபதேச ரத்ன மாலையில்’

1. பல்லாண்டு பாடிய நம் பட்டர்பிரான்
2. ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும்,
3. உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலை

என்ற சொற்றொடர்களில் வரும் ‘திருப்பல்லாண்டு’ என்பது அது தனிப்பிரபந்தம் என்பதை உறுதிப்படுத்துகின்றது என்றும், திருக்கோயில்களில் ஏதாவது ஒரு பிரபந்தம் ஓதநேரிடும் போதெல்லாம் ‘திருப்பல்லாண்டு’ முதலில் ஓதப்பெற்றப் பின்னரே அக்குறிப்பிட்ட பிரபந்தம் ஓதப்படுகின்றது என்ற

வழக்கம் இருப்பதாலும் 'திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தம்' என்பது மேலும் உறுதிபடுத்தப்படுகின்றது என்றும் சிலர் கூறுகின்றனர்.

உபதேசரத்னமாலைப் பாசுரங்களில் இரண்டாவது தொடரிலுள்ள 'திருப்பல்லாண்டு' வேதத்திற்கு 'ஓம்' என்ற பிரணவம் போல திவ்வியப் பிரபந்தத்தின் பொருளுக்கெல்லாம் சுருக்கமாகவும், மங்கள ரூபமாகவம் இருப்பதாகக் கூறுகின்றதே அன்றி, தெளிவாக அது ஒரு பிரபந்தம் எனக் கூறாமையாலும் தனிப்பிரபந்தம் என்பதற்குத் தக்க ஆதாரம் இல்லாமையாலும் இரண்டையும் தக்க சான்றுகளாகக் கொள்வதில்லை. மேலும் உபதேசரத்னமாலை ஆழ்வார்கள் அவதரித்த நாட்கள், மாதங்கள், தலங்கள் முதலிய செய்திகளைக் கூறுகின்றதே அன்றி அவர்கள் அருளியுள்ள பிரபந்தங்களைப் பற்றி யாங்கணும் கூறவில்லை. இருப்பினும் திருப்பல்லாண்டு என்னும் திருமொழி அகண்ட திவ்வியப் பிரபந்தத்தின் தொடக்கத்தில், முன்வாசல் போல் திகழ்வதாலும் அதற்குத் தனிப்பெருமை உள்ளது. திருக்கோவில்களில் முதலில் ஓதப் பெறுவதற்கு இதனையே காரணமாகவும் கொள்ளலாம்.

இங்ஙனம் அசைக்க முடியாத பல காரணங்களைக் கொண்டு பெரியவச்சான் பிள்ளை முதலானோர்க்கும் 'திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் தொடக்கத் திருமொழியே அன்றி அதுத் தனிப்பிரபந்தம் அன்று' என்பது தெளிவாகின்றது.

இதன் ஒப்பற்றப் பெருமைக்கு 'தனிப்பிரபந்தம்' என்ற நிலையின்மையாலும் எவ்வாறேனும் குறை நேராது. என்று சுப்புரெட்டியார், இரு சாரார் கருத்துக்களையும் விருப்பு வெறுப்பின்றி ஆராய்வது நம் கடமையாகின்றது என்பதைக் கருத்தில் கொண்டு பல்வேறு கோணங்களில் ஆய்வு மேற்கொண்டு திருப்பல்லாண்டு – தனிப்பிரபந்தமா? என்பதற்கு

தெளிவாகவும், மிகவும் நுணுக்கமாகவும் சிறப்பித்து விளக்கி ஆய்வாளர்களுக்கு சான்றாக நிற்கின்றார். சுப்புரெட்டியர்.

அடுத்து ஐந்தாவது மற்றும் ஆறாவது இயல்களான பிள்ளைப் பெருமாள் அவதாரம், பிள்ளைப் பெருமாளின் வளர்ச்சி நிலைகள் என்பதில் இறைவனுக்கு அழகாக பிள்ளைப் பெருமாள் என்று பெயரிட்டு அவருடைய குழந்தைப் பருவ நிகழ்வுகளையும், குறும்புகளையும் கூறி, அக்குழந்தை கண்ணனின் குறும்புகளை யசோதை பிராட்டி வழியாக பெரியாழ்வார் அனுபவித்து மகிழ்ந்ததையும் அற்புதமாகக் குறிப்பிட்டு, சுப்புரெட்டியார் தம் சிந்தையாலும், உள்ள மகிழ்வாலும் திளைத்ததை அவருடைய கருத்துக்களின் வாயிலாக நம்மால் உணர முடிகின்றது. மேலும் பிள்ளைப் பெருமாளின் வளர்ச்சி நிலைகளைப் பல பாசுரங்களைக் கொண்டு பிற்காலப் பிள்ளைத் தமிழ்க் கூறுகளைச் சுவைபட விளக்கி பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டவர் வி'ஷுசித்தரே என்று அறுதியிட்டுக் கூறுவது இவர்தம் ஆராய்ச்சித் திறனை எடுத்துக்காட்டுவதாக அமைகின்றது. பிள்ளைப் பாட்டின் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல்,

“பிள்ளைப் பாட்டே தெள்ளின் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே”(4)

என்று பேசும்.

ஏழாவது இயலான, ‘கண்ணன் விளைத்த சிறு குறும்புகள்’ என்ற பகுதியின் வாயிலாக, சிறுவயதில் கண்ணன் செய்த சின்னச் சின்னக் குறும்புகளைப் பட்டியலிட்டுக் கூறியுள்ளார். அந்த வகையில் நம் கண்ணனும் பல குறும்புகளை செய்து உள்ளான் என்பதை இவ்வியலின் மூலம் நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது. அவனுடைய குறும்புகள் அருகிருந்த ஒரு

சிலருக்கு சிறிதளவு மனக்கசப்பைத் தந்தாலும் நம்முடைய யசோதையின் மூலமாக கண்ணனின் குறும்புகளை ரசிக்கும் ஆழ்வாருக்கும், அவர் வாயிலாக அனுப்பவித்து மகிழும் சுப்புரெட்டியாருக்கும் குழந்தை கண்ணனின் குறும்புகள் எல்லையில்லா மகிழ்ச்சியைத் தருகின்றன.

'சிறுபிள்ளை பயமறியாது' என்பர் நம் முன்னோர். அவர்கள் நம் குழந்தைக் கண்ணனது குழந்தை வரலாற்றை அறிந்து, தெரிந்து கொண்டுதான் இப்படிக் கூறியிருப்பார்களோ பலவேளை எண்ணத் தூண்டுகின்றது. இதனை, நம்சுப்புரெட்டியார் அவர்கள் கண்ணனின் சிறு குறும்பிற்கு அடுத்து எட்டாவது இயலாக வைத்திருக்கும் "கண்ணனின் தீரச் செயல்கள்" சான்றாக நிற்கின்றது. ஏனெனில் நம்முடைய குழந்தைக் கண்ணனுக்கு நடப்பன பறப்பன, ஊர்வன மற்றும் ஓரறிவு உயிரான மரம் முதலான அனைத்தும் அரக்கர்களாக தம்முன் வந்தபோதும் பயம் கொள்ளாது, "புல்லின் மீதுள்ள பனித்துளிப்போல" ஒரு சில மணித்துளிகளில் அவை இருந்ததற்கான அடையாளமே தெரியாதது போல செய்து விடுவான். நம் கண்ண பிரான். மேலும் இவருடைய தீரச் செயல்களுள் ஒன்றாகக் கருதுதுவது காளியன் என்னும் பாம்பின் தலையில் நடனம் புரிந்தது. 'பாம்பு என்றால் படையும் நடுங்கும்' என்பது பழமொழி, அப்படி இருக்க சாதாரண ஒரு தலை கொண்ட பாம்பைக் கண்டாலே அரண்டு அஞ்சி ஓடும் மக்களுக்கு மத்தியில் ஐந்து தலைகளைக் கொண்ட பாம்பின் தலையில் நடனம் புரிந்தது அவருடைய வீரதீரச் செயல்களுக்குச் சிறந்த சான்றாக விளங்குகின்றது. இச்செய்தியை,

**"நஞ்சுமிழ் நாகம் கிடந்த**
**நற்பொய்கை புக்கு**

**அஞ்சப் பணத்தின் மேல்**

**பாய்ந்திட்டு அருள்செய்த**

**அஞ்சன வண்ணனே!"** (5)

எனும் பாசுரத்தின் வழி அறியலாம்.

"பிருந்தாவனத்தில் வேணுகோபால்" என்பது இந்நூலின் ஒன்பதாவது இயலாகும். கண்ணன் வளர்ந்த இடமான ஆயர்ப்பாடியில் கண்ணனுக்கு அடிக்கடி ஏற்பட்ட பேரிடர்களை உற்பாதங்கள் எனக்கருதி அவ்விடத்தை விட்டு, கன்று காலி முதலானவற்றோடும் பிருந்தாவனத்தில் குடியேறினர் ஆயர்பாடி மக்கள். நெருஞ்சிக்காடாக இருந்த பிருந்தாவனம், கண்ணன் அவதரித்ததும் வளம் கொழிக்கும் 'விரஜபூமி' ஆனது. இங்கு தான் கண்ணன் சற்று வளர்ந்து இளம் பருவம் எய்திய பிறகு குழலூதிக் கோடியருடன் 'இராசகிரீடை' செய்தது, கோபியரின் துகிலுரித்தது போன்ற செயல்களில் ஈடுபட்டும் வந்தான். மேலும் கேசி கட்டம், கோடியரின் பக்திப் பரவசத்தைக் கண்ட அக்ரூரர் கண்ணீர் விட்ட இடம், போன்ற செய்தகிளையும் சுப்புரெட்டியார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

இந்த இயலில் தான் கண்ணன் மக்களுக்கு தரிசனமளிக்கும் மூன்று கோலங்களையும் குறிப்பிட்டுள்ளார். அதாவது,

1. ஆயர்பாடிச் சிறுவனாக வருவது
2. பசுக்களுக்கும், பெண்களுக்கும் தோழனாகத் தோன்றுவது
3. வேணுகோபாலனாகத் தோற்றமளிப்பது என்னும் மூன்று நிலையும் ஆகும்.

பத்தாவது இயலாகக் கொண்டிருப்பது "அர்ச்சாவதார அனுபவம்" அதாவது அர்ச்சாவதாரம் என்பது அன்பர்கள் எதைத் தனக்குத்

திருமேனியாகக் கொள்ளுகின்றனரோ. அதனையே இறைவன் தனக்கு வடிவமாகக் கொண்ட நிலை ஆகும். எல்லா ஆழ்வார்களும் இந்த அர்ச்சாவதாரத்தில் தான் அதிகமாக ஈடுபட்டுப் பேசுவர். சுருங்கக் கூறினால் நாலாயிரத்தின் பாசுரங்கள் யாவும் இந்த அர்ச்சாவதாரத்தைப் பற்றியனவேயாகும்.

இந்த அவதாரத்தை மங்களாசாசனம் செய்வதற்காகவே அவதரித்த திருமங்கை ஆழ்வார் நூற்றெட்டு திவ்விய தேசங்களில் வடக்கே வதரியிலிருந்து தெற்கே திருக்குறுங்குடி வரையிலுள்ள எண்பத்தாறு திவ்விய தேசங்களில் அருள்பாலிக்கும் எம்பெருமான்களின் மீது பாடியள்ளார். இவற்றுள் பெரியாழ்வார் சில திவ்விய தேசங்களை முழுப் பதிகங்களாலும் சிலவற்றை உதிரிப் பாசுரங்களாலும் மங்களாசாசனம் செய்துள்ளார். இந்த ஆழ்வார் முழுப்பதிகங்களாக மங்களாசாசனம் செய்துள்ளவை ஐந்து திருத்தலங்களாகும். அவைகளாவன.

1. திருக்கோட்டியூர்
2. திருவெள்ளறை
3. திருமாலிருஞ்சோலை
4. திருவரங்கம்
5. கண்டம் என்னும் திருப்பதி

இவற்றுள் கண்டம் கடிநகரைத் தவிர மற்ற நான்கு திருத்தலங்களிலும் சுப்புரெட்டியார் அவர்கள், எம்பெருமானைக் கண்ணாறக் கண்டு தரிசித்துள்ளதைப் பதிவு செய்துள்ளார்.

முழுப்பதிகங்களாக மட்டுமல்லாமல் ஒரு பாசுரத்தில் பல திவ்விய தேசங்களை அடக்கிப் பாடுவதும் உண்டு என்பதை,

**"வடதிசை மதுரை சாளக் கிராமம்**

**வைகுந்தம் துவரை அயோத்தி**

**இடம்உடை வதரி இடவகை உடைய**

**எம்புரு டோத்தமன் இருக்கை".**(6)

என்னும் பாசுரம் விளக்குகின்றது. இப்பாசுரப் பகுதியில் மதுரை, சாளக்கிராமம், வைகுந்தம், துவரை (துவாரகை), அயோத்தி, வதரி என்ற ஆறு திவ்விய தேசங்களின் பெயர்கள் இடம்பெறுகின்றன. சைவ நாயன்மார்களின் திருப்பதிகங்களிலும் தலத்துக்கு ஒன்று அல்லது பல பதிகங்களும், ஒரே பதிகத்தில் பல தலங்களை அடக்கியும் பாடும் மரபுகளைக் காணலாம். இவற்றை அவர்கள் 'ஊர்த்தொகை' என்று வழங்குவர்.

இவ்ஆறு திருத்தலங்களில் மட்டுமல்லாது.

- திருப்பேர் நகர்
- குடந்தை
- வேங்கடம்
- கோவர்த்தனம்
- கண்ணபுரம்
- ஆயப்பாடி
- திருப்பாற்கடல்
- வில்லிப்புத்தூர்

ஆகிய திருத்தலங்களுக்கும் சென்று எம்பெருமானை வணங்கி மங்களாசாசனம் செய்துள்ளார். இவ்வாறாகப் பெரியாழ்வார்,

முழுப்பதிகங்களாகவும், உதிரிப் பாசுரங்களாகவும் சேர்த்து மொத்தம் பத்தொன்பது திருத்தலங்களில் உள்ள இறைவனின் அவதாரங்களை வணங்கி மங்களாசாசனம் செய்தள்ளதாக சுப்புரெட்டியார் அவர்கள் ஆராய்ந்து கூறியள்ளார். மேலும் அவர், திருப்பேர் நகர்,

குடந்தை, வேங்கடம், கண்ணபுரம், வில்லிப்புத்தூர் ஆகிய திருத்தலங்களுக்கு தம் இளைய மகன் டாக்டர் எஸ்.இராமகிரு‘ணனுடன் சென்று இறைவனை மனதார வழிபட்டு அவ்விறைவனின் அருளை பெற்றதாகவும் அவர் குறிப்புகளைக் கொடுத்துள்ளார். இப்பண்பு அவரது நுணுகிய ஆய்வுப்பாங்கிற்கு சிறந்த எடுத்துக்காட்டாய் அமைகின்றது.

அடுத்ததாக, அர்ச்சாவதார அனுபவத்தைத் தொடர்ந்து “அந்தர்யாமித்துவ அனுபவம்” என்பதை பதினோராவது இயலாகப் பகுத்து வைத்துள்ளார்.

அர்ச்சாவதாம் என்பது அன்பர்கள் இறைவனை மனதுள் நினைத்து வணங்கி வேண்டுவது, அந்தர்யாமித்துவம் என்பது மனதுள் நினைந்து உருகிய இறைவன் தம் திருக்கண் முன் காட்சியாய் எழுந்தருளுவது ஆகும் என்கிறார் ஆசிரியர்.

பெரியாழ்வாருக்கு இந்த அனுபவம் எளிதில் கிடைத்தது. இவருடைய தாய் தந்தையார் இவருக்கு இட்ட பிள்ளைத் திருநாமம் ‘வி‘ணுசித்தன் - வி‘ணுவை எப்பொழுதும் தம் மனத்தை விட்டு அகலாது வைத்துக் கொண்டிருப்பவன்’ என்பதாகும். இவரும் திருப்பூந்தொண்டில் நந்தவனத்தைச் சீர் செய்யும்போதும், பூச்செடிகளுக்கு நீர் பாய்ச்சும் போதும், பூக்களையும் திருத்துழாயையும் கொய்யும்போதும், அவற்றை மாலையாகத் தொடுக்கும்போதும் எம்பெருமான் வடபத்திர சாயியை (ஆலிலைப் பள்ளியான்) நினைத்த வண்ணம் இருப்பார். கனவு வந்தாலும் அதில் கூட

இந்நிகழ்ச்சிகளே தோன்றும். அர்ச்சாவதார எம்பெருமான்கள் அனைவருமே இவர் மனத்தில் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருப்பர். தம் அந்தர்யாமித்துவ அனுபவத்தை,

**'உண்ணா நாள்பசி யாவதென்று இல்லை,**

**ஓவா தே'நமோ நாரணா!' என்று**

**எண்ணா நாளும் இருக்குளசு சாம**

**வேத நாண்மலர் கொண்டுன பாதம்**

**நண்ணா நாள்அவை தத்துறு மாகில்**

**அன்றெ னக்கவை பட்டினி நாளே''** (7)

என்று கூறுவார். இந்த ஆழ்வாரின் அந்தர்யாமித்துவ அனுபவத்தை பல பாசுரங்களின் வழி நம் சுப்புரெட்டியார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். பெரியாழ்வார் இறைவனை கண்டு மகிழ்ந்த திறத்தை விடவும் ஆசிரியர் எம்பெருமானை அணுஅணுவாக கண்டு மகிழ்ந்த திறத்தை அவருடைய உரைகளின் வாயிலாக நம்மால் அறியவும் முடிகின்றது, உணரவும் முடிகின்றது.

அடுத்துப் பன்னிரண்டாவது இயலாக ஆசிரியர் பகுத்திருப்பது "பாசுரங்களில் அகப்பொருள் கலப்பு" என்பதாகும். கண்ணனுடைய திருவவதாரம் முதல் அவனுடைய அனைத்துத் திருக்குணச் செயல்களையும் அனுபவித்து மகிழ்ந்த பெரியாழ்வார், தலைவன்-தலைவி பாவனையில் கண்ணனை அனுபவிக்க எண்ணி, தானாக தம் தன்மை இழந்து ஓர் ஆய மகளின் தன்மையை அடைகின்றார். அவர் பரமான்மாவைத் தலைவனாகவும், சீவான்மாவைத் தலைவியாகவும் வைத்து பாசுரங்களை இயற்றி உள்ளார். இவையாவும் அகப்பொருள் பற்றியவை. இதன் மூலம் வைணவப் பெருமக்கள் சங்க கால நெறியை ஒட்டி ஓர்அகப்பொருள் தத்துவத்தை அமைத்துக் காட்டிய பெருமையைப் பெருகின்றனர். இத்தகைய அகப்பொருள் சார்ந்த

கருத்துக்களை பெரியாழ்வார் அனுபவித்துக் கூறியதன் வாயிலாக சுப்புரெட்டியார் தாம் அனுபவித்தது மட்டுமல்லாது நமக்கும் அந்த இன்பத்தை நல்கும் படியாக இதனை ஒருத்தனி இயலாக வைத்துள்ளார். இதன்மூலம் சுப்புரெட்டியரின் ஆய்வுத் திறம் மேம்பட்டு சிறந்து விளங்குவதை நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது.

பொதுவாக வைணவர்களிடையே நிலவும் ஐதிகம் ஒன்று உண்டு. தண்டகாரண்ய முனிவர்கள் இராமபிரானது பேரழகில் ஈடுபட்டு பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையர்களாகிக் கண்ணனைக் கூடினர் என்பது தான் அந்த ஐதிகம். ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெண்மை நிலையை அடைந்து எம்பெருமானாகிய புருடோத்தமனை அனுபவிக்கக் காதலிக்கிறார். ஒரு ஆண், பெண் நிலையை அடைதல் கூடுமோ எனில் கூடும். என்பதை ஆசிரியர்

**கண்ணில் காண்பரேல்**

**ஆடவர் பெண்மையை**

**அவாவும் தோளினாய்'!**(8)

என்று விசுவாமித்திரன் கூற்று வாயிலாக விளக்குகிறார். பெரியாழ்வார், தோழியாக, தாயாக, மகளாக மாறி கண்ணனைப் பல்வேறு நிலைகளில் அனுபவித்து மகிழ்கின்றார். வேதாந்தங்களில் குறிப்பிடப் பெறும் பக்தி இங்ஙனம் ஆழ்வார்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்பதை ஆசிரியரின் உரைகளின் வாயிலாக நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது.

இதுவரை பெரியாழ்வாரையும், கண்ணனையும் பற்றிக் கூறிய சுப்புரெட்டியார் அவர்கள், தமது நூலில் சமுதாயப் பண்பும் சிறிது சிறக்க எண்ணிய 'சமுதாயக் கண்ணோட்டம்' என்பதைப் பதின்மூன்றாவது இயலாக வைத்துள்ளார்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க காலத்தையும், நீதிநூல் காலத்தையும் அடுத்து தெளிவாகக் காணப் பெறுவது பத்தி இயக்க காலம் (கி.பி.600-900) ஆகும். கி.பி. ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சமயப் பெரியார்களான நாயன்மார்களும், வைணவப் பெரியாழ்வர்களான ஆழ்வார்களும் ஊர் ஊராகச் சென்று தத்தம் சமயங்களைப் பரப்பி வந்தனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தியைப் போற்றினர். பக்தி நெறியை மக்களிடையே வளர்க்க முனைந்தனர். இல்லறநெறியை பின்பற்றி அதில் இன்பமுற்றிருந்தாலும், எந்தத் தொழிலை மேற்கொண்டிருப்பினும் உள்ளத்தை இறைவனுக்கே வைத்து வாழ்க்கை நடத்தினால் அதுவே போதும் என்றனர்.

‘பத்தராய் இறந்தார் பெறும் பேற்றைப் பற்றி பெரியாழ்வார் தம் திருமொழியில் குறிப்பிட்டு இருப்பது பக்தி நெறியின் சிறப்பினை விளக்கும் பாங்கில் அமைந்துள்ளது. பக்தியின் பெருமையைப் பற்றிப் பாரதியாரும்,

**‘பக்தினாலே - இந்தப்**
**பாரினி லெய்திடும்**
**மேன்மைகள் கேளடி!**
**சித்தந் தெளியும் - இங்கு**
**செய்கை அனைத்திலும்**
**செம்மை பிறந்திடும்**
**வித்தைகள் சேரும் - நல்ல**
**வீரர் உறவு**
**கிடைக்கும் மனத்திடைத்**
**தத்துவம் உண்டாம் - நெஞ்சில்**
**சஞ்சலம் நீங்கி**
**உறுதி விளங்கும்.”** (9)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**“தீண்டாவழும்பும் செந்நீரும் சீயநரம்புஞ் செறிதசையும்**

**வேண்டா நாற்மிகும் உடலை’’** (10)

என்ற திவ்வியக் கவியின் பாசுரப்படி பற்பல நிலைகளுக்குக் காரணமாக இருக்கும் இந்த உடம்பின் வேதனைக் கனத்தால்மயக்கமுற்று மரணமடைவதற்கு முன் வாயினால் எட்டெழுத்து மந்திரத்தை நினைத்துக் கொண்டு தலைமேல் கைகூப்பித் தொழுபவர்கள் பரமபதம் போய்ச் சேர்வார்கள் என்பதில் துளியும் ஐயமில்லை.

பிராணம், அபாநம், வியாநம், உதாநம், சமானம் என்ற பஞ்ச பிராணன்களும் உடலைவிட்டு ஒழிந்த பின்பு ஒருவர் மரணப்படுக்கையில் இருக்கும்போது உறவினர்கள் திரள் திரளாகக் கூடி, இறந்தவன் எத்தகைய குற்றங்களைச் செய்திருப்பினும் அவற்றை எல்லாம் விட்டுவிட்டு சிறிது நன்மையாக தோன்றும்படியானவைகளை மட்டும் சொல்லி ஒப்பாரிப் பாடல்களைப் பாடிப்பாடி ஒரு பாடையில் படுக்க வைத்து, புத்தாடையால் பிணத்தை மூடி, பிணத்தை சுடுகாட்டிற்குச் சுமந்து செல்வர். இத்தகைய நிலை ஏற்படுவதற்கு முன் இறைவனை மனதால் நிந்தித்து வழிபட்டால் யமபுரம் செல்வதைத் தவிர்த்து பரமபதம் சென்று உய்யலாம் என்கிறார் சுப்புரெட்டியார்.

இவ்வாறாக மனிதனாகப் பிறக்கும் எவனும் ஒரு நாள் இறக்கத்தான் ஆக வேண்டும். அதனால் வாழும்போதே எம்பெருமானை மனதார வழிபட்டு வந்தால் இறைவன் வீடுபேற்றினை நல்கி உடல் அழிந்தாலும் ஆன்மா அழியாது காத்து நன்மை புரிவான் என்கின்றனர் பெரியாழ்வாரும், சுப்புரெட்டியாரும். இத்தகைய செய்திகளின் வாயிலாக ஆசிரியரின் சமுதாயக் கண்ணோட்டத்தைக் காண முடிகின்றது.

இறுதியாக இந்நூலின் கடைசி இயலாக, அதாவது பதிநான்காவது இயலாக ஆசிரியர் வைத்திருப்பது “பாசுரங்களில் படிமங்கள்” என்பதாகும்.

படிமம் என்பது ஒரு கவிஞன் தன் மனதால் கண்ட சிலக்காட்சிகளை, சொற்களால் படிப்போரின் உள்ளத்தில் திரையிடச் செய்யுமாறு எடுத்துரைப்பதாகும். இதனைக் கருதியே கவிதையில் படிமம் கையாளப் பெறுகின்றது. ஒரு சில கவிதையைப் படிக்கும்போதே சொற்கள் அல்லது சொற்கோவைகள் சிலப்பல படிமங்களை நம் மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன.

சுப்புரெட்டியாருடைய நூலில் உள்ள கருத்துக்களிலும், செய்திகளிலும் இத்தகைய படிமங்கள் இடம் பெறுவதைக் காணமுடிகின்றது. விட்டு சித்தன் விரித்த தமிழ் எனும் இந்நூலில் பெரியாழ்வாரைப் பற்றி அறிந்த தெரிந்த செய்திகளை எல்லாம் அவர் மனதுள் கொண்டு ஆழங்கால்பட்டு, தானும் அந்நிலையிலே நின்று உள்ளக் கிடக்கையின் உண்மைகளைத் தெளிவாக விளக்கியுள்ளார் சுப்புரெட்டியார் அவர்கள்.

**சான்றெண் விளக்கம் :**

1. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - பா.எண்.1(1-2)
2. மாணவாள மாமுனிகள் - உபதேச ரத்னமாலை –பா.எண்.20
3. சீராமதேசிகாசாரியார் - தேசிகப் பிரபந்தம் - பா.எண்.375
4. பன்னிரு பாட்டியல் - பா.எண்.101
5. இரா.வ.கமலக்கண்ணன் - நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - மூன்றாம் பத்து.பா.எண்.5(3-4)
6. டாக்டர் ந.சுப்புரெட்டியார் - விட்டு சித்தன் விரித்த தமிழ் - ப.எண்.203.
7. முனை.இரா.வ.கமலக்கண்ணன் - பெரியாழ்வார் திருமொழி –பா.எண்.438
8. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் - கம்பராமாயணஉரை - பாலகாண்டம் - தாடகைவதை –பா.எண்.41
9. பாரதியார் - பாரதியார் கவிதைகள் - ப.எண்.190
10. அழகிய மணவாளதாசர் - திருவரங்கக் கலம்பகம் - பா.எண்.17

# முடிவுரை

சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய நூல்களுள் பன்னிரண்டு நூல்கள் வைணவ சமய தத்துவங்களைப் பற்றியவை ஆகும். இவருக்கு தமிழக அரசு, தமிழ் வளர்ச்சிக் கழகம் பரிசு வழங்கி சிறப்பித்துள்ளது. மேலும் இவரது கவிப்புலமையையும் ஆய்வுத் திறனையும் வைணவத் திருத்தொண்டினையும் பாராட்டும் விதமாக மார்ச் 1987ஆம் ஆண்டு பண்ணுருட்டி ஸ்ரீமத் ஏ.வே.வி.இராமநுச நாவலர் சபை தமது 62-வது ஸ்ரீ வைணவ மாநாட்டில் இவருக்கு "ஸ்ரீ சடகோபன் பொன்னடி' என்னும் விருதை வழங்கிச் சிறப்பித்துள்ளது. பெரியாழ்வாரை நுணுக்கமாக ஆய்ந்து கூறியுள்ளார். பெரியாழ்வாரின் பிறப்பு முதல் அவரது வாழ்வில் நடந்த நிகழ்வுகள் அனைத்தையும் ஆழமாக ஆராய்ந்து குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்புகள் அனைத்தும் பெரியாழ்வாரைப் பற்றி அறியாதோருக்கு ஒரு வாயிற்படியாகவும், சிறந்த பெட்டகமாகவும் இருக்கும்.

பெரியாழ்வார் வாயிலாக கண்ணனைப் பற்றிக் கூறியிப்பது இந்நூலுக்கு மற்றும் ஒரு சிறப்பாக அமைகின்றது. கண்ணன் பிறந்தது முதல் அவனது வளர்ச்சி நிலைகள் ஒவ்வொன்றையும் மிகவும் தெளிவாகவும் அழகாகவும் கூறி அவன் செய்த வீரதீரச் செயல்களையும் மிகவும் ஆழமாக ஆராய்ந்து குறிப்பிட்டுள்ளார். இது அவருடைய ஆய்வுத்திறமைக்கு தக்கதொரு சான்றாக அமைந்துள்ளது.

இவற்றுள் பெரியாழ்வாரின் பக்தித் திறன் சிறப்பாக காட்டப்பட்டு உள்ளது. கண்ணன் ஒரு தெய்வமாக இல்லாமல் நம்முடன் வாழும் ஒரு மனிதனாகக் காட்டப்படுகின்றான். பெரியாழ்வார் வாயிலாக சுப்புரெட்டியாரின் பக்தியும் நிரம்பி வழிகின்றதை அறிய முடிகின்றது. விட்டு சித்தன் விரித்த தமிழ் மூலம் பெரியாழ்வாரின் வாழ்வியல் சிறந்த நுணுக்கங்களோடும் காரண

காரியங்களோடும் விளக்கப்பட்டிருப்பதால் கற்போர் மனதில் ஆழமாகப் பதியும் விதத்தில் அமைந்துள்ளது. பெரியாழ்வரின் வழியாகக் கண்ணனையும் ஆயர்பாடியையும் கண்முன் கொணர்ந்து நிறுத்தியுள்ளது சுப்புரெட்டியாரின் பண்பட்ட ஆய்வுள்ளத்தினைக் காட்டுகின்றது.

சுப்புரெட்டியார் நூலில் வைணவ மரபில் பின்பற்றப்படும் சொற்கள் மற்றும் சொற்றொடர்கள் பலவும் அங்கனமே கையாளப்பட்டுள்ளது. கண்ணனின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளை பெரியாழ்வார் ஓரிரு வரிகளில் செய்யுள் வடிவில் கூறியதை விளக்கமாக முன்நிகழ்வுகளோடு கதை வடிவில் சுப்புரெட்டியார் விளக்கியுள்ள பாங்கு கற்போர் மனதில் ஒரு தெளிவை ஏற்படுத்துகின்றது.

# துணை நூற்பட்டியல்


1. ஆழ்வார்கள் விழா மலர் — அருள்பாடு அரங்கநாதசுவாமி திருக்கோயில், ஸ்ரீரங்கம்.

2. உபதேச ரத்னமாலை — மணவாள மாமுனிகள், தி.க.நாராயணசாமி நாயுடு, 2, சீதாராம் நகர், கடலூர்-1.

3. கம்பராமாயணம் — கோபால கிரு‘ணமாச்சாரியார், திருமகள் நிலையம், 55, வெங்கட்நாராயண ரோடு, தி.நகர், சென்னை. முதற்பதிப்பு ஏப்ரல் 2006.

4. கண்ணன் துதி — டாக்டர் ந.சுப்புரெட்டியார், பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை – 600 108. முதற்பதிப்பு 1987

5. திருப்பாவை — ஜெய்கணே‘, செல்வா பதிப்பகம், திருத்தங்கல் - 626130.

6. திருவரங்கம் கலம்பகம் (மூலமும் உரையும்) — டாக்டர் கதி.முருகேசன், சாரதா பதிப்பகம், சென்னை-14, முதற்பதிப்பு 2008

7. தொல்காப்பியம் — முனைவர்.ச.வே.சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு,

பாரிமுனை,
சென்னை.
முதற்பதிப்பு மே 1998

8. நாலாயிர திவ்வியப் பிரபந்தம் (மூலமும் உரையும்) — முனைவர்.இரா.வ.கமலக்கண்ணன்
வர்த்தமானன் பதிப்பகம்
21, இரமகிரு‘ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை-600 017.

9. பன்னிரு திருமுறைகள் — சாரதா பதிப்பகம்
ஜி 4, சாந்தி அடுத்தகம்
ஶ்ரீ கிரு‘ணாபுரம் தெரு
ராயப்பேட்டை
சென்னை-14
முதற்பதிப்பு 2005

10. பாரதியும் சமயமும் — முனைவர் தி.முத்துக்கண்ணப்பன்
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி
முதற்பதிப்பு 1990

11. பாரதியார் பாடல்கள் — பூம்புகார் பிரசுரம்
15, மன்னார்சாமி
கோயில் தெரு
சென்னை-600 013.
முதற்பதிப்பு 1976

12. பெரியாழ்வார் — முனைவர் மு.தேவி
கலைஞன் பதிப்பகம்
19, கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை-600 017.

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

பேராசிரியர் முனைவர்

ந சுப்பு ரெட்டியார்




# பாண்டியன் பரிசு

## - ஒரு மதிப்பீடு



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

# ந.சுப்புரெட்டியாரின் ‘பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு’ குறித்த பார்வை

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முதுகலைத் தமிழ்

இலக்கியப் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் திட்டக்கட்டுரை


**ஆய்வாளர்**

**கி.தாரணி**

**பதிவு எண் : P18100416**

**நெறியாளர்**

**முனைவர் மு.ஜெயலட்சுமி, எம்.எ., எம்.பில்., பி.எச்.டி.,**

**உதவிப்பேராசிரியர்**

**தமிழாய்வுத்துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**



**தமிழாய்வுத் துறை**

**காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**தேசியத் தர நிர்ணய மறுமதிப்பீட்டில் (மூன்றாம் சுற்று)**

**A தகுதி (CGPA 3.41/4) பெற்றது**

**திருச்சிராப்பள்ளி – 620 018**

**மார்ச் - 2020**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.அ | - | உரையாசிரியர் |
| குறள். எண் | - | குறள் எண் |
| தெ.ஆ | - | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ. எண் | - | நூற்பா எண் |
| நூற் | - | நூற்றாண்டு |
| பா.அ | - | பாடல் அடி |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| ப.எ | - | பக்க எண் |
| பா. எண் | - | பாடல் எண் |
| மேலது | - | மேலே கூறப்பட்டுள்ள நூல் |

**நன்றியுரை**

பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீட்டில் ந.சுப்புரெட்டியார் குறித்த பார்வை" என்ற தலைப்பில் இத்திட்டக்கட்டுரை எழுத வாய்ப்பளித்த சுப்புரெட்டியாரின் அறக்கட்டளைக்கு எமது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்திட்டக் கட்டுரை எழுத வாய்ப்பளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைத் தமிழிலக்கியம் பயில எனக்கு வாய்ப்பளித்த காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)க்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றேன். எங்களை வழிநடத்திச் செல்லும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் வெ. சுஜாதா அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும் எம் தமிழாய்வுத் துறைத் தலைவர் முனைவர் ச. இராமலட்சுமி அவர்களுக்கும், இவ்வாய்வுக்கட்டுரை சிறப்பாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆய்வுத் தொடர்பான அறிவுரைகளை வழங்கி என்னை வழிநடத்திச் சென்று கட்டுரையைச் செம்மைப்படுத்திய எம் நெறியாளர் முனைவர் மு.ஜெயலெட்சுமி அவர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் படைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த காமாட்சி அம்மாள் உதவித்தொகை, நல்கிய ந.சுப்புரெட்டியர்ர் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையினருக்கும் எம்.நெஞ்சார்ந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன். ஆய்வுக் காலத்தில் எனக்கு ஊக்கமளித்த தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எம் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக் காலத்தில் எனக்கு விளக்கமளித்த தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எம் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்விற்குத் தேவையான புத்தகங்களை வழங்கிய கல்லூரி நூலகத்திற்கும், இவ்வாய்வேட்டினை தட்டச்சு செய்து கொடுத்த சகோதரி. ப. சரண்யாவிற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் ஆய்வுக்காலத்தில் எனக்கு உதவியாக இருந்த எனது தந்தைக்கும், தாய்க்கும் மற்றும் என் சகோதரர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மற்றும் எனது ஆய்வை விரைவில் முடிக்க உற்சாகம் தந்த நண்பர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்

## முன்னுரை

ந. சுப்புரெட்டியார் 27.08.1916 அன்று பிறந்தார். இவரது 86 வயதில் எம்இ ஏ௬ பிஇஎஸ்சிஇ எல்பி வித்துவான். பிஎச்.டி பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளி நிறுவனர் தலைமையாசிரியராகவும் (1941 -50) காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூாயில் தமிழ்ப்பேராசிரியர் துறைத்தலைவராகவும் (1950-60) பதினேழு ஆண்டுகள் திருவேங்கடன் பல்கலைக் கழகத்தில் நிறுவனர் பேராசிரியர் துறைத்தலைவராகவும் (1960-77) பணியாற்றி ஓய்வுபெற்றார்.

அதன் பின்னர் பல எண்ணற்ற நூல்கள் வெளியிட்டார். இவர்தம் அறிவியல் நூல்களைப் பாராட்டிக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் அருங்கலைக்கோன் என்ற விருதினையும் அளித்தது. இவர் தமிழ் பணியை பாராட்டி தமிழக அரசு திரு.வி.க விருதினையும் பெற்றார். இதனைப் போன்று பல விருதுகளையும் பெற்றார். கலைமாமணி விருது, வைணவ இலக்கிய மாமணிவிருதுஇ 2001இல் டிலிட் கண்ணியம் என்ற விருதும் 2001 ல் விரைபல விருதுகளை பெற்று உள்ளார்.

இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்பியல்கள் ஆகும். நு. சுப்புரெட்டியார் மதிப்பீடு செய்த பாண்டியன் பரிசையே எனது திட்டக் கட்டுரையாக ஆய்வு செய்துள்ளேன் இதில் தான் இழந்த பாண்டியன் பரிசை ஒரு பெண் அதனை எப்படி கைப்பற்றுகிறாள் என்பதே இக்கதையின் கருத்தாகும்.

### ஆய்வுத்தலைப்பு

ந.சுப்புரெட்டியாரின் "பாண்டியன் பரிசு" ஒரு மதிப்பீடு – குறித்த பார்வை.

### ஆய்வு நோக்கம்

ஒரு பெண்ணாக பிறந்து தனக்கான உரிமையை எவர் தடுத்தாலும் அதனை எதிர்த்து அதனை தனக்குச் சொந்தமாக்கி கொள்ளும் ஒரு பெண்ணின் துணிச்சலை அனைவருக்கும் வெளிப்படுத்துவதே ஆய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:**

பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு தொடக்கம் முதல் இறுதி வரையிலும் மற்றும் பாரதிதாசன் படைப்புகள் சிலவற்றை ஆய்வு எல்லையாகக் கொண்டுள்ளேன்.

**ஆய்வு முறை**

ஆய்வுக்கட்டுரை பகுப்பு முறைத் திறனாய்வு மற்றும் விளக்க முறைத் திறனாய்வு அடிப்படையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

**ஆய்வு பகுப்பு:**

முன்னுரை முடிவுரை நீங்கலாக இவ்வாய்வுக்கட்டுரை மூன்று இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**இயல் ஒன்று:**

இவ்வியல் பாண்டியன் பரிசில் வரும் கதைமாந்தர் பற்றியும் அவர்களின் தன்மைகள் குறித்தும் விளக்குகிறது.

**இயல் இரண்டு**

இவ்வியல் பாண்டியன் பரிசு என்னும் கதையின் சுருக்கத்தை படிப்பவர்களின் மனதில் எளிதில் நிற்க்குமாறு விளக்குகிறது.

**இயல் மூன்று**

மூன்றாவதாக இவ்வியல் பாவேந்தர் பாரதிதாசனின் கவிப்புலமை பெண்களின் எழுச்சிஇ முன்னேற்றம்இ பாரதிதாசன் பன்முகப் பார்வை ஆகியவற்றை ஆராய்கிறது.

**முதன்மை ஆதாரம்:**

பாண்டியன் பரிசு ஒரு மதீப்பீட்டில் ந. சுப்புரெட்டியாரின் “பாண்டியன் பரிசு” ஒரு மதீப்பீடு – குறித்த பார்வை முதன்மை ஆதாரம் ஆகும்.

**துணைமை ஆதாரம்**

பாண்டியன் பரிசு மூலஉரை மற்றும் பாவேந்தர் பாரதிதாசனின் சமூக கருத்துக்களை ஆராய்ந்த கட்டுரை நூல்கள் துணைமை ஆதாரமாகும்.

# இயல் -1

## கதைச்சுருக்கம்

**முன்னுரை:**

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் எளிமையாகவும், நயமாகவும், பாண்டியன் பரிசு எனும் காவியத்தை படைத்திருக்கிறார். அக்காவியத்தை மிக சுவையாகவும் நேர்த்தியாகவும் மதிப்பிட்டுள்ளார் ந. சுப்புரெட்டியார் என்றால் மிகையாகா. இங்ஙனம் எக்காலத்தில் படித்தாலும் படிப்பவர் மனதில் ஆழமாய் பதியும் சுவைமிகு இக்காப்பியத்தின் கதைச்சுருக்கத்தினை முன்வைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

**கதைச்சுருக்கம்:**

கதிரை வேலன் என்ற மன்னன் கதிர் நாட்டை செல்வச் செழிப்புடன் ஆண்டுவந்தான். இவரின் மனைவி அரசமா தேவியான கண்ணுக்கினியாள். மகள் அன்னம் ஆகியோர்களுடன் நாட்டு மக்களையும் நாட்டையும் நன்முறையில் ஆட்சி செய்து வந்தான்.

தீடீரென்று வேழநாட்டின் படைகள் கதிர் நாட்டினைத் தாக்குகின்றன. ஆனால் வேழ நாட்டின் மன்னன் இதற்குக் காரணம் இல்லை. வேழ நாட்டின் படைத்தலைவனாக இருந்த நரிக்கண்ணன் கண்ணுக்கினியாளின் சகோதரதான் இதற்குக் காரணம். அவன்தான் வேழ மன்னனுக்குத் தூண்டுகோலாக இருந்து படையெடுக்கச் செய்தான்.

இங்ஙனம் நடைபெற்ற தாக்குதலில் கதிர்நாட்டின் மன்னன் கதிரைவேலனை நரிக்கண்ணன் மறைந்து நின்று ஈட்டியினால் குத்திக் கொன்று விடுகிறான். மனைவியுமான கண்ணுக்கினியாளையும் சகோதரி என்று பாராமல் வெட்டிக் கொள்கிறான். பின்னர் அரண்மனையில் உள்ள பாண்டியன் பரிசான பெட்டியினைக் கைப்பற்றி அப்பெட்டியினைத் தன்னுடையது வீரன் என்று எண்ணி ஒருவனிடம் தருகின்றான்.

நாட்டின் மன்னனும் அரசியும் கொல்லப்பட்டதைப் பார்த்து அரசியின் பணிப்பெண் ஆத்தா என்னும் கிழவி இளவரசியான அன்னத்தினை நிலவரை வழியாக தன்னுடைய மறைவான இடத்திற்கு அழைத்துச் சென்று விடுகின்றனர். நாட்டில் நடந்த வஞ்சகமான போர் நிகழ்வுகளை வேழ மன்னன் அறிகின்றான்.

ஆனால் நரிக்கண்ணன் அதற்குள் வேழ மன்னனைச் சந்தித்து இந்த நாடு தங்களுடைய முன்னோர்களுடையது. கதிரைவேழனின் முன்னோர் இதனை வஞ்சகமாகக் கவர்ந்து கொண்டுவிட்டனர் என்றும் தான் இந்த நாட்டினை அடைய தந்தையின் இறுதி ஆசை என்றும் மன்னன் நம்பும் படியாகக் கூறுகின்றான்.

இதனை நம்பிய வேழ மன்னன் கதிர்நாட்டின் மன்னனாக நரிக்கண்ணனுக்கு முடி சூட்டுகின்றனர். இதனை அறிந்த அன்னமும் ஆத்தாவும் துடிக்கின்றார்கள். நாட்டின் உரிமையினைப் பேசக் கூடிய அந்தப் பாண்டியன் பரிசான பெட்டியினை நரிக்கண்ணனிடம் வாங்கியவன் வீரப்பன் என தெரிய வருகிறது. அவன் திருடன் என்ற அச்சமும் தோன்றுகிறது. இவன் ஆத்தாவின் கணவன் தன்னிடம் கிடைத்த பெட்டியினைத் தன் நண்பர்களிடம் காண்பித்து இது அன்னத்திற்குரியது என்கிறான். அவளிடம் ஒப்புடைக்கும் வரை அப்பெட்டியினைப் பாதுகாக்க வேண்டும் எனத் திட்டமிடுகின்றான்.

அன்னமும் ஆத்தாவும் மறைந்த பகுதியான புல்லூர் குடிசையை நரிக்கண்ணனின் வேலையாட்கள் வளைக்கின்றார்கள். ஆத்தாவின் மகன் வேலன் தன்னுடைய ஆசிரியர் சீனிகணக்காயரின் கட்டளையினை ஏற்று ஆத்தாவையும், அன்னத்தினையும் காப்பாற்றுகின்றான் தப்பிய ஆத்தாவும், அன்னமும் வேழ மன்னனைச் சந்தித்து உண்மையினை உணர்த்தி பாண்டியன் பரிசினையார் கொண்டுவருகின்றார்களோ அவர்களை மணந்து கொள்வேன் என்று கூறுகின்றாள்.

நாடு முழுவதும் அன்னம், வேலன், நரிக்கண்ணன், கணக்காயன் மற்றும் அவனின் மாணவர்கள் பெட்டியைத் தேடத் தொடங்கினர். இதனால் மக்களுக்குப் பல இன்னல்களையும், துன்பங்களையும் நரிக்கண்ணன் தருகின்றான். இதனால் மக்கள் அனைவரும் நரிக்கண்ணனை பார்த்து அஞ்சுகின்றனர். இது மட்டும்

இல்லாமல் பூதம் என்ற ஒன்றைக் கொண்டும் மக்களைப் பயங்கொள்ளச் செய்கின்றான். இதனை வீரப்பனும் ஒரு பூதத்தினை நரிக்கண்ணன் அஞ்சும்படி அனுப்புகின்றான்.

இடையில் வேலன், அன்னம் இருவரின் மனதில் அன்பு என்னும் கோட்டையினைக் கட்டுகின்றனர். ஒருவரையொருவர் விரும்புகின்றனர் பெட்டியினைத் தேடும் போராட்டத்தில் பல வருடங்களாகப் பிரிந்திருந்த ஆத்தாவும் வீரப்பனும் இணைகின்றனர். ஆனால் அப்போராட்டத்தில் தங்களுடைய காலிணையும், கையினையும் இழக்கின்றனர்.

பின்னர் வீரப்பன் உதவியுடன் நரிக்கண்ணனின் சூழ்ச்சிகளை வீழ்த்தி நரிக்கண்ணனை மாய்த்து வேலன் எடுத்த பெட்டியினால் அன்னமும், வேலனும் இணைந்து இல்வாழ்க்கையினையும், முடியாட்சினையும் மகிழ்கின்றனர் என்று சுப்புரெட்டியார். பாண்டியன் பரிசினை அனைவரும் எளிதில் புரிந்துக் கொள்ளும் படியாக அனைவர் மனதிலும் நீங்காத இடம் பெறும்வகையில் காவியத்தை படைத்து உள்ளார்.

**நரிக்கண்ணன் கதிர்நாட்டின் மீது படையெடுப்பு:**

உலகின் ஒரு பகுதியாக அமைந்த அழகு மிகுதியாகக் கொண்டிருந்த கதிர் நாட்டினைப் போரில் வெல்ல கருதி வேழநாட்டினுடைய ஆற்றல் மிகுந்தப் படைகள் புறப்பட்டு வந்தன.

> **“சீர்மிகுந்த கதிர்நாட்டின் மேலே அந்தத்**
> **திறல் மிகுந்த வேழநாட்டுப்படைகள்**
> **போர் தொடுக்கப் பாய்ந்தனவாம் கடலைப்போலே**
> **பொன்னொளியைப் பாய்ச்சுகின்ற தேர்ப்ப”[1]**

பெரும்படைகள் கதிர்நாட்டினை நோக்க கடலினைப் போன்று பாய்ந்து தாக்குவதற்கு வந்தன. அப்படிச் சூழ்ந்து வந்த படைகளில் பொன் ஒளியினை எங்கும் பரப்புவதும் போன்று தோற்றம் செய்தன. யானைப் படைகள் கழுத்தில்

அடர்ந்து வளர்ந்துள்ள முடிகள் அசைந்தும் ஆடும் வகையிலான குதிரைகள் நிறைந்த படைக்கருவிகளைச் சுமந்து கொண்டிருந்த காலாட் படைகள் என்ற அனைத்து வகையான படைகளும் ஒன்றாக பூவுலகில் திரண்டதனைப் போன்று மிக வேகமாக வந்து கொண்டு இருந்தன.

**"அழகியஅக் கதிர்நாட்டுக் கோர் காதத்தில்**
**அவ்வேழப் படைநெருங்கும் காட்சி தன்னை**
**வழிஇமைத்தல் இல்லாமல் வேவு பார்ப்போர்**
**விண்ணுயர்ந்த மதிலின்மேல் நின்று பார்த்தார்"** [2]

கதிர்நாட்டினைச் சேர்ந்த உளவாளிகள், கதிர்நாட்டின் வானுயர்ந்த மதிலின் மீது ஏறிநின்றபடி கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர். உடனடியாக வார்த்தைகளையும் முரசுகளையும் வேகமாக ஒலித்து எந்தவிதமான பழிகளும் இல்லாத தம்முடையதாய் நாட்டின் மீது வேழநாட்டினுடைய எல்லாப் படைகளும் வந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தியினை நாட்டில் உள்ள அனைவரும் தெரிந்து கொள்ளும் படியாக அறிவித்தனர். இச்செய்தியினைக் கேட்டவுடன் கதிர்நாட்டினுடைய போர் வீரர்கள் கோபத்துடன் எதிரிகளை நோக்கி எழுந்தனர்.

**"இந்நாட்டை உன்அண்ணன் பெறநினைத்தான்**
**என்படையின் தளர்நிலையை அவனையல்லாமல்**
**பின் எவரும் அறியாரே உடன்பிறந்தான்**
**பெரும்பகைவன் எனக்கு நெடுவைய மீதில்**
**அணிமலர் சோலைவிட்டே அரண்மனைக்குள்**
**ஆடிவைத்தாள் நொடிப்போதில் நிலைமைகண்டாள்"** [3]

கதிர் நாட்டின் மன்னனான கதிரை வேழனும் அவருடைய மனனவியான கண்ணுக்கிளியாள் இருவரும் சதிர்விளையாடிக் கொண்டு இருந்தனர். இவர்களின் படைத்தலைவன் வந்து வேழ நாட்டின் மன்னன் ஒரு காத தூரத்தில் படை எடுத்து வருகின்றான். இதனை கேட்டு இருவரும் அதிர்ச்சியும் கோபமும் அடைகின்றனர்.

மன்னனும் அரசியும் தனித்தனியே போருக்குத் தேரில் செல்கின்றனர்.

**அன்னமும் ஆத்தாளும்:**

அன்னம் அரண் மனைக்குள் நுழைகின்றாள் அப்போது குதிரைகள் சத்தமும் யானை பிலிரும் சத்தமும் தோ்கள் நகரும் சத்தம் மற்றும் போா் வீரா்களின் வாள் சத்தமும் கேட்டு அஞ்சினாள்.

**“என் ஆத்த என் செய்வேன் என்றாள் மங்கை**
**எதிர்நின்ற அக்கிழவி இயம்புகின்றாள்**
**உன்மாமன் படைசூட்டி வந்தான் பொண்ணே**
**உன்பெற்றோர் வாள்தூக்கு ஒடியுள்ளார்”** [4]

என்தாயே நான் என்ன செய்வது என்று அன்னம் கேட்டாள். அக்கிழவி அன்னத்திற்குப் பதிலாக உன்னுடைய மாமனான நரிக்கண்ணன் தான் படையினை அழைத்து வந்துள்ளான் பெண்ணே உன்னுடையதாயும் தந்தையும் வாள் ஏந்திப் போருக்குச் சென்றுள்ளார்கள். இந்த நிலையில் இறக்கைகள் முளைத்திடாத இளம் பறவையினைப் போன்று அன்னமே நீ ஏன் போர்க்களம் செல்ல நினைக்கின்றாய் காத்திரு என்ன நடக்கிறது எப்படி முடிகிறது என்று பார்க்கலாம். கரும்பின் சாறு போன்றவளான அன்னமே நீ இங்கு வந்து அமர்ந்திரு வாயாக என்று அழைத்துத் தன் கைகளில் அணைத்துக் கொண்டாள் கிழவி.

**வேழ மன்னனின் நிலை:**

வேழ நாட்டின் மன்னனும் கதிர்நாட்டின் மன்னனும் கடுமையாக போர்செய்துக் கொண்டு உள்ளனா் அந்நேரத்தில் நரிக்கண்ணன் தன் வஞ்சக செயல்களை செய்யத் தொடங்குகின்றான். மன்னனைக் கொல்ல

**“அன்றிருந்த என்கருத்தில் பாதி தீர்த்தேன்**

**அவன் ஒழிந்தால் முக்காலும் திரும்பின்னும்**
**அன்னத்தைக் கொன்றொழித்தால் முழுவதும் தீரும்**
**அதன்பிறகன் றோஇந்த நாட்டின் ஆட்சி''** [5]

தூரத்தில் நின்று கொண்டிருந்த நரிக்கண்ணன் இனி வழியினை எதிர்த்தபடி, தன்னுடைய மனதில் நான் நினைத்தபடி இப்போது மன்னனைக் கொன்றதனால் பாதி வேலைமுடிந்து விட்டது. என் சகோதரி கண்ணுக்கினியாளையும் கொன்றுவிட்டால் முக்கால் சதவீதம் வேலை முடிந்து விடும். கடைசியாக இவர்களுடைய ஆட்சிப் பொறுப்பு, எப்பொழுதும் உன்னுடைய கையில் நிலையாக இருந்துவிடும் என்று நினைத்துக் கொண்டிருந்தான்.

**''கொலைவாரும் கையுமாக அரசி வந்தால்**
**கொண்டவனைப் பிணமாகக் கண்டாள்**
**நிலைகலங்கி நின்றிட்டாள் வீழ்ந்த தோநின்**
**நெடுமேனி வீழ்ந்ததோ கதிர்நா டிந்தாள்''** [6]

வடக்கு வாசலைநோக்கி வேகமாகக் குதிரையில் கையில் கொலைவாளுடன் வந்த அரசி தன்னுடைய கணவன் கதிரை வேலன் பிணமாக வீழ்ந்து கிடக்கின்ற காட்சியினைப் பார்த்தான். இதனால் அவருடைய மனம் மிகவும் கலங்கியது. அப்படியே நின்று, உங்களுடைய உடல் வீழ்ந்து விட்டதா? இந்த நாளில் நாம் கதிர் நாட்டினை இழந்து விட்டோமோ? நீ இறந்து விட்டாய் என்கிற செய்தியை நாட்டு மக்களுக்கு தெரிந்நதால் அவர்கள் படும் துன்பங்களுக்கு எங்ஙனம் ஆறுதல் கூறுவது என்று புலம்புகிறாள்.

**''உயிர்போன்றாய் உடன்பிறப்பே என்றன் ஆவி**
**உடலைவிட்டுப் போவதுமெய் வையகத்தில்**
**துயர்தாங்க அட்டியில்லை எனைஇ கழிந்து**
**சொல்லுமோர் சொல்லையும்நான் பொறுக்க துண்டோ?''** [7]

என்னுடைய உயிர் போன்ற தங்கை கண்ணுக்கினியாளே பிரியப் போவது உண்மைதான் உலகத்தில் துன்பத்தினைத் தாங்கிக் கூடிய பொருள் எதுவும்

இல்லை. என்னை இழிவாக யாராவது பேசும் போன்றவன் நரிக்கண்ணன் என்று கூறிக் கொண்டே கண்ணுக்கினியாளை தன் இடையில் வைத்து இருந்த உடைவாளால் அவளையும் குத்திக் கொன்றுவிடுகின்றான்.

அதன் பின்னர் அன்னத்தை கொல்ல அரண்மனைக்கு செல்கிறான் அதற்குள் கிழவி நிலவரை வழியாக தான் தங்கி இருக்கும் புல்லூர் என்னும் இடத்திற்கு கொண்டு சென்று காக்கின்றான்.

**வீரப்பன் என்னும் திருடனிடம் பெட்டி கிடைத்து பாதுகாத்தல்:**

நரிக்கண்ணன் அன்னத்தைக் கொல்ல அரன்மணைக்கு வந்து அவளை தேடுகின்றான். அதன் பின்னர் புரிந்துக் கொள்கிறான். அன்னத்தை காப்பாற்றி ஆத்தாள் அழைத்து சென்று விட்டாள் என்று உறுதி செய்த பின்னர் தங்கபெட்டியை தேடுகிறான்.

அது பாண்டியன் பரிசு. எப்படியாவது எடுத்து விட வேண்டும் என்று எண்ணிய அவன் பெட்டியை எடுத்து தன் அருகில் இருந்த ஒருவனிடம் கொடுத்து தனது தேர் ஓட்டியான குப்பனிடம் கொடுத்து ஒப்படைக்கும் படி கொடுத்து அனுப்புகின்றான்.

பெற்றவனோ வீரப்பன் என்கின்ற திருடன். அவன் தன் நண்பர்களிடம் இப்பெட்டியைக் காட்டி இதன் புகழ் சிறப்பு ஆகியவற்றை கூறுகின்றான். அப்போது வீரப்பன் அப்பெட்டியை சரியான நேரத்தில் அன்னத்திடம் கொடுக்க வேண்டும் என்று வீரப்பன் ஒரு மறைவான இடத்தில் பெட்டியை புதைத்து விடுகின்றாள். அதன்பின் வீரப்பன் அவர்களுக்கு அதாவது அன்னத்திற்கு எவ்வாறு உதவுவது என யோசனை செய்து கொண்டு உள்ளார்.

**நரிக்கண்ணன் அன்னத்தை கொல்வதற்குத் திட்டமிடல்:**

நரிக்கண்ணன் அன்னத்தை எப்படியாவது கொன்றுவிட வேண்டும் என்று எண்ணி ஆட்களை அனுப்புகின்றான் அவர்கள் புல்லூர் குடிசையை நோக்கி குதிரைகள் போல் வேகமாக வருகின்றனர்.

**'புல்லூற் சிறுகுடிசை தனில் இரண்டு**
**புண்பட்ட நெஞ்சங்கள் ஒன்றையொன்று**
**நல்லுரையில் தெற்றியிருந்த தன அவற்றில்**
**நரைபட்ட ஆத்தாளின் நெஞ்ச மொன்று**
**வல்லுறு குறிவைத்த புறாப் போல் வாழும்**
**மலர்க்கொடியாள் அன்னத்தின் உள்ளமொன்று'[8]**

புல்லூரில் உள்ள ஒரு சிறிய குடிசையினில் துன்பத்தினால் நொந்து போன நிலையில் கிடந்த இரண்டு தங்கங்கள் ஒன்றுக் கொன்று ஆதரவாகும் பேசிக் கொண்டிருந்தன. அவைகளில் ஒன்று வயதான ஆத்தா கிழவியின் மனம் மற்றொன்று பருந்தினால் குறிவைத்துத் துரத்தப்பட கூடிய புறாவினைப் போல வாழ்ந்து கொண்டிருக்கக் கூடிய மலர்க் கொடியான அன்னத்தின் மனமாகும் என்று சொல்லி கண்ணீர் விடுகின்றாள்.

படைவீரர்கள் அவர்களை தாக்க வந்து கூரையை சுற்றி வலைத்து தாக்குகின்றனர். அதற்கு அஞ்சுகிறாள் அன்னம் ஆத்தாள் அவனைக் காப்பதற்கு ஒரு ஆண்மகன் உருவம் போல் ஆடை அணிவித்து அவரும் ஒரு முதியவர் போல வேடம் இட்டுக்கொண்டு தன்னை காப்பாற்றிக் கொள்ள ஆயத்தம் செய்கின்றனர்.

**மன்னனிடம் தெரிவித்தல்:**

அன்னம் ஆத்தாள் இருவரும் வீரர்கள் இடம் இருந்து தப்பி கணக்காயனை சந்திக்க போய் கொண்ட இருக்கின்றனர். அந்த வழியில் கணக்காயனின் மாணவர்கள் அன்னத்தினையும் ஆத்தாவையும் நீங்கள் எங்கு இருந்து வருகிறீர்கள் என்று கேட்க

**''பலகுதிரை மறவரின்மேல் வேலன் எட்டிப்**
**பாய்ந்தனன்பல் ஆடுகட்குள் வேங்கைபோலே**
**கலங்கினர்வே ழுவர்பத்துப் பேர்மாண்டார்கள்**
**கத்திசூழல் ஓசைமற வர்மு ழக்கம**

**நிலையுணர்ந்தாள் அன்னத்தை நோக்கி அங்'கு**
**நிகழ்கின்ற போர்நோக்கம் நிகழ்ந்திப் பின்னர்'' [9]**

பல குதிரைகளில் வந்து கொண்டிருந்த எதிரிகளை வேலன் எட்டிப் பாய்ந்து தாக்கிய காட்சியானது பல ஆடுகள் உள்ள கூட்டத்தினில் சிங்கம் பாய்ந்து தாக்குவதைப் போல இருந்தது இவனது பாய்ச்சலைக் கண்டு பகைவர்கள் இவனது தாக்குதலில் இறந்தும் விட்டார்கள். வேலனின் கத்தி சூழல்கின்ற ஓசையானது பகைவர்களின் குலை நடுங்கும் படியான பயத்தினை ஏற்படுத்தின. உள்ளே குடிசையில் இருந்த ஆத்தாவிற்கு வேலனின் குரல் கேட்டது. வெளியில் வந்து அந்த நிலைமையினை உணர்ந்தான். பின்னர் அன்னத்திடம் இந்த நிலையினைப் பற்றி எடுத்துக் கூறினாள்.

அதன் பின்னர் இருவரும் கணக்காயயையும் சேர்ந்து மன்னனை காணச் செல்கின்றனர். நரிக்கண்ணன் செய்த செயல்களை எல்லாம் தெளிவுபட்ட கூறுகின்றனர். நீங்கள் யார் சென்று மன்னன் கேட்க ஆத்தாவும் அன்னமும் தனது வேடத்தை கலைக்கின்றனர். அதன் பின்னர் மன்னன் தான் செய்தது தவறு என்பதனை புரிந்துக் கொண்டான். பின்னர் அன்னத்தை காப்பாற்றும் பொறுப்பு என்று ஏற்றுக்கொண்டு நரிக்கண்ணை அழைத்து வர ஆணையிடுகின்றார்.

**வேழமன்னன் நரிக்கண்ணனை கண்டித்தல்:**

நரிக்கண்ணன் மன்னனை காணவரும் இடத்தில் ஆத்தாவும் அன்னமும் அங்கு இருப்பதை பார்த்து அதிர்ச்சி அடைகின்றான் அதன்பின் மன்னன் இடம் தன்னை பற்றி இருப்பார் என்பதை உணர்கின்றான். மன்னன் நரிக்கண்ணனை கண்டித்தல்

**''முன்னறிவாய் என்தோளின் வாளின் சீற்றம்**
**பிழைசெய்து தேன் என்று மன்னன் கேட்டாள்**
**முன்னறியும் அறிஞர்க்கு முதல்வாரன**
**மூதறிஞரே முழுதும் அறிவீர் என்னை'' [10]**

நரிக்கண்ணா உன்னுடைய ஆசையின் காரணமாகவும் வஞ்சகத்தின் காரணமாகவும் இந்தப் பெண்ணான அன்னம் தன்னுடைய நாட்டினை இழந்தாள். தன்னுடைய தாயினையும் தந்தையினையும் உடமைகள் மரியாதைகள் ஆகிய அனைத்தையும் இழந்து நிற்கின்றாள். அன்னத்தினையும் கொல்ல நினைக்கின்றாய் ஆத்தாவையும் கொன்றுவிட்டாய் பாண்டியன் பரிசினையும் திருடிவிட்டாய். இனிதான் தெரிந்து கொள்ளப் போகின்றாய் என்னுடைய வாளின் கோபத்தினை என்கிறான் மன்னன்.

**“அன்னத்தைக் கொலைபுரிதல் இல்லை அந்தோ**
**ஆத்தாவைக் கொலைபுரிதல் இல்லை அந்தப்**
**பொன்னொத்த பேழையினைக் கண்டதில்லை**
**பொய்யுரைப்பதாய் இல்லை இதையும் கேட்டீர்”** [11]

அன்னத்தினைக் கொலைபுரியும் எண்ணம் எதுவும் எனக்குக் கிடையாது. அய்யோ ஆத்தாவையும் நான் கொலை செய்ய வில்லை. மேலும் அந்தத் தங்கத்தினால் செய்த பெட்டியினையும் நான் காணவில்லை. நான் எதுவும் உங்களிடம் பொய்யாகவும் சொல்ல வில்லை. மேலும் நான் சொல்வதினையும் கேளுங்கள். தன்னுடைய முகத்தில் உள்ள தன் கன்னப்பகுதினை அவளுடைய நகங்களே கீறிடாது அப்படித்தான் இந்தத் கதிர் நாட்டினை என்னுடைய மைத்துனன் தான் இவள் அவனை மனம் செய்து கொண்டு பின்னர் இந்த நாட்டை ஆளட்டும் என்று கூறினான்.

**அன்னத்தின் திருமணமுடிவு:**

மன்னன் நரிக்கண்ணன் கூறியதை ஆராய்ந்து அன்னத்திடம் இந்த திருமண முடிவிற்கு உனது எண்ணம் என்னவென்று கேட்க அன்னம்.

**“முன்பாண்டு வையத்தில் முறைநடாத்தி**
**முத்தாண்டான் எனும்பெயரை நிலை நிறுத்தம்**

**தென்பாண்டி நாட்பான்பால் என்மூ தாதை**

**சிறைச்சோழனை வென்று, பெற்றதான**

**என்பாண்டியன் பரிசை எனக்களிப்போன்**

**எவனெனினும் அவனுக்கே உரியோள் ஆவேன்**

**அன்பாண்டாரே இது என் உறுதியாகும்**

**அருள்புரிய வேண்டுமென்றாள் தெருள்உள்ளத்தாள்"** [12]

முன்னர் பாண்டுவின் உலகத்தில் முறைசெய்த முத்தாண்டான் என்கிற தன்னுடைய பெயரினை நிலைநிறுத்தி தென் பாண்டி நாட்டின் மீது படையெடுத்து வந்த சோழனை வென்றதும் என்னுடைய முன்னோர்கள் அதற்குப் பரிசாகப் பெற்ற பாண்டியன் பரிசான அந்தப் பெட்டியினைத் தேடிக் கொண்டு வந்து எனக்குப் பரிசாகத்தரக் கூடியவன் யாராக இருந்தாலும் அவனே என்னுடைய உரிமைக்குரிய கணவனாக முடியும். அன்பிற்குரியவர்களே. இதுவே என்னுடைய முடிவாகும். இதனை தங்களும் ஏற்று கொள்ள வேண்டும். உங்களுடைய இரக்கமுடைய மனதினால் என்று கூறினாள் அன்னம்.

மன்னனும் இதற்கு செவி சாய்த்த படியாக இத்தகைய செய்தியை அனைவரும் தெரிந்துக் கொள்ளும் படியாக முரசு அறிவித்து கூறுகிறான். இதனால் மக்கள் அனைவரும் பாண்டியன் பரிசினை தேடத் தொடங்குகின்றனர்.

**நரிக்கண்ணனின் சூழ்ச்சி:**

நரிக்கண்ணன் இதனைக் கேட்டவுடன் பலவிதமான கேள்விகளை எல்லாம் கேட்கத் தொடங்குகின்றான். அதற்கு அன்னம எந்த நிலையில் இருந்தாலும் ஏற்றுக் கொள்ள தயார் என்று சொல்லி அந்த இடத்தில் இருந்து சென்று விடுகிறாள்.

நரிக்கண்ணன் நானும் தேடுகிறேன் என்றுக் கூறி மன்னன் இடம் உத்தரவுப் பெற்று புறப்படுகின்றான் அதனை எல்லாம் அருகில் இருந்து கேட்டுக் கொண்டிருந்த மன்னனின் பரிசு பற்றி வினவினான். அதற்கு அன்னம் கூறியது ஒன்றாக

அமைகிறது. எப்படி யாவது நரிக்கண்ணன் புதுப்புது சூழ்ச்சியை கையாளுகின்றான்.

**அன்னம் பேழையை பற்றிய அடையாளத்தை கூறுதல்:**

அன்னம் தனக்கு உரிமையான பேழையை அடைவதற்கு எண்ணுகிறாள். எனவே அரசனும் அந்த பேழையின் அடையாளங்களைக் கூறுகின்றாள்.

**“என்பேழை மன்னவரின் வாளின் நீளம்**
**உள்அகலம் மூன்று உயரம் றாற்சான்**
**ஒளிதிகழும் கிளிச்சிறைப்பொன் தகடு தன்னால்**
**வெளிப்புறமும் பொதிகைமலை சந்தனத்தின்**
**வெண்பலகை உட்புறமும் காணும் மேலே**
**வெளி அழுந்தும் எழுத்தாலே உள்ளிருக்கும்**
**உயர் பொருள்கள் அத்தனைக்கும் பெயர்கள் காணும்**
**வாள் நகைகள் ஆடைவகை முழுநீளத்தில்**
**வைத்திடுபொற் பட்டயம் பேழைக்கு ருண்டு”[13]**

பேழையின் நீளம் அகலம் அதன் வடிவம் அதில் உள்ள வாளின் அழத்திரை அதன் அளவு மூன்று சான் நன்கு ஒளிவீசும் தன்மைக் கொண்டது. அதில் பொன்னால் செய்யப்பட்ட பட்டையமும் உயர்ரக ஆடையும் உள்ளே வைக்கப்பட்டு உள்ளது. பேழை பொதிகை மலையில் இருந்து கொண்டுவரப்பட்ட சந்தன மரத்தால் செய்யப்பட்டு அதன் மேல் முத்தும், பவளமும் சேர்க்கப்பட்டு இருக்கும். இது அரண்மனையில் தென்பகுதியில் உள்ள அறையில் உள்ளது என்று தனியே சுப்பு ரெட்டியார் சுட்டிக் காட்டுகின்றனர்.

**பாண்டியன் பரிசினைத் தேடுதல்**:

அரசன் ஆணைப்படி “ஆளி” என்னும் படைத்தலைவனும் அவன் கீழ் பல வீரரும் தேடுகின்றனர். அரண்மனைக்குள் ஆத்தாளும் உருமாற்றிக் கொண்டு தக்க படையோடு தேடுகின்றனர். ஆளி பேழை கிடைக்க வில்லை என்று

கைவிரிக்கின்றான். எல்லோரும் வருந்துகின்றனர். பெட்டிதேடும் பொழுது எவரும் வெளியேறக் கூடாது என்பது அரசனது ஆணை மாறு வேடத்துடன் தேடுவோரில் ஒருவனாக இருந்த வீரப்பன் அரண்மனையை விட்டு வெளியேற முயலும்போது ஆத்தாள் அவனைத்தூரத்திச் சென்று அவனது கணுக்காலை வெட்டுகின்றாள். அவனும் அவளது இடக்கையை வெட்டிவிடுகின்றான் அருகருகே விழுந்த இருவரும் புலம்பும் பொழுது ஒருவரை ஒருவா் அறிகின்றனா். இருவரும் பின் தனியாகச் சென்று பாண்டியன் பரிசு குழப்பம் திரும்பும்வரை மறைவாகவே இருக்க வேண்டும் என்று இந்த சிக்கல்கள் தீா்ந்த பின் அன்னத்திடம் இதனை ஒப்படைக்கலாம் என முடிவெடுக்கின்றனா். ஆத்தாள் தன் கணவன் தீய செயலை கைவிட்டு நற்செயலில் ஈடுபடுவதை எண்ணி மகிழ்கின்றாா். பின் வீரப்பன் தன் மனைவியும் மகனுடனும் இல்லாத நிலை எண்ணி வருந்துகின்றனா். பின்பு அங்கு இருவரும் தங்கள் வெட்டப்பட்ட நிலையையும் எண்ணி வருந்துகின்றனா். பின்பு அங்கு இருந்து விலகிச் சென்று விடுகின்றனா் என்று சுப்பு ரெட்டியாரின் கருத்தின் மூலமாக காணமுடிகின்றது.

**அமைச்சன் மகனின் முயற்சி:**

அமைச்சனின் மகன் தான் இந்த நாட்டை ஆழ வேண்டும் என்ற ஆசையும் அன்னத்தின் மீது இருந்த ஆசையினாலும் பெட்டியைத் தேட தொடங்குகின்றான்.

**“சிரித்திருந்த நீலியவன் இரக்க முற்றாள்**
**சிலபேசி நிலாமுற்றம் நீங்கினாா்கள்**
**விரித்திருந்த மெத்தையிலே தனியறைக்குள்**
**மேம்பாட்டுத் தாமரைக்கண் கூம்பற்றான்**
**கிரிச் சென்னும் சுவா்க் கோழி வாயடங்கி” [14]**

எட்டி என்கிற ஒருவனை அழைத்து வந்து நெருப்பு போன்ற கண்களும் கருப்பான முகமும், நீண்ட பல்லும் குட்டையான குரலினையும் நீரில் உள்ள பாம்பு மாா்பின் மீது நெலிந்து கொண்டிருக்கும் படியாகவும், கருப்பான ஓா் உடையும் என்ற நிலையில் பாா்ப்பவா்கள் இது பூதம் என்று நினைத்திடும் வகையின் அவனை

மலையின் மீது எட்டி நின்று கொண்டு ஊர்முழுவதும் அதிர்ச்சி அடையும் படியாகச் சத்தமிட்டுக் கொண்டிருந்தான்.

சீனி என்கிற கணக்காயன் தன்னிடம் படித்துக் கொண்டிருந்த ஆற்றலுடைய சில இளைஞர்களை அழைத்து தான் நினைக்கும் இடங்களிலெல்லாம் தேடச் சொல்லி சோர்வின்றி தேடிக் கொண்டிருந்தார். அன்னம் என்கிறதேன் போன்ற இனிய இதழினை உடையவள் வான் உயர்ந்து வளர்ந்துள்ள சோலைகளில் ஒரு மேடையின் மீது அமர்ந்து கொண்டு நீலியிடம் அந்தப் பெட்டியினை நான் திரும்ப அடையக்கூடிய நாள் வருமா? என்று கேட்டுக் கொண்டிருந்தாள் என்று சுப்புரெட்டியாரின் மதிப்பீடு காண்பிக்கின்றது.

**வேலனால் அன்னமும் நீலியும் காப்பாற்றப்படுதல்:**

அன்னமும் நீலியும் தனது மன துக்கத்தை மறப்பதற்காக படகு பயணத்தை மேற்கொள்ள நினைத்த படகில் பயணம் செய்துக் கொண்டு இருந்தனர். அப்போது புயலின் காரணமாக வெள்ளம் வருகிறது.

**“கண்ணேஎன் கன்னமே நீயோ நீயோ**
**கனிமொழியே நீலியே நீயோ நீயோ**
**மன்னாள நீ பிறந்திருக்க ஆற்றில்**
**மழைப்புணலும் பெருங்காற்றும் உன்னை மாய்க்க**
**ஒண்ணுமோ என்றுரைத்துக் களைப்பு நீக்கி**
**உடைமாற்றிக் குடிநீரும் காய்ச்சித் தந்து**
**தண்ணெனன்று தரையிருக்கும் என்று சென்று**
**தடுக்கிட்டுத் தலையணையும் இடுப்புக்கீந்தே”.** [15]

அவ்வளவுதான் நம்முடைய வாழ்க்கை என்று அன்னமும் நீலியும் அழுதார்கள் கவிழ்ந்துவிடக் கூடிய அபாயமான நிலையில் வந்து கொண்டிருந்த ஓடம் இதனை கரையில் இருந்த ஒரு தாயும் மகனும் காண்கின்றனர். மகன் அவர்களை காப்பாற்ற புறப்படுகின்றான்.

அவர்களை காப்பாற்றி கரைசேர்கின்றான். அன்னத்தினைக் கண்டவுடன் குடிசையிலிருந்து ஆத்தாள் கிழவி மிகுந்த மகிழ்ச்சியில் அவளை அணைத்து கொள்கிறாள். நடந்தவன எல்லாவற்றையும் என்னி வருந்திய பின் அவர்கள் இருவருக்கும் உணவு உண்பதற்கு பல பழங்களை தருகின்றாள் என்று சுப்புரெட்டியார் விளக்கம் கொடுத்து உள்ளார்.

**அன்னம் வேலன் வீரப்பன் ஆகிய மூவரின் உரையாடல்:**

பேழையை எப்படியாவது தாங்கள் கண்டுபிடித்து விட வேண்டும் என்ற எண்ணத்திலும் மூவரும் அவர்களின் தோழன் ஆகியோரும் ஒன்றாக சேர்ந்து திட்டம் தீட்டுகின்றனர்.

**“ஆத்தாவே இவர்யார் என்றன்னம் கேட்டாள்**
**அவன்தான் என்மகன் என்று சொன்னாள் ஆத்தாள்**
**தீர்தவும் கண்ணுடையார் வேழ நாட்டார்**
**சிறைபிடிக்க வருகையில் மறிந்தே எண்ணைக்**
**காத்தாரும் இவர்தாமோ என்றாள் ஆத்தாள்”** [16]

ஆத்தா இவர்யார் என்று தன்னைக் காப்பாற்றியவனைப் பார்த்துக் கேட்டாள் அன்னம் இவன் தான் என்னுடைய மகன் வேலன் என்று பதில் கூறினாள். ஆத்தா வேழநாட்டின் வீரர்கள் என்னைச் சிறைபிடிக்க வந்தபோது வழியில் மறித்துக் காப்பாற்றியது இவர்தானோ என்று கேட்டாள் அன்னம் ஆமாம் அந்தக் கடமையினைச் செய்தது இவன்தான் என்றும் என்னுடைய மானத்தினையும் உயிரினையும் காப்பாற்றிய உங்களை மறக்கவே முடியாது என்று பேசிக் கொண்டு உள்ளனர். அரண்மனையில் யானை வருவதனைப் பார்த்து பூதம் வருகிறது என்று கத்தினான். பாகன் ஒடிச்சென்று வழியில் இருந்த வைக்கோல் ஏற்றிய வண்டியின் இருந்த எருது மீது விழுந்துதான். இதனால் வைக்கோல் முழுவதும் சாய்ந்து விட்டது.

பயத்தினை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பூதங்களையே பயம்கொள்ளும் படியாக நாமும் ஒரு ஐந்து பூதங்களை அவர்களுடன் கொஞ்சி விளையாடும்படி

செய்து விடலாம். நீங்கள் என்ன சொல்கீறீர்கள் என்றான். நண்பண் வீரப்பனும் தேவைப்பட்டால் அதனை செய்துவிடுவோம் என கூறுகின்றார். அங்கே நடப்பதனை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நரிக்கண்ணனுடைய ஆட்கள் எந்த செயல்களை செய்கிறார்கள் என்றும் கண்காணிக்க வேண்டும் என்று கூறுகின்றார் என்று சுப்புரெட்டியர் கருத்துக் காணப்படுகிறது.

**மன்னனிடம் நரிக்கண்ணன் உரையாடல்:**

முன்னனை நரிக்கண்ணன் தனது செயலை சரி என்று சொல்வதற்காக அவர்களிடம் பல விதமான செய்கைகளை கூறி தனது வசப்படுத்தி கொள்ள நினைக்கின்றான்.

**“வேழவனும் அமைச்சகொடு வீற்றிருந்தான்**
**விளக்கமுறு திருமன்றில் உரைக்கலானான்**
**பாழடைந்த இருள் வீட்டில் விளக்கு வானப்**
**பனிப்புகையில் எழுந்தகதிர் அன்னம் என்பாள்”** [17]

மன்னனும் அமைச்சரும் பேசிக்கொண்டிருந்தனர். அன்னத்தின் அழகினை இரவு விளக்கு சூரியன் வானம் ஆகியவற்றிற்கு ஒப்புமை செய்கின்றார். தான் வாழ்வதற்கு தங்களுக்காகப் பாண்டியன் கொடுத்த பரிசு கிடைக்க வேண்டும் என்று அதனைத் தேடி வருந்திக் கொண்டிருகின்றாள். ஆனால் அது கிடைக்க வில்லை நரிக்கண்ணனும் அதனை தேடிக்கொண்டு இருப்பது அவளுக்கு துன்பத்தை தருகிறது.

கதிர் நாட்டினுடைய ஆட்சிப் பொறுப்பு மட்டும் கிடையாது அவருடைய திருமணமும் இப்போது இந்த பெட்டியில் தான் இருக்கிறது என விவாதித்துக் கொண்டு உள்ளனர்.

**“தென்மலையில் தேடுகின்ற கூட்டம் காட்டில்**
**தேடுகின்ற ஒரு கூட்டம் நாட்டில் தேடி**
**இன்னல் விளைத் திருங்கூட்டம் வீடுதோறும்**

**எங்குண்டு பேழை என அதட்டுக் கூட்டம்**
**பன்னுமிசை அனைத்துக்கும் மேற்பார்வைக்குப்**
**பறக்கின்ற தலைவர்களின் தலவனாகிப்**
**சென்று நிலை அறிவான்'' [18]**

தென் திசையில் உள்ள மலையினில் பெட்டியினை ஒரு கூட்டம் தேடிக் கொண்டிருந்தது காட்டில் ஒன்றும் தேடிக்கொண்டு உள்ளனா் நாட்டினுள்ளே தேடி அங்குள்ள மக்களுக்குத் தொல்லைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தது ஒரு கூட்டம் ஒவ்வொரு வீடாகச் சென்று கேட்டு மிரட்டிக் கொண்டிருந்தனா் ஒரு கூட்டத்தினா் இந்தச் செயல்கள் முழுவதும் ஒழுங்காக நடந்து கொண்டிருக்கின்றதா என்று இவா்களை மேற்பாா்வை செய்து பாத்தபடி பரந்து கொண்டிருந்தனா் சில தலைவா்கள் அந்தத் தலைவா்களுக்கும் தலைவனாக இருப்பவன் என்கிற பொறுப்புடன் என்ன நிலை என்று பாா்ப்பதற்கு எல்லா இடங்களுக்கும் கேரினில் ஏறி ஊரெல்லாம் சுற்றிப் பாா்த்துக் கொண்டிருந்தான் என சுப்புரெட்டியாா் உணா்த்தி உள்ளாா்.

**வேலன் பேழையைக் கைப்பற்றுதல்:**

வேலன் மறைக்கப்பட்ட பேழையை கண்டுபிடித்து துணை கைப்பற்றிகின்றான் அதனை அரண்மனைக்கு கொண்டுவரும் நிலையில் எதிா்ப்புகளும் தடைகளும் காணப்படுகின்றகன.

**''கீழ்க்கையடித் தேஒருவன் வேலன் பேழை**
**செல்லுங்கள் என்றுரைத்தான் வேலன் மேலே**
**வாழ்க்கையிலே வன்மணிகள்பாய்ந்த தைப்போல்**
**மறவா்பலா் வாளுருவிப் பாய்ந்திட்டாா்கள்'' [19]**

விசில் அடித்து ஒருவன் வேலன் பெட்டி செல்லுகிறது என்று கூறினான் மீது வாழ்க்கையில் கொடுமையான நோய்கள் பாய்ந்து வந்து தாக்கியதனைப் போன்று வீரா்கள் பலா் வாளினை வருவியபடி பாய்ந்தாா்கள் எந்த விதமான தாமதமும் செய்திடாமல் எதிா்த்து நின்றாா்கள். வேலனுடைய கூட்டத்தில் வந்தவா்கள்

இரண்டு கூட்டத்திலும் நடந்த போரினில் பலருடைய தோளும் தலையும், காலும் என்று தடதடவென்று வீழ்ந்து கொண்டிருந்தன கீழ்க்கடலின் மீது தோன்றிய சூரியன் கவிந்துகிடந்த உடல்களின் இரத்தத்தில் கண் விழித்தான்.

**“இக்கொடிய காட்சியினை வேலன் கண்டார்**
**இதோபாண் டியன்பரிசு தாயே என்ன**
**பொற்கொடி எங்கே என்று விரைந்து கேட்டான்**
**பொன்னனையாள் செங்குருதி இங்கே சிந்த”** [20]

இவர்கள் பேசிக் கொண்டிருக்கின்ற போதே அங்கே வந்து வேலன் இந்தக் கொடுமையான காட்சியினைப் பார்க்கின்றான் இதோ பாண்டியன் பரிசான பெட்டி அம்மா என்ன நடந்தது அழகான பொற்கொடியினை போன்ற அன்னம் ̇ எங்கே என்று வேகமாகக் கேட்டான் தங்கத்திடும்படியாக அவனைக்குத்திக் கொன்று மனத்தினைப் பட்டுப்போன புன்னைமரத்தின் அடியில் புதைத்துள்ளார்களோ என்று கூறினாள். ஆத்தா கூர்மையான நூறு வேல்களும், நூறு அம்புகளும் சுருக்கென்று இயத்தில் பாய்ந்தது போன்று துடித்தான் வேலன் என்று சுப்புரெட்டியார் குறிப்பின் மூலம் காணப்படுகிறது.

**வேலன் அன்னத்தின் திருமணம்:**

பேழையுடன் வந்த வேலனைக் கண்டவுடன் அனைவரும் மகிழ்கின்றனர். அனைவரும் திருவிழா போல் கொண்டாட தொடங்குகின்றன அவர்களுக்கு திருமண ஏற்பாடும் நடைபெறுகின்றது.

**“வேழனின் படைமறவர் காப்பளிக்க**
**விரைவாக எதிர்வந்தார் கணக்கா யர்தாம்**
**வாழ்க என வாழ்த்துரைத்த வண்ணம் வந்தார்**
**மற்றமுள தோழர்களும் வந்து சேர்ந்தார்**
**ஒன்றுநரை முடிநீக்கி வீரப்பன்தன்**
**உருக்காட்டினான் யார்க்கும் உவகையூட்டி”**[21]

வேழ மன்னனின் படைவீரர்கள் பாதுகாப்பினைத் தருவதற்காக வேகமாக எதிரில் வந்தார்கள். கணக்காயர் தாம் வாழ்க என்று வாழ்த்திய படி வந்தார்கள் வேறு நண்பர்களும் வந்து சேர்ந்தார்கள் வேலனுடன் சேர்ந்து பெட்டியினைக் கண்டார்கள். அழகான அன்னத்தினுடைய நடையில் மகிழ்ச்சியிருப்பதனை பார்த்து அவர்களும் மகிழ்ச்சியடைந்தார்கள் துறவியும் வந்தான் ஆத்தாவும் தள்ளாடியபடி நடந்து வந்தாள் உடன் நீலியும் வந்தாள்.

நரிக்கண்ணனின் வெளிப்பகை பாண்டியன் பரிசை அடைய அவன் தொடர்ந்து செய்துவரும் தில்லமுல்லுகள் பூதச் சூழ்ச்சி இவற்றையும் உட்பகைகளாகத் தோன்றிச் செயற்படும் செயல்கள் ஆகியவற்றையெல்லாம் ஏற்ற வகைகளில் வென்று பாண்டியன் பரிசினைப் பெற்றத் திருமணம் நடைபெறுகின்றது என்று சுப்பு ரெட்டியாரின் மதிப்பீடு தெளிவுபட காண்பிக்கின்றது

முடிவுரை

பாண்டியன் பரிசின் கதைக்கரு மிக எளிமையாகவும் சுவை நிறைந்ததாகவும் உள்ளது. நாம் நம்மைச் சுற்றியுள்ளவர்களுக்கு எப்பொழுதும் நன்மையே நினைக்க வேண்டும். எச்சூழலிலும் தர்மமே வெல்லும் என்பதை பாண்டியன் பரிசு கதை மெய்ப்பிக்கிறது என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

சான்றெண் விளக்கம்

இயல் 1

| வ.எண். | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு ந.சுப்பு ரெட்டியார் | 7 |
| 2. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு ந.சுப்பு ரெட்டியார் | 43 |
| 3. | பாண்டியன் பரிசு மூலஉரை | 38 |
| 4. | பாண்டியன் பரிசு மூலஉரை | 67 |
| 5. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியார் | 68 |
| 6. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு ந.சுப்புரெட்டியார் | 46 |
| 7. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு ந.சுப்பு ரெட்டியார் | 96 |
| 8. | பாண்டியன் பரிசு மூலஉரை | 101 |
| 9. | பாண்டியன் பரிசு மூலஉரை | 111 |
| 10. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 1-8 |
| 11. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 17 |
| 12. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 27 |
| 13. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 51 |
| 14. | பாண்டியன் பரிசு மூலஉரை | 140 |
| 15. | திருத்தொண்டர் புராணம் | 66 |
| 16. | பாண்டியன் பரிசு மூலஉரை | 40 |
| 17. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 45 |
| 18. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 98 |
| 19. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 50 |
| 20. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 5 |
| 21. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 5 |

## இயல் 2

## கதைமாந்தர் இயல்பு

**முன்னுரை:**

கவிஞரின் படைப்பு படிக்கின்ற வாசகர்களின் மனதில் நிலைக்கும் வகையில் அமையச் செய்யும் திறன்களில் கதைமாந்தர்களின் படைப்பு இன்றியமையாதது. அவ்வகையில் பாரதிதாசனின் “பாண்டியன் பரிசு” என்னும் காவியம் உயிர்த்துடிப்புள்ள கதை மாந்தர்களைப் பெற்றிருக்கிறது என்பதை நம் மனக்கண் முன்பே நிறுத்துகிறார் ந. சுப்புரெட்டியார். பாரதிதாசன் எழுதிய கதை மாந்தர்களின் பண்புகளையும், ந. சுப்புரெட்டியாரின் மதிப்புரையின் சிறப்புகளையும் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

**கதை மாந்தர்கள்:**

| | | |
|---|---|---|
| வேழமன்னன் | - | வேழநாட்டின் மன்னன் |
| கதிரைவேலன் | - | கதிர்நாட்டின் மன்னன் |
| கண்ணுக்கினியாள் | - | கதிர்நாட்டுமன்னனின் மனைவி |
| அன்னம் | - | கதிர்நாட்டின்இளவரசி |
| ஆத்தாக்கிழவி | - | பணிப்பெண் |
| வீரப்பன் | - | ஆத்தாவின் கணவன் |
| வேலன் | - | ஆத்தாவின் மகன் |
| நரிக்கண்ணன் | - | கண்ணுக்கிளியாளின் உடன் பிறந்தோன் மற்றும் வேழ மன்னனின் அமைச்சன் |
| அமைச்சர்கள் | - | நரிக்கண்ணனின் அமைச்சன் வேழ மன்னனின் அமைச்சன் |
| சீனிக்கணக்காயர் | - | வேலனின் ஆசிரியர் |
| நீலி | - | அன்னத்தின் பணிப்பெண் |
| நீலன் | - | நரிக்கண்ணுடைய அமைச்சன் மகன் |

| | | |
|---|---|---|
| மாழை | - | வேழமன்னனின் உறவினன் |
| பொன்னப்பன் | - | நரிக்கண்ணனின் மருமகன் |

**முதன்மை மாந்தர்கள்:**

காவியத்தில் தலைமையான இடம் பெறுவோரைத் தலைமைக் காவிய மாந்தர்கள் என்று அழைப்பர். ஒரு காவியத்தின் நிறைவும் பொலிவும் அதில் இடம்பெறும் தலைமைக் காவிய மாந்தர்களின் தன்மையைப் பொறுத்து அமைகிறது.

காவியத் தலைவர்கள் குறிக்கோள் நாயகர்களாக இருப்பவர்கள் நல்ல செயல்களைச் செய்யும் போது தீய சக்திகள் அதனை செய்யவிடாமல் தடுக்கும். அவற்றை எல்லாம் நன்முறையில் கடந்து அறம் தவறாது கொள்கை விடாது முடிக்க வேண்டிய நற்செயல்களைச் செய்து முடிப்பவர்களே தலைமைக் காவியமாந்தர்கள் ஆவார்.

பாண்டியன் பரிசு என்னும் இச்சிறு காவியத்திற்கு இரண்டு தலைமைக் காவிய மாந்தர்கள் உள்ளனர். ஒருவன் வேழன் மற்றொருவர் பாத்திரம் அன்னம் இவர்களின் பாத்திரப்படைப்பு இக்காவியச் சிறப்பிற்கு ஆணிவேராய் அமைந்துள்ளது என்றால் மிகையாது.

**அன்னம்:**

பாண்டியன் பரிசு என்னும் காவியத்தில் காவியத் தலைவியாகப் படைத்துக் காட்டப்பெற்றிருப்பவள் அன்னம். கதிரை வேழ மன்னன் - கண்ணுக்கினியாளின் அருந்தவப் புதல்வி அன்னம் ஆவாள். இவளது தாய்மாமன் நரிக்கண்ணன் அவள் சோலையிலிருந்து அரண்மனைக்குள் அடிவைக்கும் போது கோட்டையின் வாயிலில் வாள் அதிர்ப்பும், குதிரையின் குளம்படியின் ஒலியும், யானைக் கூட்டத்தின் மோதலும், தேர் அதிர்வும் அவள் காதில் விழுகின்றன. அதனால் அவள் மனம் சஞ்சலப்படுகிறது.

**“கிளியுதடு கனல்சிந்தும் துடிக்கும் அஞ்சும்**

**வாட்போரை விரும்பும் அவள் தமிழ் நெஞ்சும்**

**வாகையறியா அவள் இளமை மறுத்துநிற்கும்”[1]**

அவளது செவிலித்தாயாகப் பணியாற்றும் ஆத்தாள் இறக்கை முளைக்காமல் பறக்க நினைக்கும் அன்னத்தை அருகில் அமர்த்தி அணைத்துக் கொள்ளுகின்றாள்.

அரண்மனைக்குள் படை புகுந்தபோது ஆத்தாள் கிழவி நிலவரை வழியே கொண்டு சென்று காக்கின்றாள்.

**அன்னத்தின் மனநிலை:**

இவருடைய தாய்மாமன் நரிக்கண்ணன் இவருடைய அன்னையையும் தந்தையையும் போரில் வஞ்சமாகக் கொன்றொழிக்கின்றான். தான் எதுவும் செய்ய முடியாத நிலையை எண்ணி அவள்

**“யாருமில்லையான் பெற்ற பெற்றோர்**

**இன்றைக்கோ என்போலக் கெட்டாரில்லை”**

**வருந்துகிறாள்.**

**“வென்றெறி முரசின் வேந்தரெனக்**

**குன்றுங் கொண்டார் எந்தையும் இலமே”[2]**

என்று தந்தையையும் நாட்டையும் இழந்த பாரிமகளிர் நிலையை எண்ணுகின்றாள். அன்னம் காவியத்தின் தொடக்கம் முதல் இறுதிவரை தலைக்காட்டிக் கொண்டே இருக்கின்றாள்.

**ஆத்தாள் பாதுகாப்பில் அன்னம் இருத்தல்:**

பல்லூர் என்னும் ஊரில் சிறிய குடிசையில் அன்னம் இருக்கின்றாள். ஆத்தாள் நடந்து முடிந்த நிகழ்வை எல்லாம் எண்ணி வருந்திக் கொண்டு இருக்கிறாள். அன்னம் அனைத்தையும் இழந்து பாண்டியன் பரிசையும் இழந்து இருக்கும் வருத்தம் அவள் முகத்தில் தெரிகின்றது.

**“புல்லூரில் சிறுகுடிசை தனில்இரண்டு**

**புண்பட்ட நெஞ்சங்கள் ஒன்றையொன்று**

**நல்லுரையில் தேற்றியிருந்தன அவற்றில்**
**நரைப்பட்ட ஆத்தாளின் நெஞ்சம் ஒன்று**
**வல்லூறு குறிவைத்த புறாப்போல் வாழும்**
**மலர்க்கொடியாள் அன்னத்தின் உள்ளம் ஒன்று"**[3]

அன்னம் ஒரு இளவரசனைத் தேர்வு செய்து ஆவணியில் மணம் முடிக்கவும் தைப்பிறப்பில் கதிர் நாட்டின் மணிமுடியைச் சூட்ட நினைப்பதையும் காண முடிகின்றது. அவள் பாண்டியன் பரிசை இழந்து துன்பப்படுவதை இவற்றில் காண்கிறோம். அன்னத்தின் செவிலித்தாய் பற்றிய குறிப்புகளும் இதில் அடங்கும்.

**அன்னத்தின் மனஉறுதியின் வெளிப்பாடு**:

நரிக்கண்ணனை நோக்கி வேழமன்னன், கதிரைவேல் மன்னனையும் அரசமாதேவியையும் கொன்று பழி தேடிக் கொண்டவனே என்று சீறுகின்றான். அன்னத்தின் பரிதாப நிலையைக் கருத்தில் கொண்டு கதிர் நாட்டின் உரிமை பெட்டகத்தையும் திருடி நாட்டை நீ ஆளவேண்டும் என திட்டம் தீட்டி உள்ளாயே என்று குற்றம் சாட்டுகின்றான்.

நரிக்கண்ணன் இவைபற்றித் தனக்கு ஏதும் தெரியாது என்று நடித்து அரசன் காலில் விழுகின்றான். தனது மகன் பொன்னப்பனைத் தன் தங்கைகளின் மகள் அன்னத்தையே மணம் புரிந்து கொண்டு கதிர் நாட்டை ஆளட்டும் என்று சொல்லிஅரசனை நம்பச் செய்கின்றான். வேழ மன்னின் அன்னத்தின் கருத்தைக் கேட்கின்றான்.

**"ஒருத்தன்எனை மணப்பதெனில் அன்னோன் என்றன்**
**உயர்பேழை தனைத்தேடித் தரல்வேண்டும்"**[4]

என்று உறுதியாக மன்னர் முன்னிலையில் அனைவரிடமும் கூறுகின்றாள் தனது நாட்டின் உரிமையைப் பெறுவதே முதற்கடமை என்று கருதுகின்றாள். மற்ற

அனைத்தையும் மறுக்கின்றாள். பகைமறந்த மன்னனின் புகழுக்குஉரியவளாகிறாள். அவருடைய நுண்ணிய அறிவைப் பார்த்த வேழ மன்னனேஏற்றுக் கொள்ளுகின்றாள்.

**"காற்றுக்கும் ஆடாமல் கனல்கக்கும்**
**கரியாமல் நன்முறையில் முப்பழத்தின்**
**சாற்றுக்கு நிகரான மொழியாளே"[5]**

மன்னன் அன்னத்தைப் பல சொற்களைச் சொல்லி புகழ்ந்து அன்னம் எடுத்த உறுதியை முரசறைந்து அனைவருக்கும் தெரிவிக்கின்றனர்.

அதன் பின்னர் நரிக்கண்ணனின் சூழ்ச்சிகளைத் தகர்த்தி அன்னம் தனது வாளால் நரிக்கண்ணனைக் கொன்று விடுகின்றாள். தன் பெற்றோரைக் கொன்று தனக்கு எமனாக இருந்த "கம்சனைக் கண்ணன் தீர்த்துக்கட்டியது" போன்று அன்னமும் தனது மாமனான நரிக்கண்ணனைக் கொன்றாள். அதன்பின்னர் தனது நாட்டைக் கைப்பற்றி நாட்டை ஆட்சி செய்கின்றாள். பாவேந்தர் காவியத்தில்தான் பெண்கள் வாள்எடுத்து போர் செய்வதைக் காண முடிகின்றது என்கிறார் சுப்புரெட்டியார்.

**வேலன்:**

பாண்டியன் பரிசு என்ற காவியத்தில் தலைமைக் காவியத் தலைவனாக இருப்பவன் வேலன். இவன் திருடர் தலைவனான வீரப்பனின் மகன் ஆத்தாள் கிழவியே தாய். இவன் கணக்காயனுடன் இருந்து பலவகையான வித்தைகளைக் கற்றுக் கொண்டான். இவனிடம் நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் அதிகம் காணப்படுகின்றன. தனக்கு என வாழ நினைக்காமல் பிறருக்காக வாழ நினைத்தவன் வேலன்.

**வேலனின் வீர உணர்வின் வெளிப்பாடு:**

கணக்காயன் அனைவர்க்கும் நாட்டின் நிலைமையை விளக்குகின்றான் மேலும், ஆத்தாளையும், அன்னத்தையும் காக்கும் பொறுப்பை வேலனுக்கு கொடுத்து அவர்களுடன் தனது மாணவர்கள் இருவரையும் துணையாக

அனுப்புகின்றான். அவர்கள் நரிக்கண்ணனின் ஆட்கள் எனவே தாக்கப்படும் முன் செல்வாய் என்று எச்சரிக்கை செய்து அனுப்பி வைக்கின்றார்.

குடிசையைப் பகைவர்கள் சூழ்ந்து கொள்கின்றனர் வேலன் அவர்களைக் குதிரையில் ஏறி தாக்குகின்றான். அவன் எதிரிகளுடன் போரிடும் ஆற்றலை அழகாய் உணர்த்துகிறது. பாரதிதாசனின் வரிகள்

**“பலகுதிரை மறவரின்மேல் வேலன் எட்டிப்**
**பாய்ந்தனன்பால் ஆட்டுக்குள் வேங்கைபோல**
**கலங்கினர் வேழவர் பாத்துப்போர் மாண்டார்கள்**
**கத்திசுழல் ஓசை மறவர் முழுக்கம்**
**குலைநடுங்க வைத்தனன்”[6]**

இதில் வேலனின் வீரவுணர்வு வெளிப்படுத்தப்படுகிறது. இதனால் வேலன் வீரம் மிக்கவனாகப் படைக்கப் பெற்றுள்ளான் என்பது தெளிவாகின்றது.

வேலனின் வீரச்செயலை மற்றொரு நிகழ்விலும் காணலாம். வேலன் தன் அன்னையுடன் குடிசையில் இருக்கும்போது நீலியும் அன்னமும் ஏறியிருந்த படகு வெள்ளத்தில் செல்ல படகு ஓட்டுபவர் தன் கைமீறிச் சென்று விட்டது. இனி என்னால் முடியாது என கூறியதை மங்கைகள் கேட்டு அழுகின்றனர். அவர்களின் அழுகுரல் கேட்டு கவிழ்ந்து போகும் நிலையில் உள்ள படகைத் தனது குடிசைக்கு இழுத்து சென்று காக்கிறான். இச்செயலில் அவனது ஆற்றல் வெளிப்படுகிறது.

**வேலனின் கடமையுணர்வு வெளிப்படுதல்:**

ஆத்தாள் தன்னை காப்பாற்றியது வேலன் என்பதையும் அவன் யார் என்பதனையும் புரிந்துக் கொள்கிறான். எதிரிப் படைகளிடம் இருந்து தன்னைக் காப்பாற்றியது வேலன் என்பதனையும் அறிந்து கொண்டு அவனுக்குத் தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றாள்.

**“எனை ஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்**
**இனம்ஈன்ற தமிழ்நாடுதனக்கும் என்னால்**

**தினையளவு நலமேனும் கிடைக்கும் என்றால்**
**செத்தொழியும் நாள் எனக்குத் திருநாள் ஆகும்**
**பணையளவு நலமேனும் தன்னலத்தைப்**
**பார்ப்பானோர் மக்களிலே பதடியாவான்"[7]**

என்கிறான். இவ்வாறு வேலன் கூறுகின்றபோது அவனது கடமையுணர்வும் தொண்டுணர்வும் அவன் கொள்கையை உயர்த்திக் காட்டுகின்றது.

பாண்டியன் பரிசைக் கொடுப்பார்க்கு என்னைக் கொடுப்பதாக முரசறைவித்த செய்தியினை அறிவீர்கள் போலும் என்று கூறத் தொடங்கினாள் அன்னம். அதற்கு வேலன்

**"நானோமைத்த**
**ஏழைமகள்: நரிக்கண்ணன் ஆனை எங்கே**
**யானெங்கே ஆயினும் என்கடமை உண்டு**
**பேழையினைக் கொண்டு வந்து தருவேன் அன்றிப்**
**பேருலகில் உயிர்வாழேன்"[8]**

என்று கூறியவன் இறுதியில் அதனை நிறைவேற்றுவதையும் காண்கின்றோம். கணக்காயன் ஆணைப்படி தன் அன்னையின் ஆருயிரைக்காக்க ஓடுகின்றான். அறியாமைப் பூதங்களுக்கு எதிராக வாளெடுத்துப் போர்புரிகின்றான். இவையெல்லாம் வேலனின் கடமையுணர்வை மெய்ப்பிக்கின்றது.

அதன்பின்னர் பேழையைப் பெற்ற வேலன் வெற்றிக் களிப்பில் மிதந்து அளவில்லா இன்பத்தில் மகிழ்ந்திருக்க வேண்டியவன் அவன் இப்பொழுது இராப் பொழுதில் இக்காட்டில் நின்று அழகும் நிலையில் உள்ளான்.

இந்த வையத்தின் வாழ்வு இன்பமும் துன்பமும் நிறைந்தது என்ற பேருண்மையை வேலன் படைப்பினால் அறிந்துகொள்ள முடிகின்றது என்ற விசாலப் பார்வை ந.சுப்புரெட்டியாரின் நேர்த்திமிகு ஆய்வின் வழி புலப்படுகிறது.

**முரண்பட்ட மாந்தர்:**

பல்வேறு வகையான மக்களைக் கொண்டது இந்தப் பூவுலகம் இதில் நல்லவர்கள், தீயவர்கள், அறிஞர்கள், அறிவிலிகள், ஞானிகள், அஞ்ஞானிகள், கலைஞர்கள், கொலையாளிகள் வஞ்சகர்கள், கயவர்கள் இவ்வாறு பலர் வாழ்கின்றனர்.

இங்ஙனமே கவிஞர்களும் தாம் படைக்கும் காவியங்களில் இத்தகைய மக்களின் பிரதிநிதிகள் போல சிலரை படைத்து காவியங்களை நடைபெறச் செய்கின்றனர். பாண்டியன் பரிசு என்ற காவியத்தில் தொடக்கம் முதல் இறுதி வரை இருப்பவன் நரிக்கண்ணன் நடை, உடை, பாவணை தந்திரம் முதலியவற்றில் "பாரதத்தில் வரும் சகுனியை நினைவு" கூறும் வகையில் உள்ளான். காவிய மாந்தர்களில் காவியத்தலைவனுக்கு எதிராகச் செயல்பட்டு வருவதனால் இவன் எதிர்மறை மாந்தராக இக்காவியத்தில் படைக்கப்படுகின்றன.

**நரிக்கண்ணன்:**

இவன் வேழநாட்டு அரசனின் படைத்தலைவன். அரசி அரசம்மாதேவியான கண்ணுக்கினியாளின் உடன் பிறந்தவர் இவன் எதிர்நாட்டைத் தன்வசப்படுத்தி அதனை ஆளச்செய்யும் சூழ்ச்சிகளின் தொடக்கமாக அமைகிறது.

கதிர் நாட்டரசன் படைக்கும், வேழநாட்டரசன் படைக்கும் போர் நடக்கின்றது. இரண்டு மன்னர்களும் தனித்து போர் புரிந்துக் கொண்டு உள்ளனர். அந்த நேரத்தில் நரிக்கண்ணன் உருவத்தை மறைத்து கதிரை வேழனை ஈட்டியால் பின் இருந்து தாக்கிக் கொல்கிறான்.

அதன்பின்னர் தனது கருமையான ஆடையினையும் முகமூடியையும் மற்ற ஒருவனிடம் கொடுத்து அணியச் செய்கின்றான். அதன்பின் தனது தங்கையான கண்ணுக்கினியாளைக் காணச் செல்கின்றான். இக்காட்சியினை

**"நின்றிருந்த நரிக்கண்ணன் உடன்பிறந்த**
**நேரிழையாள் வரும்வழியில் விழியை வைத்தான்**
**அன்றிருந்த என்கருத்தில் பாதிதீர்த்தேன்**

**அவள்ஒழிந்தால் முக்காலும் தீரும் பின்னும்**
**அன்னத்தைக் கொன்றொழித்தால் முழுதும்தீரும்**
**அதன்பிறகன்றோ இந்த நாட்டின் ஆட்சி**
**என்றென்றும் என்கையில்நிலைத்து நிற்கும"[9]**

பாரதிதாசன் புலப்படுத்துகிறார்.

என்ற பாடற்பகுதியில் அவனது வஞ்சக உட்கிடக்கை புலனாகின்றது. கவிஞரும் மனம் பொறுக்காமல் "தினையேனும் மானம் இல்லான" என்று தம் சினத்தை வெளியிடுகின்றார்.

**நரிக்கண்ணன் மன்னரிடம் செய்யும் முதல் நாடகம்:**

பின்னிருந்து மன்னரைக் கொன்ற வஞ்சக நரிக்கண்ணன் அரண்மனைக்குச் சென்று தன்னை நல்லவன் போல் காட்டிக்கொள்ள முயல்கின்றான் அனைவரும் பார்க்கும் படியாக அழுது புலம்புகின்றான்.

**எனக்கேன் வாழ்வு**
**சாக்காடே வாராயோ? உடன்பிறந்தாள்**
**அரசியென வாழ்கின்றான் எனஇருந்தான்**
**அத்தியன வேழத்தான் கதிர்நாடாரும்**
**பொறுமை கொள்என் மைத்துணைக் கொலைபுரிந்து**
**பிடுங்கினான் நாட்டையும்''[10]**

இந்த நிலையில் அரசம்மாதேவி அங்கு வருகின்றாள். அவளை பார்த்து துக்கம் விசாரிப்பது போன்ற பாவணையில் பல பொய்களைக் கூறுகின்றனர். நாட்டையும் இழந்து மன்னரையும் இழந்து விட்டாயே மன்னரிடம் நான் எடுத்துக் கூறி தடுக்க முயன்ற போது என்னை படைத்தலைவன் பதவியில் இருந்து நீக்கிவிட்டான்.

இத்தகைய படையெடுப்பை உனக்கு தெரியப்படுத்த வருவதற்குள் எல்லாம் கைமீறி சென்றுவிட்டது. நீ என்னை இகழ்ந்து விடக்கூடாது என்று கவலைப்பட

வில்லை என்னால் இழிவு வந்து விடக்கூடாது என்றே நினைகின்றேன். நான் இப்போது இல்லை என்றாலும் பின் ஒருநாள் இறந்து விடுவேன். அதற்குள் ஏதேனும் நல்லது செய்ய நினைக்கின்றேன் எனக் கூறுகிறான்.

**“முயல் போன்றான் நரிக்கண்ணன் என்றால் வந்தன்**
**முத்தான தங்கையவன் வாழ்க்கைப்பட்ட**
**உயவேந்தன் கதிர்நாட்டான் நரிக்கண்ணற்கு**
**மைத்துனன் என்றுரைத்தபெரு மைபோயிற்றே’’[11]**

என்றெல்லாம் உரையாடிக்கொண்டே தனது ஆட்களை வைத்து கண்ணுக்கினியாளையும் கொன்றுவிடுகின்றான். அதன்பின் அங்கு உள்ள அரச நாற்காலியில் அமர்ந்து பார்க்கின்றான் நரிக்கண்ணன்.

**நரிக்கண்ணன் செய்த சூழ்ச்சி:**

இந்த நிலையில் வேழநாட்டரசன் அரண்மனைக்கு வருகின்றான். அவனிடம் பல வகையான பொய்களை எல்லாம் தொடர்ந்து கூறிக்கொண்டே வருகிறான். அவன் கூறியதை எல்லாம் உண்மை என்று நம்பி அவன் செய்த செயல்களையும் அவன் பேச்சில் உள்ள துணிவையும் அனைவரிடமும் கூறுகின்றான்.

**“பிணங்குவித்தும் மைத்துனனை உடன்பிறப்பைப்**
**பெருவஞ்ச கத்தாலே சாகச் செய்தும்**
**அணியுமொரு மணிமுடிக்கே நரிக்கண்ணன்தான்**
**அன்பிலாத தன்னுளத்தான் மகிழ்ந்து நின்றான்”[12]**

இங்ஙனம் மாயப்பொய்களைக் கூறியதால் கதிர்நாட்டை ஆளும் வாய்ப்பைப் பெற்றதில் மகிழ்ச்சியாக இருக்கின்றான் நரிக்கண்ணன்.

**முதியவரின் சிந்தனை:**

நரிக்கண்ணன் மறைந்திருந்து கதிரை வேலனின் முதுகில் ஈட்டியை பாய்ச்சிக் கொன்றதை முதியோன் ஒருவன் கூறுகின்றான்.அதனை ஆத்தாளோ மாறுவேடத்தில் கூறுகின்றாள்.

**“இருவேந்தா் வாட்போரை நிகழ்த்தும் போதே**
**ஈட்டியினைப் பின்வந்து கதிா்நாட்டான்மேல்**
**நரிக்கண்ணன் செலுத்தினான் நானும் கண்டேன்**
**நகைத்துவான் நாணிற்று நல்லற ந்தான்”**[13]

என்று நரிக்கண்ணனின் அடதா செயல்களைத் தோலுரித்து காட்டிவிடுகின்றாள். அரசன் அவைக்களத்தில் அரசன் ஆணைப்படி அரண்மனையில் பேழையைத் தேடச் சென்றபோது நரிக்கண்ணன் ஏதேனும் சூழ்ச்சி செய்வான் என மற்றப்படைகளுடன் ஆத்தாளும் மாறுவேடத்தில் செல்கின்றாள். அங்கு தவறாக தன் கணவனின் காலை வெட்டி விடுகிறாள். கணவன் இவள் இடது கையை வெட்டி விடுகிறான் இதனை எண்ணி இருவரும் வருந்துகின்றனா். நரிக்கண்ணன் பேழையைத் தேட பூதம்போல் வேடம் அணிந்து பய முறுத்துகிறான்.

பின்னா் பூதத்தின் சூழ்ச்சியில் அவன் சிக்கிக் கொள்கிறாள். “வினை விதைத்தவன் வினை அறுப்பான்” என்ற பழமொழி இவன் வாழ்க்கையில் மெய்யாகிறது. இவன் சூழ்ச்சியால் மாயிலை வைத்து பூதம் வேடம் மிட்ட நரிக்கண்ணன் அன்னத்தின்வாளுக்கு இரையாகின்றான்.

**“பனையினின்று**
**காய்இற்று வீழ்வதுபோல நரிக்கண்ணன்தன்**
**கருத்தலை வீழ்ந்ததுவே அன்னத்தில் வானால்”**[14]

தான் கதிா்நாட்டை ஆள வேண்டும் என்று எண்ணி கொண்டிருந்த பேராசை மண்ணோடு மண்ணாகின்றது என்று அன்னையையும் அத்தனையையும் மாய்த்தவன் அவா்தம் அன்புச் செல்வியாலே மாள நேர்வது விதியின் ஒரு பெருவிளையாட்டு என படிப்பவா்கள் மனதில் ஆழமாகப் பதிகிறது என்பதை நயம்பட விமா்ச்சிக்கிறாா் ந. சுப்புரெட்டியாா்.

**துணைக்கதாபாத்திரங்கள்:**

காவியத்தில் வரும் துணைக் காவிய மாந்தர்களை மூவகைப்படுத்தி உள்ளனர். அவை

i) முதல்வகை ஒன்றிய காவிய மாந்தர்கள்

ii) இரண்டாம் வகை ஒட்டிய காவிய மாந்தர்கள்

iii) மூன்றாம் வகை ஊன்றிய காவிய மாந்தர்கள்

**1) ஒன்றிய காவிய மாந்தர்கள்**

**1) ''ஆத்தாள் கிழவி'' என்னும் பாத்திரத்தின் வெளிப்பாடு:**

இவள் கள்வர் தலைவன் வீரப்பனின் துணைவி தன் கணவனுடைய தீய ஒழுக்கத்தை வெறுத்து அவனை விட்டு பிரிந்தவள். "தீண்டு வீராப்பின் எம்மைத் திருநீலகண்டம்" என்று பரத்தையின் தொடர்பால் கணவனைத் தொடுவதற்கும் விரும்பாத திருநீல கண்ட நாயானாரின் அருந்ததி கற்பின் மிக்க துணைவியாரைப் போலவே

**''திருடுவதை விடவேண்டும் அன்றி என்னைத்**
**தீண்டுவதை விட வேண்டும்''**[15]

என்று சொல்லிப் பிரிந்தவள் கணக்காயனின் உதவியால் அரண்மனையில் பணியாளாகப் பணியேற்றுத் தன் அருமருந்தன்ன மகள் வேலனைக் காப்பாற்றியவன் வேலனையும் கணக்கினியவள் அரண்மனையில் பணியாளாக இருப்பினும் நல்லூரை விட்டுப் புல்லூா் சென்ற ஆத்தாள் கிழவி தனிக்குடிசை ஒன்றை அமைத்துக் கொண்டு அதில் "தேனடையும் ஈயும்போல் மகனும் தானும்" "வறுமையிலும் செம்மைவாழ்வு" காண்கின்றனா்.

**நல்லொழுக்கம்:**

வாழ்க்கையில் நல்லொழுக்கத்தைக் குறிக்கோளாகக் கொண்டவள் தன் கணவனின் திருட்டுத் தொழிலை வெறுத்தவள். நற்பண்புகளையே விரும்புவள் தன் கணவனை யாரும் இழிவாகப் பேசிவிடக் கூடாது என்று எண்ணுபவள்.

தன்மகனை நல்வழியில் வளர்த்தவர் வறியோர்க்கு அழகு வறுமையில் செம்மையன்றோ கணக்காயத்தொடர்பு அவள் மகன் வேலன் நல்வழியில் வளர்ந்து நற்பண்புகள் அமையப் பெற்ற நல்லவனாக வாழ்வதற்க்கு வாய்ப்பு அளிக்கின்றது.

**ஆத்தாவின் நாட்டுப்பற்று:**

ஆத்தாவின் நாட்டுப்பற்றும் கடமையுணர்வு அரசிளங்குமரியைக் காப்பதற்கு உந்து விசைகளாக அமைகின்றன. ஆத்தாளின் துயர மொழிகள் கல்நெஞ்சத்தையும் உருக்குமாறு கவிஞர் அமைத்துள்ளார் கடந்துபோன துன்பத்திற்குக் கண்ணீர் வடிக்கையில்

**“பழநாள்பாண்டியன் உன்றன் மூதா தைக்குப்**
**பரிசளித்தான் இந்நாட்டை அதைக் குறிக்கும்**
**முழுநீளப் பட்டயமும் உடையூன் வாளும்**
**முடியஅப் பேழையினை அழகுமிக்க**
**இந்நாடு நின் உரிமை என்ற உண்மை**
**ஒழிந்திடுமே”[16]**

என்று அவள் செவ்வாயில் உதிர்ந்த அமுத மொழிகள் அவளது நாட்டுப்பற்றை அரண்செய்கின்றன. புல்லூர்க்குடிசையில் ஆத்தாள் அன்னத்தை நோக்கி அழுத அழுகை கல்நெஞ்சத்தையும் உருக்கும் நாட்டுப்பற்றைத் தெளிவுப்படுத்துகின்றது.

**2) வீரப்பன் ஒன்றிய காவிய மாந்தன் நிலை:**

இவன் நல்லூரில் வாழ்ந்த திருடர் தலைவன் வேலனின் தந்தை ஆத்தாளின் அன்புக் கணவன் இவன் திருட்டுத் தொழில் நடத்தி வாழ்க்கை நடத்தினான் என்றும் நாம் கூறுவதற்கு காவியத்தில் அகச் சான்றுகள் இல்லை என்றன் தீயொழுக்கம் என் மனைவியாம் ஆத்தாள் வெறுத்தால் நீயோ திருடுவதை விட வேண்டும் அன்றி என்னைத் தீண்டுவதைவிட வேண்டும்” என்ற அவள் சொல்லக் கேட்கின்றோம். “தம் கணவரின் பரத்தை காரணமாகத் தன்னனைத் தீண்டக்கூடாது. தீண்டு

வீராயின் திருநீலகண்டம்" என்ற கதைக்கு ஒப்பாகக் காட்டப்படுகின்றது. இருபது ஆண்டுகட்கு மேல் வீரப்பன் தன் மனைவி ஆத்தாள். மகன் வேலன் இவர்கள் தொடர்பின்றி திருடன் கூட்டத்துடன் வாழ்ந்து வருகின்றான்.

**"வேந்தே**
**கரிப்பின்றேல் இனிப்பருமை யாரே காண்பார்**
**காயின்றேல் கனியருமை யாரே காண்பார்**
**நரிக்கண்ணன் இலையெனில்நும் அருமை தன்னை**
**நானிலந்தான் அறிந்திடுமோ நவில்க"[17]**

கரிய உடையணிருந்த ஆள்மூலம் வேழமன்னன் நரிக்கண்ணனின் தீச்செயலைக் கேட்டு உள்ளம் உருகினபோது அருகிலிருந்த நரைத்த தாடி. இளைத்த உடல் களைத்த விழிக்கிழவன் (வீரப்பன்) சொல்வதை காணும் போது நம் உள்ளமும் பூரித்தெழுகின்றது என புலப்படுத்தி உள்ளனர்.

**காவிய மாந்தரின் இன்றியமையாமை:**

சந்தர்ப்பத்தால் கிடைத்த பாண்டியன் பரிசு அடங்கிய பேழையைக் கண்ணெனக் காத்து தக்க தருணத்தில் உரியவரிடமும் ஒப்படைப்பதுடன் வீரப்பனின் கடமை முடிந்து விடுகின்றது. கவிஞர் இம்மாந்தன் வாயிலாகத் தம் கொள்கையினைத் தூவுகின்றார். வீரப்பனும் அவனுடைய தோழர்களும் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களை கவிஞர் பேசுவதற்குக் கவிகளாக அமைகின்றன.

**"மக்களைவீழ்த் துய்கொடுமை தீராஇந்த**
**ஆட்சிக்குப் புறம் பாய்றான் இருக்கும்போதே**
**அற்றதுகால் அரசு பெற்றால் உயிர்ப்போம்"[18]**

என்ற வீரப்பனது கூற்றால் அறிய முடிகின்றது.

**2) ஒட்டிய காவிய மாந்தர்கள்:**

**i) முதல் காவிய மாந்தர் வேழ மன்னன்:**

இவன் வேழ நாட்டரசன். நரிக்கண்ணன் என்ற சேனைத் தலைவனின் சூழ்ச்சியால் கதிரை நாட்டின் மீது தண்டெடுத்து வந்து அந்த நாட்டைக் கைப்பற்றி நரிக்கண்ணனுக்கு முடிசூட்டியவன். இம்மன்னன் நாட்டாசை கொண்டவனும் அல்லன். எளியாரைக் கொடுமைப்படுத்த வேண்டும் என்ற நோக்கமுடையவனும் அல்லன். மாறாக பண்டைத் தமிழ் மன்னர்களின் மானமும், மதியும், வீரமும், கொண்ட குணநல சீனன் இத்தகைய நற்பண்புகளைக் கதிரை நாட்டரசன் இறந்த பின்பு கண்ணுக்கினியாளிடம் கூறும் ஆறுதல் உரைகளால் அறியலாம்.

ஆயினும் வேழநாட்டரசன் கதிரை நாட்டுமீது படையெடுத்து வருவதற்குக் காரணம்யாது இதனை முதியோன் ஒருவனின் கூற்றால் அறியலாம். வேழமன்னன் நரிக்கண்ணனுக்கு முடிசூட்டி அமைச்சர் தானைத் தலைவர்கள் இருக்கும் திருமன்றில் மகிழ்ச்சியுடன் அமர்ந்திருந்தபோது கண்ணெதிரில் அமர்ந்திருந்த நாட்டார்போல்

**"குளிர்ப்புனல்சேர் கதிர்நாட்டை நரிக்கண்ணற்குக்**
**கொடுத்துவிட்டேன் அவன் குறையை முடித்துவிட்டேன்**
**என்னருமைப் படைத்தலைவன் மகிழும் வண்ணம்**
**யான்புரியத் தக்கது புரிந்து விட்டான்**
**தன்னருமை உழைப்பாலே என்னிடத்தில்**
**தான்பெறத் தகுத்தைத்தான் பெற்றுவிட்டான்"[19]**

என்று கூறி பொன்முடியை அவன் தலையில் சூட்டும்போது பொது மக்கள் முகத்தில் துன்பத்தைக் கண்டதாகவும் அதற்குக் காரணம் அறியக்கூடவில்லை. என்று மொழிந்ததுபோல் ஒரு முதியோர் கூறுவான். அன்னத்தையும் ஆத்தாவையும் கொன்றொழிக்க நரிக்கண்ணன் கையாளும் ஒவ்வாத முறைகளை எல்லாம் தோலூரித்துக் காட்டுகின்றான் என வேழ மன்னன் பற்றி தெளிவுபடக் கூறுகின்றது.

**2) கதிரை வேலன் பற்றிய குறிப்பு:**

இவன் கதிர்நாட்டரசன் செங்கோலன் அன்னத்தின் தந்தை கதிர் நாட்டரசி கண்ணுக்கினியாளின் காதற்கணவன் இக்காவியத்தில் இவன்பெறும் பங்கு மிகச்

சிறியது கதிராடு கூடத்தில் சில பேசி வேழநாட்டரசனுடன் நடைபெற்ற போரில் மாய்ந்து விடுகின்றான் வேழநாட்டான் முழுப் படையையும் எழுப்பி வருகின்றான். கதிர்நாட்டுப்படை மறவர் கொதித்தெழுகின்றனர்.

அப்போது கதிராடு கூடத்தில் இருந்த அரசன் அரசமாதேவி கண்ணுக்கினியாளிடம் அறப்போருக்கு மாறாக முன்னறிவிப்பு இல்லாமல் மன்னாது இடித்ததுபோல் வந்ததைக் குறித்துக் குறை கூறுகின்றான். நம் படைகள் ஆயத்தமாக இல்லாது இருக்கும் நிலையில் உன் அண்ணன்பெற நினைத்தான் உன் உடன்பிறந்தான் என் பெரும்பகைவன் இவ்வுலகில் நீ என் உயிர் என் வெற்றியில் நின் துன்பம் உளது என்று கூறுகின்றான்.

**“மன்னவன் நான் எனைநம்பி வாழுகின்ற**
**மக்கட்கோ என்கடமை ஆற்ற வேண்டும்”**[20]

என்று தன் நாட்டுக்காக வருந்துகின்றான் இத்துடன் இவன் பங்கு முடிகின்றது.

**3) கண்ணுக்கினியாள் பற்றிய குறிப்பு:**

இவள் கதிர் நாட்டரசி கதிரைவேல் மனைவி மன்னன் அரசமாதேவி அரசனும் அவன் தேவியும் சதிராடு கூடத்தில் உரையாடிக்கொண்டு இருக்கையில் வேழ நாட்டான் தன் நாட்டின் மீது படை எடுத்துவரும் செய்தி அவர்களின் செவிக்கு எட்டுகிறது. படைத்தலைவனும் அமைச்சனும் அரசன் கட்டளையை எதிர்பார்த்து அருகில் நிற்கின்றனர் அரசி எரியும் கண்ணாளகின்றாள்.

**“அழகிய என் திருநாட்டை அவன்பறிக்கத்**
**திட்டமிட்டான் மனைவாளா உன்றன் ஆணை**
**திருநாட்டின் மீதாணை இந்நாட்டின் கண்**

**மட்டற்ற மகிழ்ச்சியுடன் வாழுகின்ற**
**மக்கள்மேல் எனக்குள்ள அன்பின் மீது ஆணை”**[21]

என்று கூறுவதிலிருந்து அவள் தன் நாட்டின் மீது கொண்டிருக்கும் பற்று வெளிப்படுவதைக் காணமுடிகின்றது. சங்ககால வீரம் துள்ளி எழுந்து தெறிக்கும் இவள் சொற்களில் பளிச்சிடுவதைக் காண்கின்றோம்.

**அரசி கண்ணுக்கினியாளின் சூளுரை:**

தன் நாட்டின் படையெடுத்து வருகின்றவன். தனக்கு அண்ணன் அல்லன் என்றும் விரைவில் தான் போர்க்களத்தை அடைவதாகவும் அவன் எந்த எந்த வட்டத்திலிருப்பினும் அவனைக் கொள்வதாகவும் அல்லது தான் அவனால் கொள்ளப்படுவதாகவும் சூளுரைத்துப் போர்க்களம் புகுகின்றாள்.

> **"என்அண்ணன் இந்நாட்டில் நுழைவதாயின்**
> **என்உயிரில் நுழைந்த தன்பின்று கழைகநானோ**
> **அன்னவனின் உயிர்குடித்த பின்னவரேஇவ்**
> **அரண்மனையில் அகத்தூய்மை நிரம்பப் பெற்றே**
> **என் கால்வைப் பேன் உறுதி"**[22]

என்கின்றாள். புறத்துறை மூதின் முல்லைக்கு இவள் தகுந்ததோர் இலக்கணமாகின்றாள்

புறநானூற்று மறக்குலப் பெண்டிர் போர்க்களத்திற்குச் சென்று போரிட்டதாகத் தெரியவில்லை. ஆனால் பாவேந்தர் படைத்த பெண்ணரசி போர்க்களம் சென்று போரிடச் செய்திருப்பது கவிதை மாந்தர் படைப்பில் ஒரு புதுமை அனைத்துத் துறைகளிலும் பெண்கள் ஆண்களுக்குச் சமமாக இடப்பெற வேண்டும் என்ற கருத்து கண்ணுக்கினியாள் வாயிலாகச் செயற்படச் செய்திருப்பது புரட்சிகரமான செயலாகும்.

**3)ஊன்றிய காவிய மாந்தர்கள்:**

**i) பொன்னப்பன் எனும் காவிய மாந்தரின் குறிப்பு:**

இவன் நரிக்கண்ணனின் மகன் அன்னத்திற்கு முறை மாப்பிள்ளை "கொழுக்கட்டை" என்று பொது மக்களால் கேலிப்பெயர் சூட்டப் பெற்றவன்.

நரிக்கண்ணன் மகனாய் வந்த கொழுக்கட்டை என்றும் சாப்பாட்டுப் பொன்னப்பன் என்றும் இவன் குறிப்பிடப்பெறுவதிலிருந்து இவனது சிறுமை இயல்பை அறியலாம் இவனது முறையற்ற பட்டறிவு சிறிதுமில்லாத பேச்சு சிரிப்பை விளைவிக்கின்றது.

**"என்அப்பன் உன்மாமன் ஆதலாலே**
**எனக்கு நீ மைத்துனிகான் நானுன் அத்தான்**
**பொன்னப்பன் என்றுபெயர் எனக்கு நான்மேல**
**போட்டிருக்கும் பொன்னாடை பார்நகைபார்**
**உன்னைப்போல் நான் அழகன் அழகு நீயும்"[23]**

என்ற முதல் அறிமுகம் பேச்சிலேயே இவளின் தன்மை புரிகிறது. கல் நெஞ்சத்தினையும் சிரிக்க வைப்பதாக உள்ளது என குறிக்கின்றது.

அன்னம் கதிர்நாட்டு இளவரசி இவனோ வஞ்சகமாக கதிர்நாட்டைக் கைப்பற்றிய நரிக்கண்ணனின் மகள் அன்னம் இவனை மணந்துகொள்ள இசைந்தாகக் கற்பனை செய்து கொண்டு பொன்னப்பன் பேசிய பேச்சுகள் "எள்ளல்" காரணமாக நகைச்சுவையை விளைவிப்பவை

**"தீப்பட்டகாட்டினிலேவேங்கையோடு**
**சிறுமுயலும் காதல் நரியின்மைந்தன்**
**சாப்பாட்டுப் பொன்னப்பன் தானும் செத்தான்"[24]**

என்ற முடிவுச் செய்தி நம்மை எட்டுகின்றது. துறவியால் இதனைக் கூறியவன் நீலனின் தந்தை சிரிக்க உடல் எடுத்தவன் என்று அன்னத்தால் திறனாய்ப் பெற்றவன்.

**2)நீலன் - நீலி படைப்பு பற்றிய குறிப்பு:**

நீலன் நரிக்கண்ணனின் அமைச்சன் மகன் வஞ்சனைக்கோர் இருப்பிடம் இவனைக் கவிஞர் அருஞ்சூழ்ச்சி செய்வதிலே பிச்சைக்காரன் என்று நமக்கு அறிமுகம் செய்வார். அன்னத்தின் வாளுக்கு நரிக்கண்ணன் இரையாவதற்கு

முன்னமே பாண்டியன் பரிசைத்தான் பெறவேண்டும் என்ற நப்பாசை இவன் உள்ளத்தில் உதிக்கின்றது.

**"இமைக்கின்ற நேரமதும் வீணாக்காமல்**
**எழிற் பாண்டி யன்பேழை அன்னம் ஆட்சி**
**நமக்கு வருமோ என்று நிகைத்தானாகி**
**நல்லபல சூழ்ச்சிகளும் நாடுகின்றான்"[25]**

**நீலன் நீலியின் தந்திரப்பேச்சு:**

நீலி தன் அழகையும் அன்பையும் நீலனுக்கும் துய்ப்பதற்காக வழங்கியவள். ஆகவே தான் தனக்காக வாழ்வதைவிட்டு நீலியின் தலைவி அன்னத்தின் பொருட்டுப் பாண்டியன் பரிசைத் தேடுவதற்காகவே தான் வாழ்வதாகப் பொய்யே புகழ்கின்றான். நீலியை நோக்கி பெண்ணே நரிக்கண்ணுக்காகத் தான் தந்தை அமைச்சன் ஆனால் அக்கொடியவனைத் தொலைப்பதுதான் என் தந்தையின் நோக்கமாக உள்ளது.

**"விலங்குபழக் கிடுவானின் வெள்ளாடொன்று**
**வேங்கையிடம் நெருங்கையிலே மகிழ்வதுண்டோ**
**தெலுங்கினிலே பாடிருமோர் தமிழன் செய்கை**
**தெனென்றோ நினைக்கின்றான் தமிழகத்தார்"[26]**

என்று கூறுகின்றார். இறுதி இரண்டு அடிகளில் தனது தமிழியக்கக் கொள்கையினை வாள்வீச்சாக அமைக்கின்றார் கவிஞர்.

**3)கணக்காயர்:**

இவர் காவியத்தில் வரும் துணைக் காவிய மாந்தர்களில் முக்கியமானவர் வேலனுக்கும் அக்காலத்தில் வாழ்ந்த வேறுபல இளைஞர்கட்கும் கலைகள் பயிற்று வித்து நேர்மையையும் நாட்டுப்பற்றையும் அவர்களிடம் ஊட்டியவர் இவர் முயற்சியால்தான் ஆத்தாள் கிழவி அரண்மனையில் பணிச்சியாக அமர்கின்றாள்.

தனது நேர்மையாலும் கடமையுணர்வாலும் அரசமாதேவிக்குத் துணையளாகி அன்னத்திற்கும் வளர்ப்புத் தாயாகின்றான்.

இவர்தான் அரியேறு போன்ற வேலனுக்கும் புலிகள் போன்ற வேலனுடைய நண்பர்கட்கும் கலைகளைப் பயிற்றியதுடன் நில்லாது. நாட்டின்மீது வேழநாட்டின் மேற்கொண்ட படையெடுப்பு கடும்போரில் கதிர்நாட்டரசனைப் பின்னும் இங்ஙகனம் தொடக்கம் முதல் இறுதிவரை கதிர் நாட்டு அரசியலில் தொடர்ந்து பெரும்பங்கு கொண்டவர் சீனி என்னும் கணக்காயர்.

**4) எட்டி:**

இவன் நரிக்கண்ணனின் எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்து பூதமாக வெளிப்பட்டவன்.

**முடிவுரை:**

காப்பியத்தின் கதையமைப்பிற்குத் தகுந்தாற் போன்ற மிக நேர்த்தியான கதைமாந்தர்களைக் கொண்டதாக "பாண்டியன் பரிசுத் திகழ்கிறது. ஒவ்வொரு கதைமாந்தர்களின் கருத்து வெளிப்பாடும் மனிதப் பண்புகளையும் சமூக உயர்வுகளையும் நேர்மையின் சிறப்புக்களையும் மையக்கருத்தாய் கொண்டு அமைந்திருக்கிறது என்பதை நயமாய் புலப்படுத்துகிறது ந.சுப்புரெட்டியாரின் மதிப்புரை.

சான்றெண் விளக்கம்

இயல் 2

| வ.எண். | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 1 |
| 2. | பாண்டியன் பரிசு மூலஉரை | 3 |
| 3. | பாண்டியன் பரிசு மூலஉரை | 5 |
| 4. | பாண்டியன் பரிசு மூலஉரை | 7 |
| 5. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 12 |
| 6. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 39 |
| 7. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 47, 48 |
| 8. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | 65 |
| 9. | பாண்டியன் பரிசு மூலஉரை | 66,67 |
| 10. | பாண்டியன் பரிசு மூலஉரை | 67,68 |
| 11. | பாண்டியன் பரிசு மூலஉரை | 3 |
| 12. | பாண்டியன் பரிசு மூலஉரை | 81 |
| 13. | பாண்டியன் பரிசு மூலஉரை | 91 |

## இயல் 3

## பாவேந்தரின் கவிப்புலமை

**முன்னுரை:**

கனக சுப்புரத்தினமாகப் பிறந்த இவர் பாவேந்தர், புரட்சிக்கவிஞர் என்றெல்லாம் மக்களால் விரும்பி அழைக்கப்பட்ட பெருமைக்குரியவர் பாரதியாரின் மீது இவர் கொண்ட தீராக்காதலில் தன்பெயரினை பாரதிதாசன் என புணைந்து கொண்டார்.

தமிழினை உயிராகப் போற்றியவர் இவர். அதுபோல் பெண்மையை மென்மையாக மட்டுமின்றி வாளெடுத்து போர் செய்யும் வீரத்தின் மேன்மையாகவும் தன் காப்பியத்தில் படைத்துக்காட்டியவர் பாரதிதாசன் அவர் படைப்புகளின் வழி அவரின் கவிப்புலமையை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**சஞ்சீவி ப்ர்வதத்தின் சாரல் குறிப்பு:**

இது காவிய பாவனையில் எழுதப்பெற்ற ஓர் அற்புதப் படைப்பு. கவிஞர் தம் கொள்கைகளை விளக்கும் போக்கில் வேகமாக எழுதப் பெற்ற ஒரு கற்பனை ஓவியம். பாவேந்தரின் கவிதை ஆற்றலின் ஆவேசத்திற்கும், குணங்களுக்கும் இக்கவிதை சிறந்ததோர் எடுத்துக் காட்டாக அமைகின்றது.

**மூலிகையால் வரும் மாற்றம்:**

குப்பன் ஒரு இளைஞன். இவன் சஞ்சீவி மலையின் கீழ் தன் தலைவியை எதிர்நோக்கிக் கொண்டிருக்கின்றான். வஞ்சி வெயிலின் வெப்பம் தாங்க முடியாமல் வேகமாக வருகிறாள். குப்பன் அவளைத்

தழுவநினைக்க வஞ்சி தடுத்து நிறுத்தி மலை மீதேறி இரண்டு மூலிகைகளைக் கொண்டு வந்தால் உன் விரும்பம் நிறைவேறும் என்று கூறுகின்றாள். உடனே குப்பன் வேகமாகச் சென்று மூலிகைகளைக் கொண்டு வருகின்றான். இருவரும் முதலில் மூலிகையை உண்கின்றனர்.

**"அண்ணாந்து பார்த்திட்டான் அம்மலையின்**
**கண்ணாட்டி தன்னையும்ஓர் கண்ணாற்**
**கவனித்தான் வஞ்சிஅப் போது மாணாளன்"**[1]

இதனால் மற்றவர்கள் பேச்சைக் கேட்கும் ஆற்றலைப் பெறுகின்றனர். அப்போது ஆங்கிலேயன் ஒருவன் இந்திய நாட்டின் நிலைமையைப் பற்றி பேசுவது வஞ்சியின் காதில் விழுகிறது.

**இந்தியர்கள் குறித்த கண்ணோட்டம்:**

புராணங்கள் வேற்றுமையை வளர்க்கின்றன, சாதி சண்டைகளை இதிகாசங்கள் வளர்க்கின்றன. சமூகத்தின் கண்ணைக் குருடாக்கி வளமாக வாழும் குருக்களோ கணக்கற்றவர்கள். உதட்டில் வெல்லத்தையும் உடையவான சுரரைவிட்டு வந்த அரசர்கள் இங்கு வாழ்ந்து வருகின்றனர். மக்களிடம் சிந்தனையாற்றல் சிறிதுமில்லை தம்தோள் உழைப்பினும் நம்பிக்கை இல்லை.

பொறுப்புள்ள மக்கள் காற்றடைத்த பையடா என்றும் உறவினர் யாரும் இல்லாதொழிந்து விடுவார் என்றும் போகங்கள் வேண்டா, பொருள் வேண்டா, பாழுலகம் பொய் மெய்யான பரமபதம் செல்க என்று சாக்குருவி வேதாந்தத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் மக்கள்.

சாதிப்பிரிவு சமயப்பிரிவு நீதிப்பிழைகள் நியமப் பிழைகள் மூடப்

பழக்கங்கள் முதலியவை யாவும் ஒழிந்தால் ஆங்கிலேயர்கள் தாமாக ஓடிவிடுவார் என்று கூறுகின்றனர்.

இவற்றை கேட்ட வஞ்சி யோசனை செய்து கொண்டு இருந்தால் அந்நேரத்தில் குப்பன் வஞ்சியை நோக்கும் நேரத்தில் ஒருவர் இராமாயணக் கதையில் ஆஞ்சனேயர் சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கிக் கொண்டு செல்லும் காட்சியை பற்றி கூறுகின்றார். அதனைக் கேட்டு குப்பன் தான் நிற்கும் மலைக்குதான் ஆபத்து வந்ததென்று வருத்தமுற்று நடுநடுங்குகிறார்.

**இரண்டாவது மூலிகையை உண்ணும்போது ஏற்படும் நிகழ்வு:**

இவர்கள் இரண்டாவது மூலிகையை உண்கின்றனர். இதனால் பிற இடங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளை தனது கண்முன் பார்க்கின்றனர். ஓரிடத்தில் இராமாயண கதாகாலட்சேபம் நடந்துக் கொண்டிருக்கிறதை அவர்கள் காண்கின்றனர்.

**"மூலிகையில் ஓர் இனத்தைமுன்னே**
**இருவருமாய் ஞாலத்துப் பேச்சறிய நாக்கிலிட்டுத்**
**வஞ்சிக்கும் குப்பனுக்கு வையத்து மாந்தர்களின்**
**செந்தமிழில் தங்கள் செவிடற் கேட்க பெற்றார்"** [2]

வஞ்சி இராமயணக் கதையில் சஞ்சீவி அனுமாரால் தூக்கப் பெற்றதே ஒழிய தாம் இருக்கும் மலைக்கு ஆபத்து ஒன்றும் இல்லை என்று அவனுக்கு மெய்பித்து அவனது மூடத் தனத்தைப் பரிகாசம் செய்கிறாள். குப்பனுக்கு ஞானோதயம் ஆகிறது. இங்ஙனம் பிற இலக்கியங்களை ஒப்பிட்டு கதை சொல்லும் உத்தி பாரதிதாசனின் கவிப்புலமையை உணர்த்துகிறது.

**கற்பனை ஓவியமாக அமைந்த செய்திகள்:**

செம்மையான கட்டுடனும், ஓசை வளத்துடனும், நடையழகுடன் அமைவதில் ஒரு குறைபாடு தோன்றுகிறது. இவற்றைக் கவிஞர் தம்முடைய கொள்கை வேகத்திற்கும் ஆவேசத்திற்கும் அர்ப்பணம் செய்து விட்டதாகக் கருத முடிகின்றது. அதில் நல்ல இலக்கியச் சுவையுடைய சொற்களை உடையது கவிஞர் தம்முடைய இலட்சியங்களையும் பகுத்தறிவுச் சிந்தனைகளையும் கேட்போர், படிப்போர் மனதில் விதைக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். கவிஞரின் நற்சிந்தனைகள் அவரின் படைப்பின் வழி உணரமுடிகிறது.

**புரட்சிக் கவி**

பாரதிதாசன் இரண்டாவது காவியமாக புரட்சிக்கவியை இயற்றியுள்ளார். இதன் மூலமாக ஒரு இளவரசியாக இருக்கும் பெண் எல்லாக்கலைகளிலும் வல்லமையோடு விளங்குகின்றாள்.இந்த இளைஞன் உதாரன் மூலமாக இளவரசி அமுதவல்லிக்கு எல்லா கலைகளையும் கற்றுக் கொடுக்க அமைச்சனால் முடிவு செய்யபட்டு அரசனிடம் கூறி அவனை அழைத்துவர உத்திரவிடுகின்றான். அதனைக் கேட்டு உதாரான் அரண்மனைக்கு வருகின்றான்.

**உதாரணன் கற்றுக் கொடுத்தல்:**

மன்னன் கூறியதைக் கேட்ட உதாரணன் மன்னனின் கட்டளைபடி அரண்மனைக்கு வந்து அமுதவல்லிக்கும் கலைகளை கற்றுக் கொடுக்க தொடங்குகிறான். இருவருக்கும் இடையில் திரைச் சீலை அமைக்கப் படுகிறது. அமுதவல்லி இடம் அவன் கண்பார்வை இல்லாதவன் என்றும் அமுதவல்லியை பற்றி உதயணன் இடம் தொழுநோய் உள்ளவர் என்றும் கூறியுள்ளனர். நாட்கள் பல ஓடின அனைத்துவகையான ஆசுகவி,

சித்திர கவி, மதுரகவி, வித்தார கவி என்பனவற்றையும் கற்றுக் கொடுத்தான்.

**"மன்னவன் ஆணைப்படி – கண்ணி**
**மாடத்தைச் சேர்ந்ததொடு**
**பன்னரும் புச்சோலை – நடுப்**
**பாங்கில் ஓர் பொன்மேடை"**[3]

அப்பெண் அமர்ந்து பாடம் கற்க பொன்மேடைகள் அமைக்கப்பட்டு இருந்தன.

**திருப்புமுனை:**

அமுதவல்லி வருகைக்காக உதாரணன் பொன்மேடைக்கு அருகில் நின்றபடி இயற்கையையும் நிலவையும் எண்ணி அதன் அழகை புகழ்ந்து பாடிக்கொண்டு உள்ளான்.

**"அழகிய பூஞ்சோலையண்டை உதாரன் நின்றே**
**இமையாது நோக்கினான் முழுநிலாவை**
**இருவழியால் தழுவினான் மனத்தால் உண்டான்**
**சுமைசுமையாய் உவப் பெருக்க உணர்வு உள்ளம்"**[4]

உதாரணன் கலைமகள் அருள்பாலிக்கின்றாள் காவியத்தை மழை பெய்யத் தொடங்குகின்றது. அது வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடி அமுதவல்லியின் செவிகட்கு அமுதமாக இனிக்கின்றது. இத்தகைய கவிதையில் அமுதவல்லி மயக்கம் கொள்கின்றாள். தன்னை மறந்த நிலைக்கு சென்று விடுகின்றாள். அமுதவல்லியின் சிந்தனையாற்றல் செயற்படுகின்றது. உதாரன் விழியற்றவனாயின் நிலவினை எங்ஙனம் காணமுடியும் பாடமுடியும் என்று எண்ணுகின்றாள். ஓடிச்சென்று அவனது

தாமரைக் கண்களையும் தடந்திருந்தோள்களையும் காண்கின்றாள். உதாரனும் தன்னருகில் நிற்கும் அழகிய மங்கையைக் கண்டு மின்னின. வானவில்லினின்றும் உருப்பெற்றதோ? தண்டமிழ்க் கவிவாணரின் கற்பனையில் விளைந்த பொற்சித்திரமோ? பூங்கொடியோ? என்றெல்லாம் எண்ணி இறுதியில் தான் கற்பிக்கும் அமுதவல்லி என்பதாக அறிகின்றான். அமைச்சன், அரசன் ஆகியோரின் சூழ்ச்சி வர்த்தனைகள் வெட்ட வெளிச்சமாகிறது. அமுதவல்லி உதாரன் இருவர்களிடையே காதற்பேச்சுகள் நடைபெறுகின்றன. அப்போது உதாரணன்

**"காரிருளால் சூரியன்தான் மறைவதுண்டோ**
**கறைச்சேற்றால் தாமரையின் வாசம்போமோ?**
**பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மையாமோ?**
**பிறர்சூழ்ச்சி செந்தமிழை அழிப்பதுண்டோ"**[5]

இப்படியே நாட்கள் பல உருண்டோடுகின்றன அமுதவல்லியின் உடல் மாற்றத்தைக் கண்டு தோழியர்கள் தம் ஐயத்தை உதாரன் அமுதல்லி இவர்களின் காதற் குளியலை அரசனிடம் தெரியப்படுத்துகின்றனர். இவர்களின் நடத்தையை நேரில் அறிய வேண்டுமென்று கன்னிமாடத்தருகே காத்திருந்து "உதாரன் எழில் மங்கைக்கும் உள்ள நிலையை தன் கண்முன் பார்த்து கடுகடுக்கின்றான் உதாரனைச் சிறையிடுகின்றாள் இச்செய்தி ஊரெங்கும் தீபோல் பரவுகின்றது.

**அரசனின் உத்தரவு:**

அரசன் உதாரணனை கொலை செய்ய அழைத்து செல்ல உத்திரவிடுதல் அதனைப் பார்த்து அமுதவல்லியை என்னையும் கொலைசெய்யச் சொல்லுங்கள் தவறு அவர்மீது இல்லை என்மீதுதான்

வாழ்ந்தால் ஒன்றாக வாழ்வோம் இல்லையேன் ஒன்றாக சாவோம்.

**“என்னிடத்தில் உன்தந்தை என்மகட்கு**

**முன்னொன்று தீவினையால் பெருநோய் வந்து**

**முண்டதெனச் சொல்லிவைத்தான் அதனாலன்றோ**

**மின் ஒன்று பொண்ணென்று புவியில் வந்ததும்”[6]**

என் மகன் விண்ணில் இருந்து வந்த பொன்னென்று இருந்தாய் உன்னால் என்னையும் எதிர்பவலாக மாற்றிவிட்டாயே உன் சாதி என்ன என் மகளை மணந்துக் கொள்ள உனக்கு என்ன தகுதி உள்ளது என்று கேட்டு துன்புறுத்துகின்றான். அமுதவல்லி கவிஞர் மீது தவறு இல்லை என்மீது தான் அதனால் என்னை தண்டியுங்கள். அரசன் இவளை கல் சிறையில் அடைப்பீர். பின் இருவரையும் ஊர் மக்கள் எதிரில் கொலைபுரியக் கூட்டிச் செல்வீர் என்று ஆணையிடுகின்றான். பின் அரசன் இருவரையும் கொலைக்களத்திற்கு அழைத்து வந்து அவர்களை கொலை செய்வீர் என்று கூற அனைவரும் அமைதியாக நிற்கின்றனர். இருவரும் இன்பம் கண்டோம் இறப்பதிலும் ஒன்றுபட்டு அநீதி இழைத்த அரசனுக்கு நாட்டுமக்கள் நற்பாடம் கற்பிப்பார் என்று சொல்லி விட்டு இருவரும் கொலைசெய்யும் இடத்திற்கு அழைத்துச் செல்கின்றனர்.

பேரன்பு கொண்டவரே, பெரியோரே என் பெற்ற தாய்மாரே நல் இளஞ்சிங்காள் என்று கூடியிருந்த மக்களை விளிந்து கொள்ளுங்கள். எலியாக முயலாக இருக்கின்றார்கள். ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்டான் புலி வேசம் போடுகின்றவனே நன்றாக வாழ்கின்றான். அவன் கீழ் அனைவரும் வாழ வேண்டியதாக உள்ளது.

உதாரணன் அரசன் தன் மகளுக்கு கவிதை கற்றுக் தரச் சொன்னான் சொல்லித் தந்தேன். அவ்வாறு கற்றல் நடைபெறுங் காலத்தில் அந்த எழில் நங்கையும் எனைக் காதல் எந்திரத்தால் புலன் மாற்றிப் போட்டு விட்டாள் ஒப்பிவிட்டேன் பெரியோர்களே இப்போது என் உயிருக்காக நான் அழவில்லை எழுதாத ஓவியம் போல் உள்ள இவருடைய உடல் வெட்டப்படும் பழிக்கு இரங்குகின்றேன் இப்போது படிகத்தைப் பாலாபிஷேகம் செய்து பார்ப்பது போல் அங்கிருந்து பெருமக்கள். ஆவென்று கதறினார்கள்.

இதனைச் செவிமடுத்த நாட்டுமக்கள் கொடிது என்றார்கள். கொடுவாளைப் பறித்தார்கள் அந்தக் கொலையாளர் உயர்தம்பி ஓடலானார்கள். கவிஞனுக்கும் காதலிக்கும் மீட்சி தந்தார்கள். இனி புவியாட்சி அரசனுக்கு இல்லை என்று தூது போக்கினார்கள். செல்வம் எல்லாம் அவையன்றி எய்தற்குச் சட்டம் செய்தனர்.

இதன் மூலமாக மக்கள் அனைவருக்கும் மக்கள் இடம் இருக்கும் அடிமை தனத்தை ஒழித்து வீர எழுச்சியை வெளிவரச் செய்ததாக புரட்சிக்கவி அமைகிறது என சுப்புரெட்டியர் தனது மதிப்பீட்டின் மூலமாக அனைவரும் எவருக்கும் அடிமையாக இருக்க கூடாது என்பதனை இதன் மூலமாக தெரியப்படுத்துகின்றாார்.

**தமிழச்சியின் கத்தி:**

தமிழச்சியின் கத்தி என்னும் காவியம் சிறு காவியம் தில்லி பாதுஷாவின் ஆட்சிக்கு உட்பட்டது ஆர்க்காட்டுப் பகுதி இப்பகுதியில் அடங்கியவை 172 பாளையப்பட்டுகள் இவற்றில் ஒன்று செஞ்சிப் பாளையப்பட்டு இதனை ஆள்கின்றவர் தேசிங்கு என்ற விடக்கண் தமிழரை இகழ்பவன.

**சுதர்சனின் சுழ்ச்சி:**

ஒரு சமயம் சிப்பாய்களின் தலைவனான சுபேதார் சுதரிசன் சிங்கும் அவன் தோழனான மற்றொரு சுபேதார் இரஞ்சித் சிங்கும் புதுச்சேரி சென்று வளவனூர் வழியாகத் திரும்புகையில் வளவனூர் அருகில் ஒரு தென்னந் தோப்பில் திம்மன் என்ற வேளாண் மகனைக் காண்கின்றனர். திம்மன் அவர்கட்கு இளநீர் விருந்தும் அளித்ததுடன் இல்லத்திற்கு அழைத்து சென்று உணவு விருந்தும் அளிக்கின்றான். சுதரிசன் சிங்கு திம்மன் மனைவி சுப்பம்மாளின்மீது ஆசை வைக்கின்றான். தோப்பில் கட்டி வைத்த குதிரைகளைப் பார்த்து வருமாறு திம்மனை அனுப்புகின்றனர். சுதர்சன் சிங்கு தன் உள்ளத்தைச் சிறிது அவிழ்க்கின்றான். பருப்பு வேகவில்லை இவனது தீய எண்ணத்தை அவள் அறிந்து கொண்டது தான் விளைந்தபலன்

> **"உளம்பூத்த சுதரிசன் ஆசைப் பூவும்**
> **ஒருநொடியில் பிஞ்சாகிக்காயும் ஆகித்**
> **தளதளத்த கணியாகிப் போன தாலே**
> **தாங்காத நிலையடைந்தான் சுதரிசன்"** [7]

தனியாகத் திம்மனை அழைத்துச் சென்று திம்மனுக்குச் சிப்பாய்வேலை வாய்கித்தவருவதாக ஆசைகாட்ட அவன் அந்த ஆசை வலையில் விழுகின்றாள். திம்மன் சுப்பம்மாவையும் இட்டுக்கொண்டு ஒரு வண்டியில் செஞ்சிக் கோட்டைக்குச் செல்லுகின்றான். வண்டியை ஓட்டிக் குதிரை மீது செல்லுகின்றான் சுதரிசன் வழியில் யாரோ சிலர் வண்டியை நிறுத்தி அவர்களை என்று வினவுகின்றனர். இதற்குள் சுதர்சன் அஞ்சி குதிரையை முடுக்கி விரைந்து மறைகின்றான். திம்மன் உண்மையைக் கூற வந்தவர்கள் வடக்கர்களிடம் எச்சரிக்கையாக நடந்து கொள்ளுமாறு

கூறுகின்றனர். பாதுகாப்பாக இருப்பதற்கு சுப்பம்மா அவர்களிடம் ஒரு குத்துக் கத்தியைப் பெறுகின்றாள்.

**திம்மனின் சூழ்ச்சி:**

அவர்கள் எச்சரிக்கை செய்தபின் இவர்கள் புறப்பட்டு செஞ்சியை அடைகின்றனர். அங்கு சென்றபின் சுதர்சன் அவர்கட்குச் சேரியொன்றில் குடிசை அமைத்துத் தருகின்றான். சுப்பம்மாவை தீய செயல்கள் செய்பவர்களிடம் அடைக்கலமாக விட்டுச் செல்கின்றனர். திம்மனுக்குப் பொய்யுடை தந்து கோட்டைக்குச் இட்டுச் சென்று அவனை ஒரு மூலையில் அடைத்து விடுகின்றான். அன்றிரவு சுதரிசன் சுப்பமாவிடம் தன் விருப்பத்தைக் காட்டுகின்றான். சுப்பம்மாள் மசியவில்லை குடிசைக்குத் தீயிட்டு விடுகின்றான். சுப்பம்மா உள்ளே திண்டாடுகின்றாள். இந்நிலையில் சுதரிசன் தன் உருவை மறைத்துத் கொண்டு சுப்பம்மாவின் கையைப் பிடிக்கின்றான். சுப்பம்மாவின் கத்தி தொட்டக் கையை விலக்கி விடுக்கின்றாள். சுதர்சன் மறைகின்றான்

**“நாமென்ன நூறுசெல விட்டோம்**
**சொற்போக்கில் வந்தவிருந்தாள் - அவன்**
**சூதற்ற நில்லவளம் கொண்டோன்**
**பற்பகாட்டின் கொஞ்சவில்லை நாமும்”** [8].

நாமும் அரண்மனையில் ஒருவராக இருந்து கவலைகள் செய்கிறோம் இனி என் வாழ்க்கை இன்பமாக அமையும் என்று அவன் நம்பிய அனைத்தும் வெறும் கற்பனையாக மாறியதை எண்ணி வருத்தும் கொள்கிறான்.

**சுதர்சன் எண்ணோட்டங்கள்:**

சுதரிசன் சுப்பம்மாவின் மீது கொண்ட ஆசையானது அதிகரித்துக் கொண்டே இரக்கின்றது. சுப்பம்மா அந்த இடத்தில் இருந்து தப்பித்து ஒரு முதியவர் வீட்டில் அடைக்கலம் சேர்கின்றான். அவர் இடம் நடந்த அனைத்து செயல்களையும் ஒன்று விடாமல் கூறுகின்றான். அதனைக்கேட்ட முதியவர் உன் கணவன் வந்து உன்னை அலைத்துச் செல்லும் வரையிலும் நீ இங்கேயே இருக்கலாம். எதற்க்கும் பயம் கொள்ள தேவை இல்லை என்று ஆறதல் கூறுகின்றார்.

சுப்பம்மாவை சுதர்சன் மாயம்வில்லை என்று தெரிச்த உடன் அவளைத் தேடுமாறு செயல் கலைச் செய்யும் இரண்டு பெண்களையும் அவள் ˙இருக்கும் இடத்தை தெரிந்து கொண்டு வருமாறு உத்திர விடுகின்றான்.

**“என்மீதில் ஆசை அவர்கில்லா மாசம் இல்லை**
**என்மீதில் ஆசையே இல்லா தவள் போலே**
**ஏன் நடந்தாள் என்றுகேள் என்னை இன்னானென்று**
**தான் அறிவதற்குள் தன்னைக் காட்டிக் கொள்வாளா”.** [9]

என்று அந்த இருபெண்களிடமும் பல பொய்களுக்கு மேல் பொய்களை எல்லாம் அடுக்கிக் கொண்டே செல்கிறாள். இதனை அங்கு இருந்த அவர்கள் சுதர்சன் இடம் தெரிவிக்கின்றனர். அவளுடன் வருவோம் இல்லை என்றாள் அவள் இருக்கும் இடம் தெரிந்து வருவோம் எனக் கூறிச் செல்கின்றனர்.

இரண்டு பெண்களும் அந்த தெருவின் எல்லா இடங்களிலும் தேடத் தொடங்குகின்றனர். அதன் பின்னர் ஒரு வயதான கிழவன் வீட்டில் ஒரு பெண் புதிதாய் வந்து உள்ளான் என்று பிறர் கூறியதை கேட்டு அங்குச்

சென்று ஒளிந்து இரந்து பார்க்கின்றனர். அதன் பின்னர் அவளைப் பார்த்து உறுதியும் செய்துக் கொள்கின்றனர்.

**“கூத்தர் மார்இரண்டு பேரும்**
**எதற்கும் நீ அஞ்சவேண்டாம்**
**என்று பக்கத்தில் குந்தி**
**சுதர்சன் புகழை யெல்லாம் சுறல்”[10]**

அவனை நாங்கள் கண்டடுபிடித்து விட்டோம் கிழவன் வீட்டில் தான் இருக்கின்றாள்உன் புகழ் என்ன என்பது தெரியாமல் இவ்வாறான செயல்களை எல்லாம் செய்தக் கொண்டு உள்ளான் இதோ உணவில் மய்க்க மறந்து கலந்து உள்ளது. ஆதனை அவள ் சாப்பிட்டால் உன் ஆசை நிறைவேறும் என்று கூறி சுப்பம்மா சாப்பிடும் உணவை மாற்றி வைக்கின்றனர்.

இதனை அறியாமல் உண்டு மயங்கி விடுகின்றால் சுதர்சன் தனது ஆசையை தீர்த்து கொள்கிறான் மயக்கம் தெளிந்து சுப்பம்மா தன்நிலையை உணர்ந்து அழுதுபுலம்பி அவனைக் கொல்ல வேண்டும் என்று கோபத்துடன் புறப்பட்டு கத்தியுடன் செல்கிறாள்.

கத்தியை உயர்த்தி கொண்டு ஓட அவனுடன் இருந்த கிழவன் ஓர்மக்கள் அனைவரும் அவள் உடன் ஓடுகின்றனர். சுதர்சன் வீட்டில் கதவைத் தட்டி அவன் வெளியே வந்ததும் அவன் நெஞ்சில் கத்தியால் குத்திக் கிழிக்கின்றாள். அந்த இடத்திலேயே அவன் உயிர் பிரிகிறது அதே நேரத்தில் அந்த இரண்டு பெண்களும் சுப்பமாவாள் கொல்லப்படுகின்றனர்.

**திம்மன் நிலையை எண்ணி சுப்பம்மா வருந்துதல்:**

அதன் பின் கணவனை காணச்செல்லும் வேலையில் சுதர்சன் கொல்லப்பட்ட செய்தி தேசிங்கு கோட்டையை எட்டுகிறது. இதனால் அவளை சுத்தி வலைக்க ஆணை பிறக்கப்பட்டதால் கிழவனும் சுப்பமாவும் அங்கு இருந்து வெளியேறுகின்றனர்.

**“கோழி அடைப்பட்டுத்துபோல் அந்தத் திம்மன்**
**ஓட்டையிலே ஓழுகுவது போலே நிரை**
**ஒழுகவிடும் இருவிழியும் உடைந்தநெஞ்சும்**
**வாட்டமுறும் முகமுமாய் இருந்தான்”**. [11]

தனது பேராசையால் தான் மாட்டிக் கொண்ட நிலையை உண்ணி வருந்துகிறான் தன் மனைவியின் நிலை இப்படியா ஆக வேண்டும் என்று எண்ணிக் கொண்டு இருக்கையில் அவனை சுதர்சன் ஆட்கள் சுட்டுக் கொல்ல திட்டம் தீட்டுகின்றனர். அதனைத் தெரிந்துக் கொண்ட சுப்பபம்மாவின் தோழனும்இ கிழவனும் இணைந்து மாறுவேடத்தில் சென்று மீட்டுவருகின்றனர்.

அதன் பின் அனைவரும் ஊர் எல்லையில் இருக்கும் ஆலமரத்தின் அடியில் அமர்கின்றனர். அன் நேரத்தில் படைகள் வில வருவதை உணந்தனர். உடனே மூவரும் மரத்தின் மீத ஏறி ஒளிந்து கொள்கின்றனர். அவர்கள் இந்த மூவரையும் சுட்டுக் கொல்லும்படி ஆணை பிறப்பிக்கப்பட்டு இருப்பதை தெரிவிக்கின்றனர் பின் மூவரும் அப்படைகளில் இருப்பவர் மீது பாய்து மூவரும் மரணம் அடைகின்றனர். சுப்பம்மா கைது செய்யப்படுகின்றாள். ஆவன் தேசிங்கின் அவை நடுவே நிறுத்த்படுகின்றாள். ஆவள் முன் பலவகையான சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன அதன் பின்னர் தேசிங்கு சுப்பம்மாவினை அனைவர்

முன் நிலையிலும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு உறுப்பாக வெட்டும்படி ஆணையிடுகின்றான்.

**“துப்பாக்கி சூழ்ந்தது போல் - துயர்**
**தாங்கருங் கிள்ளையை நோக்கிக் கவன்பலர்**
**தாங்கி நடந்தது போல்**
**ஏங்கும் விள்க்கினை நோக்கிப் பெரும்புல்**
**ஏற்பட்டு வந்ததுபோல் - நொடி”** [12]

தேசிங்கு கூறியதைக் கேட்ட சுப்பம்மா தமிழ் மறத்தி என்பதனை அனைவருக்கும் உணர்த்த தன் உயிர் தானாகவே அவள் உடலைவிட்டு பிரிகிறது. ஊடல் மண்ணில் விழுகிறது. அவையில் உள்ளவர்கள் பெரும் அச்சத்துடனும் வியப்பும் அடைகின்றனர். பெரும் மன்னன் நடுக்கமுற்று புதுமை காண்கின்றான் பொதுமக்களும் தேசிங்கிற்கு பேச்சு வரவில்லை அதிர்ச்சியில் உரைகின்றனர் என்று ஒரு பெண்ணின் தன் துணிச்சலையும் அவள் எவருக்கும் அடிமையாக இருக்கமாட்டாள் என்றும் தனக்கு நேர்ந்த கொடுமைகளுக்கு அவளே தீர்ப்பு வழங்கி விட்டால் என்றும் பாரதிதாசன் அனைத்து பெண்களும் துணிச்சலும் தைரியமும் இருக்க வேண்டும் என்று இதன் மூலமாக விளக்குகின்றார்.

**கல்வியின் முக்கியவத்துவம்:**

அறிவு வளர்ச்சி பெறாத மனிதன் நிறைய மனிதர்களையும் கருதப்பட மாட்டான். அறிவு வளர்ச்சி என்பது ஒருவன் பெற்ற கல்வியைப் பொறுத்தே அமையும். பண்பு, ஒழுக்கம் ஒருவனிடம் நிலவுவதற்கும் அவன் பெற்ற கல்வியே காரணமாக அமைகிறது கல்வியும் அறிவும் வேறுவேறு என்று கருதப்படாத நிலையில் கல்வியறிவு என்றே

பேசப்படுகிறது. கல்வியறிவு இல்லாத ஒருவன் நல்லது தீயது என்று அறியும் ஆற்றல் அற்றவனாகின்றான் அவனிடம் குடிகொண்டு இருக்கும். ஏழ்மைக்கும் அறியாமைக்கும் கல்வி அறிவில்லாமையே அடிப்படையாக திகழ்கிறது. எனவே தான் மக்கள் உடலுக்கு உணவுபோல் அறிவுக்குக் கல்வி இன்றியமையாததாகக் கருதப்படுகிறது.

**கல்வியின் சிறப்பு:**

கல்வியின் சிறப்பயையும் அவசியத்தையும் பாடிய கவிஞர்களில் பாரதிதாசனுக்கும் சிறப்பிடம் உண்டு கல்வியை அனைவருக்கும் புகுத்தும் பாங்கை அவர் கவிதைகளில் மிகுதியாகப் காணலாம். கல்வி இல்லாமல் பெற்ற விடுதலையால் பயன் ஒன்றும் இல்லை என்று கருதுகின்றனார்.

இவர் போலவே கல்வியின் சிறப்பை திருவள்ளுவரும் தனது குறளின் மூலம் வெளிப்படுத்தி உள்ளார்.

**“தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்கும்**

**கற்றகைத் தூறும் அறிவு”.** [13]

மணலை தொண்ட தோண்ட நீர்ஊரிவரும் அதுபோல மக்கள் படிக்கப்படிக்க அவர்களின் அறிவும் நீரைப்போல அதிகரிக்கும் என திருவள்ளுவர் விளக்குகிறார்.

மாந்தர்க்கும் கல்வி சேர்த்தல் தம் தலையாயக் கடமையாகும் என குடும்ப விளக்கு விளக்குகிறது. கல்வியைக் குறிப்பிடும் போது மாண்புடைய கல்வி, நகையுறு கல்வி, எல்லா நலமும், ஈந்திடும் கல்வி என்று குறிப்பிடுவதை அறிய முடிகிறது.

**கற்றோரின் சிறப்பு**

கல்வியுடையவரே கண்ணுடையவராவர் என்று பாரதிதாசன் குறிப்பிடுகின்றார். இக்கருத்து வள்ளுவரின் குறள் கருத்தை எதிரொலிப்பதாக அமைந்துள்ளது பொருள் எது என அறிய முடியாத நிலையிலும் இருவிழிகளும் அல்லாத நிலையிலும் படிப்பறிவு இருந்தால் கண் இல்லாமல் இருந்தாலும் கண் உள்ளவர் போலவே கருதப்படுவர். வாய் பேசமுடியாத ஊமைகள் கூட கல்வி கற்றால் பேசும் ஆற்றலை உடையவர் போல கருதப்படுவார்.

**எல்லார்க்கும் கல்வி:**

சமுதாயத்தில் கல்விபெறும் வாய்ப்பு மக்கள் அனைவர்க்கும் இல்லாத நிலை கண்ட பாரதிதாசன் எல்லா மக்களும் கல்விபெற்று மேம்பாடு காணவேண்டும் என்பதில் நிலைத்து நின்றார். எல்லாரும் கல்வி கற்றவர் என்ற தன்னிலை அடையும் நாள் எந்நாளோ? எதிர் நோக்குகிறார்.

**“என்னருந் தமிழ்நாட்டின் கண்**
**எல்லோரும் கல்வி கற்றுப்**
**பன்னருங் கலை ஞானத்தால்**
**பராக்கிரமத்தால் அன்பால்**
**உன்னத இமய மலைபோல்**
**ஓங்கிடும் கீர்த்தி யெய்தி**
**இனபுற்றார் என்று மற்றோர் கருத்தே”** [14]

என்றும் குறிப்பிடும்போது எல்லோரும் கல்வி கற்க வேண்டும் உன்பதில் கவிஞர் கொண்டிருந்த வேட்கையைக் காணமுடிகிறது.

**பெண் கல்வி:**

சங்க காலத்தில் அறிவுத்துறை முற்றிய புலமைச் சான்றோர்களாக விளங்கிய பெண்கள் பிற்காலத்தில் கல்வியுரிமையின்றி அறியாமைப் பேரிருளில் மூழ்கித் தவித்தனர். பெண்கல்வி மறுக்கப்ட்ட நிலையில் அவர்கள் வெளியுலகத் தொடர்புகளில் ஈடுபடக்கூடாது. நான்கு சுவர்களுக்கு உள்ளேயே இருக்கத் தக்கவர்கள் என்றெல்லாம் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப்பட்டிருந்தனர். கல்வியறிவில்லாது அறியாமையில் ஆழ்ந்து மடமையின் உருவங்களாக வாழ்ந்த பெண்களை ஆண்கள் அடிமைகளாக நடத்தி வந்தனர். இருபதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிந்தனைகளின் விளைவாகப் பெண்களின் இழிவு நிலையை நீக்கி அவர்களுக்குச் சிறப்பளிக்கச் சமுதாய நலச் சிந்தனையாளர்கள் முன் இழிநிலைக்குக் காரணமானவற்றில் முதன்மையானதாகக் கருதிப் பெண்கல்வியின் தேவையைப் பெரிதும் வலியுறுத்தினார்.

**“கல்வியில்லை உரிமையில்லை பெண்களுக்கும்**
**கடைத்தே றவழியின் விழிக்கின்றார்கள்”**[15]

அதே போல் கற்றோரின் சிறப்பை திருவள்ளுவர் தனது திருக்குறளின் வாயிலாகவும் விளக்கிக் கூறிஉள்ளார்.

**“கண்ணுடையவ ரென்றுவர் கற்றோர் முகத்திரண்டு**
**புண்ணுடையவர் கல்லா தவர்”** [16]

கண்ணுடையரென்று சிறப்பித்துச சொல்லபடுபவர்கள் கற்றோரே கல்லாதவர்கள் தம் முகத்தில் .இரண்டு கண்களையுல்லவர் பண்களையே உடையவர் என திருவள்ளுவர் கூறுகின்றனர்.

கல்லாதவர்களின நிலை:

கல்விஅறிவு இல்லாதவர் நிலைமையை கவிஞர் கல்வியில்லாதவன் ஆவியிலாதவனே என்று குறிப்பிடுகின்றார். கல்வி இல்லாதவனுக்கு

நல்வாழ்வு கிடைப்பது குறைவே என்று கருதும் கவிஞர் கல்லார் நலிவர் என்கின்றார் செல்வமும் அவனிடம் சென்று சேராதாம் படித்தவன் இடமே செல்வம் சேரும் என்பதாக

**“கல்லாத மூடனை**
**வா என்பார் கற்றவனை**
**எல்லோரும் வாருங்கள்**
**என்றழைப்பார் - செல்வம்**
**படிப்பானைச் சேரும்**
**படியான் கூழ்ப்பானை**
**அடிப்பானையும் வெறும்பானை”** [17]

என்று கூறுகின்றார். இல்லை என்பது கல்வி இல்லாமையே என்னும் உடையவர் என்பவர் கல்வி உடையவர் என்றும் கூறுப்படுகின்றனர். கல்வி இல்லை என்றால் அறிவில்லைஇ ஒழுக்கமுமில்லை என்று சுட்டிக் காட்டுகின்றார். ஆதனைப் போன்றே கடல் அளவு செல்வங்களை வைத்து இருந்தாலும் அவனுக்கு எந்த விதமான பயனும் இல்லை ஆனால் அவன் கல்வி கற்றவன் இடம் அத்தகைய செல்வம் என்றாலும் அவன் செல்வம் உடையவனை போல அனைத்து இடங்களிலும் உயர்ந்தே காணப்படுவான் என்று கல்லாதவரின் நிலையை பாரதிதாசன் குறிப்பிடுகிறாார். சமைப்பது பெண்கட்கு மட்டுமே உரிய கடமை என்று ஆடவர் நினைப்பதை ஏற்காத கவிஞர். அந்நிலையை மாற்றியமைக்கவும் கல்வி பெண்கட்கு வேண்டும் என வற்புறுத்துகின்றார். பெண்கட்குக் குடித்தனத்தைப் பேணுவதற்கும் மக்களைப் பேணுவதற்கும் உலகினை உணர்வதற்கும் கல்வி வேண்டும் என்று குறிப்பிடுவது சிந்திக்கத் தக்கது.

**“பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**குடித்தனம் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**மக்களைப் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**உலகினைப் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**கல்வியைப் பேணுதற்கே”** [18]

**கட்டாயக் கல்வி:**

எல்லோரும் கற்றவர்கள் என்ற நன்னிலை உருவாக்கக் கட்டாயக் கல்வியால் தான் முடியும் என்ற நம்பும் கவிஞர் கட்டாயக் கல்வியை வற்புறுத்துகிறார். படிக்கையிலே தொல்லை இருக்கும் படித்து முடித்தவுடன் மகிழ்ச்சி ஏற்படும் இதன் மூலம் செய்யம் அனைத்து செயல்களும் வெற்றியடையும் துன்பம் இல்லாமல் வாழலாம் என்று கல்வியினால் ஏற்படும் சிறப்பைச் சொல்லிக் கட்டாய கல்வி பயில் என்கிறார்.

**“கல்வியைக் கட்டாயத்**
**தால்நல்கியவர்க்கும்**
**கல்லுடலை ஓம்ப**
**நனியுரைத்தால் - அல்லலுண்டோ”** [19]

என்று கூறிக் கட்டாயக் கல்வி முறை கொண்டு வரப்பட்ட வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டுகிறார்.

எல்லோரும் கற்றவர் என்ற நிலை ஏற்படக் கட்டாயக் கல்வியை வலியுறுத்திய கவிஞர். எல்லோரும் தமிழ்மொழி கற்றவர் என்ற நிலை

உருவாகக் கட்டாயத் தமிழ்க் கல்வி கொண்டு வரப்பட வேண்டும் என்று விரும்புகிறார்.

**“தமிழ்க் கல்வி தமிழ்நாட்டில்**
**கட்டாயம் என்பதொரு**
**சட்டம் செய்ய”** [20]

தமிழ்மொழியைக் கல்லாத ஒருவன் பிறமொழிகளைக் கற்பதெல்லாம் வெறும் கூத்தாகவே அமையும் என்று தாய்மொழியே சிந்தனைக்கு மலையூற்றாகும் என்று குறிப்பிடுகின்றார். தாய்மொழி நூற்றாகும் பெறத்தக்கதோர் கட்டாயத் தமிழ்க் கல்விக் கழகம் எங்கும் நிறுவப்பட வேண்டும். ஒரு நாட்டின் முன்னேற்றம் அந்நாட்டின் மொழி நிலையைப் பொறுத்தே நிற்கும் என்றும் நாட்டை முன்னேற்றத் தாய்மொழியாலேயே முடியும் என்றும் வலியுறுத்துகிறது எனவேதான் கவிஞரும்

**“உண்ணல் உடுத்தல் உயிர்த்தல் எனச் செந்தமிழை**
**நண்ணலும் ஆம்என்று நாட்டுக வேறுமொழி**
**எண்ணல் நிறுவல் இலாது கல்வி கட்டாயம்**
**பண்ணல் பயன் என்று கூறுவாய் கருங்குயிலே”** [21]

என்று கருங்குயிலைக் கூவுமாறு வேண்டுகின்றார்.

**பெண்மை போற்றும் மாண்பு :**

இன்றைய இலக்கியச் சுழலில் பெண்ணியம் குறித்த சிந்தனைகள் வலுப்பெற்று வருகின்றன. காலம் காலமாக அடிமைப்பட்டு வாழும் பெண் இனம் அடிமை நிலையிலிருந்து மீட்சி பெற்று சமூகத்தில் ஆணுக்கு நிகரான தகுதி நிலையினை எட்ட வேண்டும் என்ற கருத்தினையும்

அவை கறித்த சிந்தனையையும் இன்று உறுதிப்பாடு அடைவதற்கு பாரதிதாசனின் பங்களிப்பு அளப்பரியதாகும். அதனை பெண்ணியம் போற்றும் பாவேந்தர் பாரதிதாசன் மூலமாக விளக்கப்படுகிறது.

பெண்மை எனும் சொல் பெண்ணியம் எனும் சொல்லிருந்து வேறுபட்டு நிற்கிறது. அன்றைய நாள் முதல் இன்றைய நாள் வரை ஒரு பெண் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என ஆண்கள் விரும்பிய கருத்தோட்டங்களில் ஒட்டுமொத்த நிலைகளில் பெண் ஆணுக்குச்சமம். என்றும், பழங்காலத்தில் பெண்கள் தங்களுக்கான உரிமைகள் எதுவும் இல்லாமல் ஆண்களுக்கு எதிரான கருத்துச் சுதந்திரம் மறுக்கப்பட்டு அறிவுற்றவர்களாகவும் உரிமையற்றவர்களாகவும் தாழ்வான நிலையில் வைக்கப்பட்டிருந்தனர்.

இதனைப் பாரதிதாசன்

**"ஆடைஅணிகலன் ஆசைக்கு வாசமலர்**
**தேவேதும் ஆடவர்க்குச் நேவித்திகிப்பதும்**
**அஞ்சுவதும் நாணுவதும் அமையைப் போல் வாழுவதும்**
**கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்"**[22]

என பெண்களின் நிலையை பாரதிதாசன் குறிப்பிடுகின்றார்.

**பெண்கல்வி:**

ஒரு சமூகத்தின் விடுதலை என்பது அச்சமூகத்தின் கல்வி வளர்ச்சியாலேயே சாத்தியப்படும் என்பதை உணர்த்த புரட்சியாளர். புாரதிதாசன் பெண் விடுதலை என்பது பெண் கல்வியாலேயே சாத்தியப்படும் என தனது பாடல் வரிகள் மூலம் முன் வைக்கிறார்.

**"கல்வியில்லாத பெண்கள்**
**களர்நிலம் அந்த நிலத்தில்**

**புல் விளைந்திடலாம் நல்ல**
**புதல்வர்கள் விளைதல் இல்லை**
**கல்வியை உடைய பெண்கள்**
**திருந்திய கழனி அங்கே"** [23]

பெண்களுக்கு கல்வி வேண்டும் கல்வி கற்ற பெண்ணால் தான் குடும்பத்தை ஒன்றிணைக்க முடியும். முக்களை ஒன்றினைக்க முடியும் இவ்வுலகத்தின் அனைத்தையும் இன்பமாக வைத்து இருக்க முடியும். என பாரதிதாசன் பெண்விடுதலைக் குறித்து விளக்குகிறார். புரட்சிக் கவிஞர் சமூக வளர்ச்சிக்கு ஆணிவேராக அமைவது பெண்கல்வி என்பதை வலியுறுத்தி உள்ளார்.

**பெண்விடுதலையும் புரட்சிக்கவிஞரும்:**

சமூக வாழ்விலும் இச்சமூகத்தின் அனைத்து விதமான செயல்பாடுகளிலும் இருந்து முடியாத முதன்மையான அங்கமாகத் திகழும் பெண் என்பவன் இப்பூவுலகில் இயங்கும் சக்தியாகவும் அனைவரையும் இயக்கவிக்கும் சக்தியாகவும் இருக்கின்றாள் என்றால் அது மிகையாகாது. சுங்க காலத்திலும் சுட பெண்கள் அறிவாற்றல், வீரம், கல்வி போன்றவற்றில் சிறப்புறறிருந்தனர். இத்தகைய பெண் சமூகம் சங்க காலத்தில் வீட்டும் பொறுப்பை மட்டுமே சுமக்கும் ஒரு சுமைதாங்கின்றான். தான் தனியாகவோ வாழுதலை எதிர்ந்தனர் ஆண்களை சார்ந்தே வாழ வேண்டும் என்ற கட்டாயம் இருந்தது. இத்தகைய நிலை மாற வேண்டும் என்று பாரதிதாசன்

**"பெண்ணடிமை திருமட்டும் பேசும் திருநாட்டில்**
**மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே"** [24]

என்ற வரிகளின்மூலம் ஒரு பெண்ணுக்கு சமூகத்திற்கும்

விடுதலையும் சமஉரிமையும் கொடுக்கப்படாமல் பெண்ணடிமைத்தனம் இருக்கின்றதோ அச்சமூகத்திற்கு விடுதலை என்பது முயலுக்குக் கொம்பு முளைத்தது போன்றது என்கிறாார் இச்சமூகத்தைச் சாடி பெண் விடுதலையை முன் வைக்கின்றார்.

மேலும் அவா் எந்தச் சமூகம் அடிமைப் படுத்தப்பட்டுக் கிடக்கின்றதோ அந்தச் சமூகத்தின் விடுதலை என்பது அவா்களிடமிருந்தே உருவாக்கப்பட வேண்டும் என்ற கொள்கை முனைப்போடு பெண் விடுதலை என்பது பெண் சமூகத்திலிருந்தே தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பதை முன்னிறுத்தி

**“அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப் போல் வாழுதும்**
**கெஞ்சுவதுமாகக் கிடக்கும் மகளிா்குலம்**
**மானிடா் கூட்டத்தில் வலிவற்ற ஓா் பகுதி”** [25]

என்ற வரிகள் மூலம் பெண் சமூகமே என்று உன் இழிவு நிலையிலிரந்து விழித்தெழுந்து ஆா்ப்பரிப்பாய் என பெண் சமூகத் தினரிடையே கேள்விகளை எழுப்பியுள்ளா். பெண்களின் அறியாமைஇ மூடப்பழக்க வழக்கங்கள்இ நம்பிக்கைகள் போன்றவை பெண்களின் சுயசிந்தனையையும் தன்னம்பிக்கையையும் பற்றி மேலும் அவா்களை அடிமைகளாக ஆக்கி விடுகின்றது எனவே பெண்ணடிமைத்தனம் மாற வேண்டும்.

**“ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**
**அறிவிலோங்கு இவ்வையும் தழைக்குமாம்”** [26]

என்று பாரதியின் பாடல் இவ்வுலகின் மனிதராகப் பிறந்த அனைவருக்கும் அனைத்து உரிமைகளும் உள்ளது. ஆண் என்பதற்காக மட்டும் அவா்களுக்கு அதிக உரிமைகள் கிடையாது

மனிதர்கள் யாராக இருந்தாலும் சட்டத்தில் உள்ள உரிமைகள் அனைத்தும்உண்டு ஆனால் இங்கு உள்ளவர்கள் ஆணுக்கு மட்டுமே எல்லா உரிமைகளும் உண்டு பெண்ணுக்கு இல்லை அவர்கள் அடிமைப்பட்டே வாழ வேண்டும் என்று நினைக்கின்றனர். ஆணும் பெண்ணும் சமம் என்னும் வந்தால்தான் இவ்வுலகமே முன்னேற்றம் அடைய முடியும் என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

**கைம்பெண் திருமணம்:**

கல்வி கற்க பள்ளிக்குச் செல்ல வேண்டிய குழந்தைகளுக்கு சொத்து பாதுகாப்பு பொருளாதாரக் கட்டாயம் பாரம்பரியம், கடமை, மூடநம்பிக்கை போன்ற காரணங்களால் குழந்தைத் திருமணம் நடைபெற்றது சமுதாயக் கட்டுப்பாடுகளையும் கற்பு நெறியையும் காட்டி குழந்தைகளுக்கு வாழ்நாள் சிறைத் தண்டனை வழங்குகின்றனர்.

**“கூவித் தெரியாக் குயிலின் குஞ்சு**
**தாவச் சிறுமான் மோவோ அரும்பு**
**தாலியறுத்துத் தந்தையின் வீட்டில்**
**இந்தச் சிறுமியிருந்தி கின்றாள்”** [27]

பெண்ணாய் இருக்கும் சிறுமி வீட்டிலிருக்க புதுமணம் பெண்ணுடன் தந்தை இல்வாழ்க்கை நடத்தும் இழி நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றார். இவையெல்லாம் தற்போது கொஞ்சம் குறைந்திருந்தாலும் சேலம், தர்மபுரி போன்ற மாவட்ட பகுதிகளில் குழந்தைத் திருமணங்கள் நடந்த வண்ணம் தான் உள்ளன.

**பொருந்தா மணம்:**

குழந்தைத் திருமணம் ஒரு கொடுமையான செயல் என்கிறார். அதனைப் போலவே பொருந்தாத் திருமணமும் மிகவும்

கொடுமையானதாகும். இந்த மூடத்திருமணத்தால் பெண்களின் வாழ்வு பாதிக்கப்படுவதைக் கடுமையாகச் சாடுகின்றார். பாவேந்தர் நினைவுகளுடன் இரவில் கணவனை நெருங்க முதுமை தந்த உடல் சேர்வால் கிழவன் துயில்வது கண்டு வாழ்வை வெறுத்து நஞ்சுண்டு இருக்க நினைக்க வைக்கிறது அவளின் நிலை

**"தொண்டு கிழவன் விழிப்பான்என்று**

**கெண்டை வழிகள்மூடாக்கிளிகள்**

**காதலும் தானும்கணலும் புழுவுமாய்எங்கினாள்"** [28]

என்று கூறுகிறார் மருகனும் மகளும் மகிழ்ந்திருப்பவர்கள் என்று நினைத்த பெற்றோருக்கு பேரிடியாய் மகளின் வேதனையும் காதல் மனம் கருகிட அவள் கனலும் புழுவமாய் துடிப்பது கண்டு வருந்தினார்கள். இந்த நிலைமாற வேண்டும் என்று

**"மண்ணாய்ப் போக மண்ணாய்ப்போக**

**மனம்பொருந்தா மணம் மண்ணாய்ப் போக"** [29]

குழந்தைப் பருவத்திலேயே இழந்த இளம் பெண்ணின்மன ஏக்கம், அவலநிலை ஆகியவற்றையும் அப்பெண்ணின் தந்தை தனக்கு வயதான பின்னரும் மறுமணம் செய்து இன்பம் துய்க்கும் நிலையினைணும் பாரதிதாசன் குழந்தை மணத்தின் கொடுமை என்னும் தலைப்பில் எடுத்துரைத்துள்ளார். பெண்களுக்கான உரிமைகள் அனைவரும் பெறவேண்டும் என்பதற்காகவே பாவேந்தர் பாரதிதாசன் பொருந்தா மனத்தின் பொருந்தமின்மையை அழுத்தம் திருத்தமாக அதிக அளவில் பேசியுள்ளார்.

**இயற்கையும் கவிஞனும்:**

புலவர்கள் இயற்கையின் பால் கொள்ளும் எல்லையில்லா ஈடுபாடு

இயற்கையிடத்துள்ள அழகாலோ அல்லது கவர்ச்சியாலோ மட்டும் ஏற்பட்டதல்ல அது இயற்கையின் பயன்பட்டாலும் புகுந்துள்ளது. கவிஞன் இவற்றை இயம்புகையில் இயற்கையில் பயன்பாட்டாலும் ஏற்பட்டதல்ல அது இயம்புகையில் இயற்கையில் பயன்பட்டாலும் புகுந்துள்ளது. கவிஞன் இவற்றை இயம்புகையில் இயற்கையின் பயன்பாட்டாலும் ஏற்பட்டது. எனவே இவ்வீடுபாடு பிற்காலத் கவிதைகளிலும் புகுந்துள்ளது. கவிஞன் இவற்றை இயம்புகையில் மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையிலுள்ள தொடர்பை அறிய முடிகிறது.

தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கையின் அதிசயங்களும் அவகைச்சித்திக்கச் செய்கின்றன. இச்சிந்தனைகளின் வெளியீடே இலக்கியங்களாகின்றன என்று கோதண்டராமன் கூறுகிறார்.

**பாரதிதாசனின் பொதுவுடைமைச் சிந்தனைகள்**

பாரதிதாசன் மக்களோடு மக்களாக வாழ்ந்தவர் அதனால் தான் அவர்களின் இன்ப துன்பங்களை அவரால் உணர்ந்துக் கொள்ள முடிந்தது. பேண்களை போற்றுவதிழும் அனைவரையும் எந்தவிதப் பாகுபாடின்றி பார்ப்பதிலும் அவர் எல்லோருக்கும் முன் மாதிரியாகத் திகழ்ந்தார். உலகில் வாழுகின்ற மக்கள் ஒற்றுமையுடன் வாழ வேண்டும் அவர்களுக்குள் பிரிவினைவராத எண்ணங்களின் வாழ்க்கை முறையினையும் உரிமைகளையும் பாதுகாப்பதில் முழு ஈடுபாடு கொண்டவர். இவ்வாறு சமூகத்தோடு இணைந்து வாழ்ந்தவர். ஆகையால் இவருடையக் கவிதைகளில் காணப்படும் பொதுவுடைமைச் சிந்தனைகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பாவேந்தர் நயப்படுத்திக்காட்டும் இயற்கைக் காட்சிகள்:**

இயற்கையோடு இரண்டறக்கலந்து பண்டையத் தமிழுந் வாழ்வு முல்லைஇ குறிஞ்சி நெய்தல் பாலை என நிலப்பிரிவுகள் இயற்கையின் அடிப்படையாக அமைந்துள்ளன. இல்வாழ்க்கை பிரிவ போன்ற நிலைகளும இயற்கைச் சார்ந்து அமைத்துள்ளன.

**"ஏடெடுத் தேன் ஒன்று வரைந்திட**
**என்னை எழுதென்று சொன்னதுவான்**
**ஓடையும் தாமரைப் பூக்களும் தங்களின்**
**காடும் மழனியும் கார் முகிலும் வந்து**
**கண்ணைக் கவா்ந்திட எத்தினிக்கும்**
**ஆடும் மறில்நிகா் பெண்களெல்**
**அன்பினைச் சித்திரம் செய்க என்றாா்"** [30]

பாவேந்தா் கவி எழுத நினைத்து ஏடெடுத்தால் வானமும் ஓடையும் காடும் கழனியோடு தன்னைப் பற்றிக் கவிப்பாடச் சொல்லித் தன்னிடம் கேட்பதாகக் கூறுகிறாா் பாவேந்தா்.

சுங்க காலப் பாடல்கள் காதலையும்இ வீரத்தினையும் பற்றியே பேசுகின்றன. குாதல்இ வீரம் ஆகியவற்றினிடையே இயற்கையும் நிலையான இடம்பெறுகிறது. புலவா்கள் அரசனை வாழ்த்திப் பாடும்போது முதலில் நாட்டு வளம் முதலான இயற்கை பற்றியே பாடுகின்றனா். இயற்கைப் பாடுவதே எமக்கு எளிது என்று கூறுவது போன்று புலவரின் பாடல்கள் பின்வருமாறு அமைகிறது.

**"ஈயென வீரத்தலோ வரிதே நீயது**
**நல்கினு நல்காயயினும் வெல்போா்**
**எறிபடைக் கோடா வாண்மை யறுவைத்**
**தூவரிகடுப்பத்து வன்றி மீமிசைத்**

**தன்பல இழிதரும் மருவிநின்**

**கொண்பெருங் கானம் பாடலைக் கறிதே"**[31]

என்று மோசீகீரனார் பாடுகிறார்.

தலைவனும் தலைவியும் தங்கள் காதலுக்கு இல்லத்தார் எதிர்ப்புக் காட்டிய போது வேற்றுருக்கத் தலைமைகளை அழைத்துச் சென்று காதலியின் தாய் துயரை உரைகின்றாள்.

**"நினைத்தொறுங் கவிழுமிடும்பை யெய்துக**

**புலிக் கோட் பிழைத்த கவைக் கோட்டு முதுகலை".**[32]

என்ற ஐங்குநுறூற்று கூறும் கருத்தையே பாரதிதாசன் தனது பாடலில் விளக்குகின்றார்.

**"மகளைப் பிரிந்த என்கண்ணீர் போல**

**மகளைப் பிரிந்தாரும் சிந்தும் கண்ணீர்"**[33]

என்ற பாடல் மகளையும் பிரிந்த தாயின் மூலமாக அமைக்கப் பெற்றுள்ளது.

இயற்கையைப் பாடிய பாரதிதாசன் சங்கப் புலவர்களின் பானியைப் பின்பற்றியே பாடியுள்ளார். இதிலிருந்து பாரதிதாசன் சங்க இலக்கியத்தின் மீது கொண்டபற்றையும் காதலையும் அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களின் இயற்கை மனித வாழ்வின் பாடல்களிலும் அமைந்துள்ளது காலம் சூழலின் காரணமாக பாவேந்தர் புரட்சிக் கவிஞர் சிலக் கருத்துக்களை மட்டும் மாற்றியமைத்து தனது படைப்புகளில் புதுமை சேர்த்துள்ளார் என்பதில் ஐயமில்லை.

**தொழிலாளர்களின் வறுமை நிலை:**

உழைப்பதை மட்டும் வழக்கமாகக் கொண்டுள்ள தொழிலாளிகளின்

நிலைமை மிகவும் வரந்தத்தக்கதாக இரக்கின்றன.ஒரு நாள் வேலைக்குச் சென்றால் அதனால் கிடைக்கின்றனா் ஊதியம் அன்றைய தினத்தில் ஒரு சாண் வயிற்றை நிரப்புவதற்குப் பயன்படுகிறது ஆனால் நாள்தோறும் அவன் செய்கின்றவேலைக்கு ஏற்றக் கூலியினை பெறுவதற்கு முடியாமல் பரிதவிக்கும் சூழல்தான் நிலவுகிறது. குறைந்தக் கூலியினைத்தரும் தான் நிலவுகிறது. குறைந்தக் கூலியினைத் தரும் தன் முதலாளியிடம் எதிர்த்துக் கேள்வி கேட்டால் தன் வேலை பறிபோய் விடும் என்ற உள்ளக்குமுறலோடு வேலை செய்யும் நிலைமை தான் அவன் வாழ்வில் இரக்கின்றன. தோழிலாளியின் வறுமை நிலையினை மிகவும் நுனுக்கமாக குழிந்த ஆடை அணிந்தார்கள் இருகரங்களையும் உடலோடு சேர்த்துப் போர்வையாகப் போர்த்திருந்தனர். கூட்டமாக ஒரு நாளில் ஒரு வேலையின் உணவானகூழினையும் பலர் சேர்நதுக் குடித்தக் காரணத்தினால் மிகவும் பசியோடுக் காணப்பட்டார்கள். மாடு எவ்வாறு உழைக்குமோ அதுபோன்று உழைத்த இம்மனிதர்களுக்கு வாழ்வதற்கு வீடு எதுவுமில்லை இவர்களின் உடலெல்லாம் மெலிந்துக் காணப்படாது என்று கவிதை வரிகளின் மூலம் அறிய முடிகின்றன.

**முடிவுரை:**

பாரதிதாசன் காவியங்களின் வழி தமிழின் பெருமை பேசப் பெறுகின்றது சாதி வேற்றுமை இல்லையென்று சாற்றப்பெறுகின்றது. உண்மையான காதலுக்கு மதிப்பு தரப்பெறுகின்றது. தொழிலாளா் ஏற்றம் காட்டப் பெறுகின்றது. முடியரசின் கொடுமை முரசறையப் படுகிறது. பாரதிதாசன் பெண் உரிமை, பெண் விடுதலை, மற்றும் சமுதாயச் சிந்தனை ஆகியவையும் புலனாகிறது. எங்கும் புரட்சி, எதிலும் புரட்சி என்று காண்பதால் பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞா் என்ற மெய்ப்பாட்டினை மிக நயமாக வெளிப்படுத்தியுள்ள ந. சுப்பு ரெட்டியார்.

சான்றெண் விளக்கம்

இயல் 3

| வ.எண். | நூல் | பக்கம் |
|---|---|---|
| 1. | சஞ்சீவி பர்வதத்தின் சாரல் | 18 |
| 2. | சஞ்சீவி பர்வதத்தின் சாரல் | 23 |
| 3. | புரட்சிக்கவி | 3 |
| 4. | புரட்சிக்கவி | 11 |
| 5. | புரட்சிக்கவி | 43 |
| 6. | புரட்சிக்கவி | 63 |
| 7. | தமிழச்சியின் கத்தி | 4 |
| 8. | தமிழச்சியின் கத்தி | 8 |
| 9. | தமிழச்சியின் கத்தி | 15 |
| 10. | தமிழச்சியின் கத்தி | 36 |
| 11. | தமிழச்சியின் கத்தி | 78 |
| 12. | திருக்குறள் | 111 |
| 13. | திருக்குறள் | 109 |
| 14. | நாலடியார் | 3 |
| 15. | பாரதிதாசன் கவிதை | 85 |
| 16. | குடும்ப விளக்கு | 63 |
| 17. | தமிழிலக்கியம் | 20 |
| 18. | பாரதிதாசன் கவிதை | 107 |
| 19. | தமிழிலக்கியம் | 35 |
| 20. | திருக்குறள் | 111 |
| 21. | திருக்குறள் | 109 |
| 22. | தமிழச்சியின் கத்தி | 4 |
| 23. | தமிழச்சியின் கத்தி | 8 |
| 24. | தமிழச்சியின் கத்தி | 15 |
| 25. | தமிழச்சியின் கத்தி | 36 |
| 26. | தமிழச்சியின் கத்தி | 78 |
| 27. | பாரதிதாசன் கவிதை | 107 |
| 28. | தமிழிலக்கியம் | 35 |
| 29. | திருக்குறள் | 111 |
| 30. | திருக்குறள் | 109 |
| 31. | தமிழச்சியின் கத்தி | 4 |
| 32. | தமிழச்சியின் கத்தி | 8 |
| 33. | திருக்குறள் | 109 |

**முடிவுரை**

பாண்டியன் பரிசு ஒரு மதீப்பீட்டில் ந. சுப்புரெட்டியாரின் "பாண்டியன் பரிசு இத்திட்ட கட்டுரையாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது இதில் சுப்பு ரெட்டியார். ஒரு பெண் தனது கடமையை நிறை வேற்றவும் -தனது உரிமையை நிலைநாட்டவும் மக்களை பாதுகாக்கவும் போராடும் போராட்டத்தினை தெளிவாய் பதிவு செய்கிறார். இது மட்டும் இல்லாமல் பாரதிதாசன் பற்றியும் அவர்செய்து இருந்த பெண்களின் எழுச்சி நிலையையும் அவர்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்தும் நிலையிலும் ஆண்களுக்கு நிகராக பெண்களும் அனைத்து இடங்களிலும் இருக்க வேண்டும் என்றும் பெண்களுக்கும் கல்வி தேவை என்றும் அவர்களுக்கு அடுப்பங்கரை மட்டும் உரிமை என்று கருத கூடாது எனவும்இ குழந்தை திருமணங்கள் தடுக்கப்பட வேண்டும் எனவும் தன் நூல்களில் வழி இச்சமூகத்தில் விதைத்திருந்த நற்சிந்தனைகளை ந. சுப்புரெட்டியார் தனக்கே உரிய தனித்தன்மையுடன் மதிப்பீடு செய்திருக்கிறார் என்றால் மிகையாகாது.

## துணை நூற் பட்டியல்

முதன்மை ஆதாரம் :

| வ.எண். | நூல் | பதிப்பகம் |
|---|---|---|
| 1. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப்பண்பாட்டு நிறுவனம், சென்னை பல்கலைக்கழகக்கட்டிடம். சென்னை-600005. |
| | துணைமை ஆதாரங்கள் | பாரி நிலையம் 59 பிரைவேட், சென்னை-1 |
| 2. | சஞ்சீவி பர்வதத்தின் சாரல் | சாரதா பதிப்பகம், சென்னை-14. |
| 3. | தமிழச்சியின் கத்தி | கௌரா ஏஜென்சீஸ், 4A/186 வெங்கட்ரங்கம் பிள்ளைத்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 |
| 4. | தமிழ் இயக்கம் | பாரதி அச்சகம், ஆப்செட் பிரிண்டர்ஸ், 6A காதிஜிரோடு, மயிலாடுதுறை. |
| 5. | திருத்தொண்டர் புராணம் | திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 522 டி.கே.சாலை ஆழ்வார்பேட்டை, சென்னை-18. |
| 6. | திருக்குறள் | தமிழ்மண் பதிப்பகம் அகமது வணிக வளாகம், 293 திரு.வி.கா. நெடுஞ்சாலை, இராயப்பேட்டை, சென்னை-19. |
| 7. | பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு | தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப்பண்பாட்டு நிறுவனம், சென்னை பல்கலைக்கழகக்கட்டிடம். சென்னை-600005. |




# India
## Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**




**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*




First Paper: *என்ன ஆச்சரியம்?* "Enna Aacharyam !" [1949]

# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21
b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)
c) Bharathiyar University - 2020 (leading to PhD)


ISBN 978-81-945046-4-1

பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
https://archive.org/details/@centenary1916nsr2016
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]